# காலச்சக்கரம்



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 125

தில்லைநாயகப் புலவர் இயற்றிய

# காலச்சக்கரம்

(தெளிவான உரையுடன்)

பதிப்பாசிரியர்

வித்துவான் திரு. அடிகளாசிரியர்.,
முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்,
கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்,

தஞ்சாவூர்.

2007 ] [ விலை : ரூ. 60-00

சக்கரம்-அ

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| நூற்பெயர் | : காலச்சக்கரம் (தெளிவான உரையுடன்) |
| பதிப்பாசிரியர் | வித்துவான் திரு. அடிகளாசிரியர் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 125 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : ஏழாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2007 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 152 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : சோதிடம் |
| விலை | : ரூ. 60 - 00 |

# வெளியீட்டாளர் முகவுரை

உலகப் புகழ்பெற்ற சிறந்த நூல் நிலையங்களுள் ஒன்றாக விளங்கும் தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையம் எண்ணற்ற இலக்கிய நூல்களையும், இலக்கண நூல்களையும், மருத்துவ நூல்களையும் வெயிடுவதுடன் சோதிட நூல்களையும் பழங்கால ஓலைச்சுவடிகளில் இருந்து பல நூல்களையும் பதிப்பித்து வெளியிடுகின்ற மகத்தான பணியினைச் சிறப்புற செய்துவருகிறது.

ஆய கலைகள் அறுபத்து நான்கனுள் காலத்தைப் பற்றி ஆராய்கின்ற நுண்கலை சோதிடக்கலையாகும். பரந்து விரிந்த இக்கலையினை, நுணுகி ஆராய்ந்தறிந்து பிறகு அதை மக்களுக்குக் கூறுவார் ஒரு சிலரே. அவ்வரிசையில் காலச்சக்கரம் எனும் இந்நூலைச் சிறந்தமுறையில் பதிப்பித்தவர் பேராசிரியர் திரு. அடிகளாசிரியர் அவர்கள் ஆவார். இவர் இலக்கணப்புலமையும் சோதிடநூல் புலமையும் ஒருங்கே வாய்க்கப்பெற்றவர். இவர் இந்நூலுக்கு தெளிவான உரை தந்து இந்நூலினைச் சிறப்பாகப் பதிப்பித்துள்ளார். இவர் தன்னுடையபதிப்பாசிரியரின் முன்னுரையில் இந்நூல் குறித்தும், இந்நூலாசிரியர் குறித்தும் பல அரிய செய்திகளைத் தெரிவித்துள்ளார்.

காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் இந்நூலில் பெரிதும் பேசப்படுகிறது. காலச்சக்கரம் என்றால் காலவட்டம் என்று

பொருள். இக்கால வட்டம் வலமாகவும், இடமாகவும் இயங்கி மக்கள், தேவர், பிதிரர்களால் கணக்கிடப்பட்டு அவர்களுக்கு இன்ப துன்பங்களைத் தருவதாகும்.

இந்நூலின் வெளியீட்டுக்குத் தேவையான நிதியுதவியை நல்கிய நடுவண் அரசுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இத்தகைய நூல்களை அரிதின் முயன்று வெளிக்கொணரும் இந்நூலக நிருவாக அதிகாரி மற்றும் வெளியீட்டுமேலாளர் பொறுப்பு வகிக்கும் சைவத் தமிழ்ப்புலவர் திரு. சாமி. சிவஞானம், எம்.ஏ., அவர்களுக்கும், நூலக கணினிப் பிரிவினருக்கும், மற்றும் இந்நூல் நன்முறையில் வெளிவரத் துணைநின்ற ஏனையோருக்கும் என் நன்றி.

**ந. முத்துக்கருப்பன்,** எம். ஏ.,
*மாவட்ட ஆட்சித்தலைவர் (பொ)*
*மற்றும் இயக்குநர்,*
**சரசுவதி மகால் நூலகம்.**

*தஞ்சாவூர்*
*23-7-2006*

# முன்னுரை

## காலச்சக்கரத் திசை

"காலம்" என்னும் சொல்லிற்குக் "கணக்கிடுவது" என்றும், "இயக்குவது" என்றும் இரண்டு பொருள்கள் கூறப்படுகின்றன. சக்கரம் என்பதும் பலபொருள்களை உணர்த்தும் ஒரு சொல்லாகும். இதற்குப் பெருமை, ஒருவகைப் பறவை, தேசம், பிறப்பு, வட்டம், தேருருளை, கடல், மலை என்று பல பொருளிருத்தலை,

**" சக்கரம் பெருமை யோர்புள்**
**தரணியே பிறப்பு வட்டம்**
**மிக்கதே ருருளை யாழி**
**வரையென விளம்பும் எண்பேர் ".**

என்னும் சூடாமணி நிகண்டால் அறிந்துகொள்ளலாம். ஈண்டு காலச்சக்கரம் என்னும் சொல்லில் சக்கரம் என்னும் சொல்லிற்கு மேற்குறிப்பிட்ட பல பொருள்களுள் வட்டம் என்று பொருள் கொள்வதே பொருத்தமாயிருக்கும் என்று கருதுகிறேன். எனவே காலச்சக்கரம் என்றால் காலவட்டம் என்று பொருளாகும்.

**காலவட்டம் இருவகையாகும்:**

இக்காலவட்டம் வலமாகவும் (பிரதட்சணமாகவும் அல்லது சவ்யமாகவும்) இடமாகவும் (அப்பிரதட்சண மாகவும் அல்லது அபசவ்யமாகவும்) இயங்கி, மக்கள், தேவர், பிதிரர்களால் கணக்கிடப்பட்டு, அவர்கட்கு இன்ப துன்பங்களைத் தந்து, அவர்களால் அறியப்பட்டு விளங்குகின்றது.

**வலவோட்டு இடவோட்டு:**

வலமாகவும் இடமாகவும் இயங்குகின்ற கால வட்டத்தை உணர்வதற்குக் கருவியாயிருப்பன அசுவதி முதலிய இருபத்தேழு நாள்களாகும். இந்நாள்கள் வலவோட்டென்றும், இடவோட்டென்றும் பிரிக்கப்பட்டு, அறிஞர்களால் இருவகையாக வழங்கப்படுகின்றன.

இருபத்தேழு நாள்களுள் அசுவதி, பரணி, கார்த்திகை என்னும் இம்மூன்றும் வலவோட்டாகும்; உரோகிணி, மிருகசீரிடம்,திருவாதிரை இம்மூன்றும் இடவோட்டாகும், இம்முறையே மாறி மாறி மும்மூன்றாய்க் கொள்ளின், வலவோட்டு நாள் பதினைந்தாகவும், இடவோட்டு நாள் பன்னிரண்டாகவும் வரும்.

**வலவோட்டு இடவோட்டுள் பிரிவு :**

வலவோட்டுள் அசுவதி முதல் நாளாகும்; பரணி இடைநாளாகும். கார்த்திகை கடை நாளாகும். இடவோட்டுள் உரோகிணி முதல் நாளாகும்; மிருக சீரிடம் இடை நாளகும்; திருவாதிரை கடைநாளாகும்.

இவ்வாறே வலவோட்டு நாள்கள் பதினைந்தினைக் கணக்கிடில், அசுவதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி ஐந்தும் முதல் நாளென்றும்; பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி ஐந்தும் இடைநாளென்றும்; கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி ஐந்தும் கடை நாளென்றும்; இடவோட்டு நாள்கள் பன்னிரண்டனைக் கணக்கிடில் உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் நான்கும் முதல்நாளென்றும்; மிருக சீரிடம், பூரம், அனுடம், அவிட்டம் நான்கும் இடைநாளென்றும்; திருவாதிரை, உத்திரம், கேட்டை,சதயம் நான்கும் கடைநாளென்றும் பகுக்கப்பட்டு வழங்கப்படும்.

**வலவோட்டு, இடவோட்டு நாள்களுக்குத் திசைகொள்ளும் முறை :**

உடுமகா திசையில் முழு நட்சத்திரங்களை வைத்து அசுவதி கேது திசை; பரணி சுக்கிர திசை; கார்த்திகை சூரிய திசை என்று இவ்வாறு திசை கொள்ளப்படும். ஆனால், காலச்சக்கரத்திசையைக் கொள்ளும்பொழுது நட்சத்திரக் கால்களால் திசை கொள்ளப்படும். அதனால் இதற்கு அங்கிசத் திசை என்றும் பெயருண்டு. எவ்வாறெனின், வலவோட்டு நாள்கள் முதல் மூன்றுக்குப் பன்னிரண்டு கால்கள் ஆதலின் மேடத்திலிருந்து மீனம் வரை, வலமாகவும், இடவோட்டு நாள்கள் முதல் மூன்றுக்குப் பன்னிரண்டு கால்கள் ஆதலின் விருச்சிகத்திலிருந்து தனுசு வரை, இடமாகவும் திசை கொள்ளப்படும்.

அஃதாவது, அசுவதி முதற்காலுக்கு மேடச்செவ்வாய்த் திசை, இரண்டாங்காலுக்கு இடபவெள்ளித்திசை, மூன்றாங் காலுக்கு மிதுன புதன் திசை. நான்காங்காலுக்குக் கடகத்திங்கள் திசை, பரணி முதற்காலுக்குச் சிங்க ஞாயிறு திசை, இரண்டாங்காலுக்குக் கன்னிப்புதன் திசை, மூன்றாங் காலுக்குத் துலாவெள்ளித் திசை, கார்த்திகை முதற்காலுக்குத் தனுர்வியாழன் திசை. இரண்டாங்காலுக்கு மகரச் சனித்திசை, மூன்றாங்காலுக்கு மீன வியாழன் திசை என்று வலமாகவும்; இதனைப் போலவே இடவோட்டுள் உரோகிணி, மிருக சீரிடம், திருவாதிரையின் நான்கு கால்களுக்கும் முறையே விருச்சிகத்திலிருந்து தனுசு வரைக்கும் இடமாகவும் திசை கொள்ளப்படும்.

**திசையாண்டுகள் :**

உடுமகா திசையில் கேதுவிற்கு ஏழு; சுக்கிரனுக்கு இருபது என்று இவ்வாறு கொள்கிறோம். ஆனால் காலச்சக்கரத் திசையில் திசையாண்டுகள் செவ்வாயைத் தவிர்த்து ஏனைய கோள்களுக்கு வேறுபட்டு வருகின்றன. காலச்சக்கரத் திசையுள் இராகு கேதுக்கள் இடம்

பெறவில்லை. இராசிகளின் ஆட்சியாளர்களே இடம் பெற்றுள்ளனர். மேடவிருச்சிகச் செவ்வாய்க்கு ஏழு; இடப துலா வெள்ளிக்குப் பதினாறு; மிதுன கன்னிப் புதனுக்கு ஒன்பது; கடகத்திங்களுக்கு இருபத்தொன்று; சிங்க ஞாயிறுக்கு ஐந்து; தனுசு மீன வியாழனுக்குப் பத்து; மகர கும்பச்சனிக்கு நான்கு திசையாண்டுகளாம்.

**சினேந்திர மாலையில் :**

> ஐந்திருபத் தொன்றேழ் அதன்பின்னோற் கொன்பது பத்[து]
> உந்தியலீ ரெட்டுநான் கொருநாள் [கு]-[உந்தும்]
> கதிராதி பாம்பீறாய்க் கட்டுரைத்த கோள்கட்[கு]
> எதிரா வருங்கதிராம் என்.

"சூரியனுக்கு ஐந்து, சந்திரனுக்கு இருபத்தொன்று, செவ்வாய்க்கு ஏழு, புதனுக்கு ஒன்பது, வியாழனுக்குப் பத்து, வெள்ளிக்குப் பதினாறு, சனிக்கு நான்கு, இராகுவிற்கு நான்கு கதிராகும்" என்று கூறப்பட்டிருத்தலை நோக்கினால் கோள்களின் கதிர்கட்கும், காலச்சக்கரத் திசையாண்டுகட்கும் இயைபுண்மை புலப்படுகின்றது.

**திசையில் புத்திகள் கொள்ளும் முறை :**

உடுமகா திசையில் ஒவ்வொரு திசைக்கும் ஒன்பது புத்திகள் உள்ளன. காலச்சக்கரத் திசையிலும் ஒவ்வொரு திசைக்கும் ஒன்பது புத்திகள் உள்ளன. உடுமகாதிசையைக் கொள்ளும்பொழுது அசுவதி நாளிலிருந்து தொடங்கிக் கேது, சுக்கிரன், சூரியன், சந்திரன், செவ்வாய், இராகு, குரு, சனி, புதன் என்னும் இந்த முறையில் அத்திசை கொள்ளப் படுகிறது. புத்திகள் கொள்ளும்பொழுதும் திசைக்குரியவரின் புத்தியை முதலாவதாக வைத்து, மேற்சொன்ன முறையில் ஒன்பது புத்திகளும் கொள்ளப்படுகின்றன. காலச்சக்கரத் திசையானது, அசுவதி முதற்காலிலிருந்து அதாவது மேடச்செவ்வாய்த் திசைக்குள்ள ஒன்பது புத்திகளும் மேடத்திலிருந்தே தொடங்குகிறது.

**இருபத்து நான்கு திசைக்கு மூலம் எட்டுத்திசையின் புத்திகள் :**

வலவோட்டு திசை பன்னிரண்டு, இடவோட்டுத்திசை பன்னிரண்டு ஆகக் காலச்சக்கரத்திசை இருபத்து நான்காகும். இவ்விருபத்து நான்கு திசையுள் வலவோட்டு மேடச் செவ்வாய்த் திசையிலிருந்து விருச்சிகச் செவ்வாய்த் திசை வரையுள்ள எட்டுத்திசைகளுக்கும் புத்தி நடக்கும் முறையைத் தெரிந்துகொண்டால், ஏனைய பதினாறு திசைகளின் புத்தி நடக்கும் முறையை இவ்வெட்டுத் திசையிலிருந்தே தெரிந்துகொள்ளலாம். ஆகையால், வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசையிலிருந்து எட்டுத் திசைகட்குப் புத்தி நடக்கும் முறையை முதலில் அறியத்தொடங்குவோம்.

**புத்திகள் நடக்கும் கதியைப் பற்றிய சில செய்திகள்:**

புத்திகள், வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசையில், மேடச்செவ்வாய்ப் புத்தியிலிருந்து,வலமாக மீன வியாழன் புத்தி வரை செல்லும்; மீன வியாழன் முடிந்ததும் விருச்சிகத்திற்குப் பாய்ந்து, இடமாக நடந்து, தனுசு வரை செல்லும்; தனுசு முடிந்ததும், தனுசிலிருந்து மேடத்திற் பாய்ந்து, முன்போல வலமாக நடந்து, மீனம் வரை செல்லும்.

**வலவோட்டுக் கதி:**

வலவோட்டுத்திசையுள் மீனத்திலிருந்து விருச்சிகமும், தனுசிலிருந்து மேடமும் முறையே வலம் முடிந்து இடத்திற்கும், இடம் முடிந்து வலத்திற்கும் செல்வனவாகிய கதி (பாய்ச்சல்) பேதங்களாம்.

வலவோட்டுத் திசையுள் மேலே சொன்ன இருவகைக் கதிபேதங்களேயன்றி, வேறுவகையான கதிபேதங்களும் புத்திகள்நடக்கும்பொழுது உண்டாகின்றன. அவை புத்திகள் வலமாகச் செல்லும்பொழுது நிகழ்வதில்லை; இடமாகச்

செல்லும்பொழுது மட்டும் கடக சிங்கங்களிடையே நிகழ்கின்றன.

வலவோட்டுள் மேடத்திலிருந்து புத்திகள் வலமாக நடக்கும்பொழுது, கடக சிங்கங்கள் இடையே வந்தால், முன்னே கடகமும், அடுத்து சிங்கமும் முறைப்படி ஆற்று நீர்க்கதியாகவே செல்லும்; ஆனால் வலவோட்டுள் விருச்சிகத்திலிருந்து இடமாக நடக்கும்பொழுது, சிங்கமும் கடகமும் இடையேவரின், கடக சிங்கமாகவே நடக்கும்; அஃதாவது, கன்னியிலிருந்து கடகமும், கடகமிருந்து சிங்கமும் சிங்கமிருந்து மிதுனமுமாய் நடக்கும்; இதனால், வலவோட்டுத்திசையுள் புத்திகள் இடமாகச் செல்லும் பொழுது கடகச் சிங்கச் சந்திப்பால் மூன்று கதிபேதங்கள் உண்டாகின்றன. முன்னே சொன்ன இரண்டுவகைக் கதிபேதங்களுடன் இந்த மூன்றையும் கூட்ட ஐந்துவகைக் கதிபேதங்கள் வலவோட்டுத் திசையுள் உண்டாகின்றன.

**இடவோட்டுக்கதி:**

இடவோட்டுத் திசையுள் இந்த ஐந்து கதிபேதங்களும் மாறி நடக்கும். அஃதாவது, வலவோட்டுத் திசையுள் மீனத்திலிருந்து விருச்சிகம் பாய்வது, இடவோட்டுள் விருச்சிகத்தில் இருந்து மீனத்திற் பாய்வதாகவும், வலவோட்டுள் தனுசிலிருந்து மேடம் பாய்வது, இடவோட்டுள் மேடமிருந்து தனுசிற் பாய்வதாகும் வலவோட்டுள்கன்னியிலிருந்து கடகம், கடகமிருந்து சிங்கம், சிங்கமிருந்து கடகம் கடகமிருந்து கன்னியாகவும் மாறி நடக்கும். எனவே, வலவோட்டு, இடவோட்டு என்னும் இரண்டிலும், முறையாக (ஒன்றன்பின் ஒன்றாக) நடக்கும் ஆற்றுநீர்க்கதியும், வலவோட்டுக் கதிபேதங்கள்ஐந்தும் ஆகப் பதினாறு கதிகளாகப் புத்திகள் நடக்கும் என்க. மேலே கூறிய இவற்றை யெல்லாங் கருத்தில் வைத்துக்கொண்டு முதன்மையாகிய வலவோட்டுத் திசை எட்டிற்குப் புத்திகள் நடக்கும் முறையை அறியத்தொடங்குவோம்.

### முதலாவது

**வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசையில் புத்திகள் நடக்கும் முறை:**

வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசைக்குள்ள ஒன்பது புத்திகளும், மேடச்செவ்வாய்ப் புத்தியிலிருந்து வலமாகத் தொடங்கிய தனுசு வியாழன் புத்திவரை நடந்து முடியும். இத்திசையில் புத்திகளெல்லாம் ஆற்றுநீர்க் கதியாகவே செல்லுகின்றன.

### இரண்டாவது

**இடபவெள்ளித் திசையுள் புத்திகள் நடக்கும் முறை:**

மேல்திசையில் தனுசுவரை புத்திகள் நடந்து முடிந்து விட்டன. அடுத்த இடபவெள்ளித் திசைக்குப் புத்திகள், மகரச்சனி, கும்பச்சனி, மீனவியாழன் வரை, வலமாக மூன்று புத்திகள் நடந்து, மீனத்திலிருந்து விருச்சிகத்திற் பாய்ந்து இடமாக நடக்கத் தொடங்கி விருச்சிகத்திலிருந்து துலாமும், துலாத்திலிருந்து கன்னியும், ஆற்றுநீர்க் கதியாகவே இயங்கிக் கன்னியிலிருந்து கடகம், கடமிருந்து சிங்கம், சிங்கமிருந்து மிதுனத்திற் பாய்ந்து நடந்து, மிதுன புதன் புத்தியுடன் இத்திசை முடிவுபெறும். இத்திசையில் புத்தியின் கதிவிகற்பங்கள் நான்கு நிகழ்ந்துள்ளன.

### மூன்றாவது

**வலவோட்டு மிதுன புதன் திசைக்குப் புத்திமுறை:**

மேல்திசையில், மிதுன புதன் வரையில் புத்திகள் நடந்து முடிந்தன. அடுத்த மிதுன புதன் திசைக்குப் புத்திகள் இடப வெள்ளி, மேடச்செவ்வாய், மீன வியாழன், கும்பச்சனி, மகரச்சனி, தனுர் வியாழன் வரை ஆறு புத்திகள் இடமாய்

நடந்து, பின் தனுசிலிருந்து மேடத்திற் பாய்ந்து வலமாய் நடக்கத் தொடங்கி மேடச்செவ்வாய், இடபவெள்ளி, மிதுன புதனுடன் ஒன்பது புத்திகளும் நடந்து முடியும். இத்திசையுள் தனுசிலிருந்து மேடத்திற் பாய்ந்தது மட்டும் கதிவிகற்பமாம், ஏனைய புத்திகளெல்லாம் ஆற்றுநீர்க் கதியாகவே நடக்கின்றன.

## நான்காவது

### வலவோட்டுக் கடகத்திங்கள் திசைக்குப் புத்திமுறை:

மேல்திசையில் மிதுனபுதன் புத்தியுடன் புத்திகள் நடந்து முடிந்தன. அடுத்தக் கடகத்திங்கள் திசைக்குக் கடகத் திங்கள். சிங்க ஞாயிறு, கன்னிப்புதன், துலாவெள்ளி, விருச்சிகச் செவ்வாய், தனுர் வியாழன், மகரச்சனி, கும்பச்சனி, மீன வியாழன் என்று ஒன்பது புத்திகளும் ஆற்றுநீர்க் கதியாகவே நடந்து முடியும். இதிற் கதிவிகற்பங்கள் இல்லை.

## ஐந்தாவது

### வலவோட்டுச் சிங்க ஞாயிறு திசைக்குப் புத்திமுறை:

மேல்திசையில் மீன வியாழன் புத்தி வரை ஒன்பது புத்திகளும் நடந்து முடிந்தன. அடுத்துச் சிங்க ஞாயிறு திசைக்கு விருச்சிகத்திலிருந்து இடமாகப் புத்திகள் நடக்கத்தொடங்கி விருச்சிகச் செவ்வாய், துலாவெள்ளி, கன்னிப்புதன் வரை ஆற்றுநீர்க் கதியாய் நடந்து, அடுத்துக் கன்னியிலிருந்து கடகத்திலும், கடகத்திலிருந்து சிங்கத்திலும், சிங்கத்திலிருந்து மிதுனத்திலும் கதி விகற்பமாய் நடந்து, பின் இடப வெள்ளி, மேடச்செவ்வாய், மீன வியாழன் வரை ஆற்றுநீர்க் கதியாகப் புத்திகள் நடந்துமுடியும்.

## ஆறாவது

### வலவோட்டுக் கன்னிப்புதன் திசைக்குப் புத்திமுறை:

மேல் திசையில் மீன வியாழன் புத்தி வரை ஒன்பது புத்திகளும் நடந்து முடிந்தன. அடுத்துக் கன்னிப் புதன் திசைக்குக் கும்பச்சனி, மகரச்சனி, தனுர் வியாழன் வரை இடமாய் நடந்து, பின்னர் தனுசிலிருந்து மேடத்திற் பாய்ந்து, வலமாக நடக்கத் தொடங்கி மேடச்செவ்வாய், இடபவெள்ளி, மிதுன புதன், கடகத்திங்கள், சிங்க ஞாயிறு, கன்னிப்புதன், என ஒன்பது புத்திகளும் நடந்து முடியும். இதில் தனுசிலிருந்து மேடத்திற் பாய்ந்தது மட்டும் கதி விகற்பமாம். ஏனையவெல்லாம் ஆற்றுநீர்க் கதிகளேயாம்.

## ஏழாவது

### வலவோட்டுத் துலாவெள்ளித் திசைக்குப் புத்திமுறை:

மேல்திசையில் கன்னிப்புதன் வரை புத்திகள் நடந்து முடிந்தன. அடுத்துத் துலா வெள்ளித் திசைக்குத் துலா வெள்ளி, விருச்சிகச் செவ்வாய், தனுர் வியாழன், மகரச்சனி, கும்பச்சனி, மீன வியாழன் வரை வலமாக நடந்து, பின்னர் மீனத்திலிருந்து விருச்சிகத்திற்குப் பாய்ந்து இடமாக நடக்கத் தொடங்கி விருச்சிகச் செவ்வாய், துலாவெள்ளி, கன்னிப்புதன் வரை ஒன்பது புத்திகளும் நடந்து முடியும்.

## எட்டாவது

### வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசைக்குப் புத்திமுறை:

மேல்திசையில் கன்னிப்புதன் வரை ஒன்பது புத்திகளும் நடந்து முடிந்தன. அடுத்து விருச்சிகச் செவ்வாய்த் திசைக்குக் கன்னிப்புதனிலிருந்து இடமாகத் தொடங்கிக் கதிவிகற்ப மாய்க் கடகத்திற் பாய்ந்து, கடகத்திலிருந்து சிங்கத்திற் புரண்டு, சிங்கத்திலிருந்து மிதுனத்திற் பாய்ந்து பின்

ஆற்றுநீர்க்கதியாய் இடபவெள்ளி, மேடச்செவ்வாய், மீன வியாழன், கும்பச்சனி, மகரச்சனி, தனுர்வியாழன் வரை ஒன்பது புத்திகளும் நடந்து முடியும். இதில் மூன்று கதி விகற்பங்களாம்.

**வலவோட்டுள் ஏனைய நான்கு திசைகளுக்கும் புத்திகள் நடக்கும் முறை :**

மேலே வலவோட்டுத் திசைகளுள் மேடச்செவ்வாயிலிருந்து விருச்சிகச் செவ்வாய்த் திசை வரை புத்திகள் நடக்கும் முறையை அறிந்துகொண்டோம். இனி ஏனைய நான்கு திசைகளுக்கும் புத்திகள் நடக்கும் முறை எவ்வாறென்றால்? மேடச்செவ்வாய்த் திசையின் புத்திமுறை தனுர்வியாழன் திசைக்கும், இடபவெள்ளித் திசையின் புத்திமுறை மகரச்சனித் திசைக்கும், மிதுனப் புதன் திசையின் புத்திமுறை கும்பச்சனித் திசைக்கும், கடகத்திங்கள் திசையின் புத்திமுறை மீன வியாழன் திசைக்கும் உரியனவாம்.

**இடவோட்டுத் திசை பன்னிரண்டிற்கும் புத்தி கொள்ளும் முறை :**

வலவோட்டுத் திசைகட்குப் புத்தி நடக்கும் முறையை அறிந்துகொண்டால், அவற்றைத் தலைகீழாய்க் கொள்வதே இடவோட்டுத் திசைகட்குப் புத்தி நடக்கும் முறையாகும். எவ்வாறெனில்? வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசைக்குக் கடகம் உடலிராசியாகும். தனுசு உயிரிராசியாகும்; புத்தி, உடலிராசியாகிய கடகத்திலிருந்து தொடங்கி கடகத்திங்கள், சிங்கஞாயிறு, மிதுன புதன், இடபவெள்ளி, மேடச்செவ்வாய், மீன வியாழன், கும்பச்சனி, மகரச்சனி, உயிராகிய தனுர்வியாழன் என்று ஒன்பதும் முறையாக நடக்கும். ஆனால் இடவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசைக்கு மேற்கூறிய முறையைத் தலைகீழாய்க் கொண்டால் முதன் முதல் தொடங்கும் உடலிராசிப் புத்தி தனுர் வியாழனாகித் தனுர் வியாழன், மகரச்சனி, கும்பச்சனி, மீன வியாழன், மேடச்செவ்வாய் இடபவெள்ளி, மிதுனப் புதன்,

சிங்க ஞாயிறு, உயிரிராசிப் புத்தியாகிய கடகத்திங்கள் என்று இவ்வாறு நடந்து முடியும்.

இதனைப்போலவே வலவோட்டுத் துலாவெள்ளித் திசையின் புத்தி முறையை மாறாகக் கொண்டதே இடவோட்டுத் துலாவெள்ளித் திசைக்கும், வலவோட்டுக் கன்னிப்புதன் திசையின் புத்திமுறையை மாறாகக் கொண்டதே இடவோட்டுச் சிங்கஞாயிறு திசைக்கும், வலவோட்டுச் சிங்க ஞாயிறு திசையின் புத்தி முறையை மாறாகக் கொண்டதே இடவோட்டுச் சிங்கஞாயிறு திசைக்கும், வலவோட்டுக் கடகத்திங்கள் திசையின் புத்திமுறையை மாறாகக்கொண்டதே இடவோட்டு மிதுனப்புதன் திசைக்கும், வலவோட்டு இடபவெள்ளித் திசையின் புத்தி முறையை மாறாகக் கொண்டதே இடவோட்டு இடபவெள்ளித் திசைக்கும், வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசையின் புத்தி முறையை மாறாகக் கொண்டதே இடவோட்டு மேடச்செவ்வாய்த் திசைக்கும் புத்தி நடக்கும் முறையாகும். இடவோட்டுள் இவ்வாறு எட்டுத்திசைக்குப் புத்தி நடக்கும் முறையை நடந்து கொண்டால் ஏனைய நான்கற்கும் இடவோட்டு விருச்சிகச் செவ்வாய்த்திசையின் புத்தி முறையைப்போல மீனவியாழன் திசைக்கும் இடவோட்டுத் துலாவெள்ளித் திசையின் புத்தி முறையைப் போலக் கும்பச்சனித்திசைக்கும், இடவோட்டுக் கன்னிப்புதன் திசையின் புத்தி முறையைப் போல மகரச்சனித்திசைக்கும், இடவோட்டுச் சிங்க ஞாயிறு திசையின் புத்தி முறையைப் போலத் தனுர்வியாழன் திசைக்கும் புத்தி நடக்கும் முறையை அறிந்துகொள்ள வேண்டும்.

**காலச்சக்கரத்திசையுள் உடற்புத்தி உயிர்ப்புத்தி என்பன:**

ஒரு திசைக்குப் புத்தி தொடங்கும் முதலிராசியே உடலிராசியாகும். கடைசிப் புத்தியின் இராசியே உயிரி

ராசியாகும் வலவோட்டுத் திசைகளின் புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதே இடவோட்டுத் திசைகளின் புத்தி முறையாதலின் வலவோட்டுள் உடலாகவும், உயிராகவும் இருப்பவை இடவோட்டுள் உயிராகவும் உடலாகவும் மாறி விளங்கும் என்க. இக்கருத்தினை,

**செப்புவல வோட்டிற்குச் சேர்தோட லக்கினம்மெய்**
**ஒப்பரிய சீவன்விடும் ஓரையே – தப்புமிட**
**வோட்டிற்கு மாறா யுரையிவற்றி லேநல்லோர்**
**கூட்டு முறின் நற்பலனே கூறு.** **(1131)**

என்னுஞ் சாதகாலங்காரப் பாட்டால் அறிந்து கொள்ளலாம்.

**பரமாயுள் என்னும் முழுயாண்டு :**

உடுமகாதிசையில் ஒவ்வொரு திசைக்கும் பரமாயுள் நூற்றிருபதாகும். பரமாயுள் என்பது திசையுள் புத்திக் குரியவரின் திசையாண்டுகளை எல்லாம் ஒன்றாகக் கூட்டிய தொகையாகும். காலச்சக்கரத் திசையுள் திசைதோறும் பரமாயுள் வேறுபட்டு வரும். அதனை நான்கு வகைப் படுத்திக் கொள்ளலாம். மேடச் சிங்கத் தனுசில் தொடங்கும் திசைக்கு நூறும். இடபக் கன்னி மகரத்தில் தொடங்கும் திசைக்கு எண்பத்தைந்தும், மிதுனத் துலா கும்பத்தில் தொடங்குந் திசைக்கு எண்பத்து மூன்றும், கடக விருச்சிக மீனத்தில் தொடங்குந் திசைக்கு எண்பத்தாறும் பரமாயுள் என்னும் முழுயாண்டுகளாகும்.

**பரமாயுளில் பயன்:**

உடுமகா திசையிலும், காலச்சக்கரத் திசையிலும், திசையுள் புத்திகளின் காலத்தைப் பிரித்தறியப் பரமாயுள் பயன்படுகிறது. திசைக்குரியவரின் திசையாண்டின் எண்ணையும், புத்திக்குரியவரின் திசையாண்டின்

எண்ணையும் பெருக்கிப் பரமாயுளாள் வகுக்க வந்த ஈவு புத்தியாண்டாகவும் மீதியைப் பன்னிரண்டு, முப்பது, அறுபது என்னுந் தொகையால் முறையே பெருக்கிப் பரமாயுளால் வகுக்க வந்த ஈவு முறையே புத்தியின் திங்கள், நாள், நாழிகை, விநாடியாகவும் கொள்க.

**புத்திகளின் கதிகள் :**

மேலே திசையுள் புத்திகள் நடக்கும்பொழுது வலவோட்டுள் ஐந்து கதியும், இடவோட்டுள் ஐந்து கதியும், இரண்டிற்கும் பொதுவான ஆற்றுநீர்க்கதியும் என்று, பதினொரு கதிகள் உள்ளன என்று கூறினோம். அவற்றுள் ஆற்றுநீர்க்கதி மட்டும் இயல்பான கதியாகும். ஏனைய பத்தும் விகற்ப கதியாகும்.

**கதிகளுக்குப் பெயரிடுதலைப் பற்றி :**

வலவோட்டுக் கதிவிகற்பம் ஐந்தென்று மேலே கூறினோம்.அவ்வைந்துள் மீனத்திலிருந்து விருச்சிகத்திற் பாய்வதும், தனுசிலிருந்து மேடம் பாய்வதும் சிங்காவலோகன கதி (சிங்கநோக்குக் கதி) என்றும், வலவோட்டுள் கன்னியிலிருந்து கடகம் பாய்வது "தவளைக்கதி" என்றும், கடகத்திலிருந்து சிங்கம் புரள்வது "பாம்புக்கதி" யென்றும், சிங்கமிருந்து மிதுனம் பாய்வது "கோழிக்கதி" என்றும் சூடாமணி உள்ளமுடையான் 355-ஆம் பாட்டின் உரை கூறுகின்றது. இடவோட்டுக்கதி விகற்பம் ஐந்தில், விருச்சிகத்திலிருந்து மீனத்திற் பாய்வதும்,மேடத்திலிருந்து தனுசிற் பாய்வதும் "குதிரைக்கதி" என்றும், மிதுனமிருந்து சிங்கம் பாய்வது கோழிக்கதியென்றும், சிங்கமிருந்து, கடகம் புரளுதல் மயிலின் கதியென்றும், கடகமிருந்து கன்னியிற் பாய்வது தவளைக்கதி என்றும் மேற்படி உரை கூறுகின்றது. எனவே இயல்பான ஆற்றுநீர்க் கதியும் , வலவோட்டுள்

விகற்பமான சிங்காவலோகன கதியும் இடவோட்டுள் இதற்கு எதிரான குதிரைக்கதியும், வலவோட்டிற்கும், இட வோட்டிற்கும் பொதுவான தவளைக்கதியும், இடவோட்டிற்கே உரிய மயிலின் கதியும் என ஏழு கதிகள் காலச்சக்கரத் திசைப்புத்திகளில் உண்டாகின்றன.

இதனை,

அரிதான காலச்சக்கரத் திசைப்புத்தி தாமும்
அநேககதி யாய்நடக்கும்; அதிற்சிறிது சொல்வாம்;
துரிதமார் நீர்க்கதியாம் துரகத்தின் கதியும்
சொல்லரிய சிங்காவ லோகனத்தின் கதியும்
பரிவாங்குக் குடகதியும் மயூரத்தின் கதியும்
பகர்தவளைக் கதியும்பாம் புக்கதியும் என்றே
விரிவுறுமிவ் வேழுகதி தம்மில்வரு பலனும்
விளம்புசக்ரத் திசைப்புத்திப் பலன்களும்நாம் சொல்வாம் (6)

என்னும் இந்நூற்பாட்டால் அறிந்துகொள்ளலாம்.

**கருத்து வேறுபாடு :**

பலதீபிகையில் கதிகள் நான்காகவே கூறப்பட்டுள்ளன. சில நூல்களில் மாறுபாடாகவும் சொல்லப்பட்டுள்ளன. அறிஞர் ஆராய்ந்து கொள்க.



# நூலாசிரியர் வரலாறு

காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் என்னும் இந்நூலை இயற்றிய ஆசிரியர் பெயர் தில்லை நாயகப் புலவர் என்பதாகும். இவர் இயற்றிய நூல்கள் சாதக சிந்தாமணி, மகாதிசைப்புசிப்பு, அட்டகவர்க்கம், காலச்சக்கரத் திசைப்புத்தி பலன், யோகமஞ்சரி என்னும் ஐந்து நூல்களாகும். இவர் இந்நூல்களேயன்றி பெண் சாதகம், வியோநி சாதகம் என்னும் இரண்டு சிறு நூல்களையும் இயற்றினார் என்பர். அதற்குத் தக்க சான்றில்லை.

**இவர் பிறந்த நாடும், ஊரும் :**

தமிழிலக்கிய வரலாற்றினை எழுதிய திரு. கா.சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவர் வரிசையில் திருவானைக்கா தில்லைநாயகச் சோதிடர் என்பவர் சாதக சிந்தாமணி என்னும் சோதிட நூலை இயற்றினார் என்று எழுதியுள்ளார். தில்லைநாயகர் திருவானைக்கா என்னும் பதியிலே பிறந்தார் என்பதற்குச் சான்றாக, அவர் இயற்றிய சாதகசிந்தாமணியில் உபாசனா தெய்வத்தின் வணக்கமாகக் கூறிய பாடலில்,

> **அம்புவனப் பெரியோர்பால் சாதகசிந்**
> **தாமணியென் றடியேன் சொல்லச்**
> **சம்புவன நாதர்பங்கில் அகிலாண்ட**
> **தேவியிவர் சரணம் காப்பாம்**

என்று சம்புவன நாதரையும், அகிலாண்ட தேவியையும் துதித்திருப்பதால், இப்புலவர் திருவானைக்காவில் பிறந்தவராக இருக்கலாம் என்று அவர் கருதினார் போலும்.

ஆனால் காலச்சக்கரத் திசைப்புத்திப் பலன் என்னும் இவர் இயற்றிய நூலின் சிறப்புப் பாயிரத்தில்,

அருணெறி தழைக்குந் தொண்டைநன் னாட்டில்
அணிதிகழ் நந்திமா நகர்வாழ்
இருநிதி யனையான் அருந்தவ னாதன்
இசைந்தருள் தில்லைநா யகனே

என வருவது கொண்டு, இவர் தொண்டை நாட்டில் நந்திமா நகரில் (நந்திபுரத்தில்) பிறந்தவர் என்பது புலனாகின்றது.

**குலமும், தந்தையும் பிறவும் :**

இப்புலவர் பெருமான் வேளாளர் குலத்திலே பிறந்தவர் என்பதற்குச் சான்று, சாதக சிந்தாமணியில் உள்ள "காராளன்" என்று தொடங்கும் சிறப்புப் பாயிரப் பாட்டாகும். இவருக்குத் தில்லை நாயகவேள் என்று பெயரிருப்பதும் (அட்டக வர்க்கச் சிறப்புப் பாயிரம்) இக்கருத்தை வலியுறுத்தும்.

இப்புலவர் பெருமானின் தந்தையார் பெயர் அருந்தவநாதன் என்பது. மேற்குறிப்பிட்ட பாயிரப் பாடல்களால் புலனாகின்றது. இவர் சம்புவன நாதரையும் அகிலாண்டேஸ்வரியையும் உபாசனா தெய்வமாகக் கொண்டு வணங்கிவரினும், சாதக சிந்தாமணிப் பாயிரப் பாடல்களில் "பெரும்பற்றப் புலியூரான் கனகசபை தன்னைப் போற்றும் ஏராளன்" என்றும், "முல்லைநாயகன் விரிஞ்சன் அடிமுடியுந் தேடரிய முதல்வன் முன்னோன்; தொல்லைநா யகன்வனஞ்செய் சிவகாம வல்லிபதம் தொழுது போற்றித்; தில்லைநா யகனடியேன் சாதசிந் தாமணியைச் செப்பல் உற்றேன்" என்றும், வருவனவற்றைக் கருதினால் இவர் பிறந்தகுடி தில்லைப் பெருமானிடத்தே பேரன்புடைய குடியென்பதும், அதனாலே இவர்க்குத் தில்லைநாயகன் என்று பெயர் வைக்கப்பட்டதென்பதும், இப்புலவரும் தில்லைப் பெருமானிடத்தும் சிவகாம வல்லியினிடத்தும் பேரன்புடையவராய் இருந்தனர் என்பதும் புலனாகின்றன.

**இவருடைய ஆசிரியர் இருவர்:**

சாதக சிந்தாமணியில் "உண்ணிறைந்த விருணீக்கி" என்னும் பாயிரப் பாட்டால் இவர்க்கு எண்ணும் எழுத்தும் அறிவித்த ஆசிரியர் அம்மையப்ப பூபாலர் என்பதும், ஞானாசிரியராய் விளங்கியவர் வேங்கடாசலசாமி என்பதும் தெரிகின்றன.

**இவர் தமிழிலே சோதிடநூல் இயற்றுவதற்கு உதவி செய்த வடமொழிப் பேரறிஞர்:**

நம் புலவர் தமிழிலே நல்ல பயிற்சியுடையவர்; வடமொழியறிவையும் இவர் பெற்றிருக்கலாம்; ஆனல் வடமொழியில் உள்ள சோதிட நூல்களை மொழிபெயர்த்துத் தந்து இவர்க்குப் பேருதவி புரிந்த பெரியார் அந்தணர் குலத்திலே வடமர் என்னும் குடியிற்பிறந்த ஈசுரையர் புதல்வர் அண்ணா சாஸ்திரிகள் என்பவராவார். இச்செய்தி நறையிருக்கும் என்ற சாதக சிந்தாமணிப் பாட்டால் தெரிகின்றது.

***காலச்சக்கரம் அல்லது காலச்சக்கரத் திசைப்புத்தி பலன்:***

காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் என்னும் இந்நூல் பாயிரம், பொது, வலவோட்டு, இடவோட்டு என்று நான்கு பகுப்புக்களைப் பெற்றிருக்கின்றது. பாயிரம் இரண்டு பாட்டாகும்; பொதுவும், வலவோட்டும், இடவோட்டும் சேர்ந்து நூற்றிருபத்தெட்டுப் பாட்டாகும்; ஆகப்பாடல்கள் நூற்றுமுப்பது ஆகின்றன. பொது என்னும் பகுதியில் வலவோட்டும், இடவோட்டும், திசை நடக்கும் முறைகளும், காலச்சக்கரத் திசையாண்டும், திசைகளின் பரமாயுளும், திசையுள் புத்திகள் நடக்கும் கதிகளும், புத்திகளின் நடப்பினை அறிவிக்கும் வாக்கியங்களும் கூறப்பட்டுள்ளன.

வலவோட்டில் வலவோட்டுத்திசை பன்னிரண்டிற்கும் புத்திகளை முறையாகக் கூறி, அவற்றிற்குப் பலன்கள் கூறப்பட்டுள்ளன. இடவோட்டில் இடவோட்டுத் திசை பன்னிரண்டிற்கும் புத்திகளை முறையாகக் கூறிப் பலன்கள் கூறப்பட்டுள்ளன. வலவோட்டிலும், இடவோட்டிலும் திசைக்கு மட்டும் உள்ள பாடல்கள் அந்தாதியாகக் கூறப்பட்டுள்ளன. காலச்சக்கரத் திசையின் புத்தி பலன் அறிவதற்கு இந்நூல் மிகவும் பயன்படும் என்க.

## நன்றி

தஞ்சை சரபோசி மன்னர் சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் காலச்சக்கர ஏட்டுச்சுவடிகள் இரண்டு இருக்கின்றன. அதனை ஆராய்ந்து செப்பஞ் செய்து பதிப்பித்துத் தரும்படி, அந்நூல் நிலையக் கௌரவக் காரியதரிசியும் பேரறிஞருமாகிய ஸ்ரீ O. A. நாராயண ஸ்வாமி ஐயர் B.A.B.L., அவர்கள் எனக்கு ஆணையிட்டனர், யான் அச்சுவடிகளை நன்கு ஆராய்ந்து பாடல்களை யெல்லாம் யாப்பியல் முறைப்படி எழுதி, எழுதுவோரால் நேர்ந்த பிழைகளைக் களைந்து, செவ்வை செய்தேன். சரஸ்வதி மஹால் சுவடிகளில் ஒவ்வொரு திசையின் புத்திக்குரிய காலங்கள் தனியாகவே எழுதப் பட்டிருந்தன. புத்திக்குரிய பலன்கள் சிற்சில திசைக்கு மட்டும் உரைநடையில் எழுதப்பட்டிருந்தன. இவற்றை யெல்லாம் கருவியாக வைத்துக்கொண்டு இந்நூலுக்குத் தெளிவான உரை எழுதிச் சேர்த்துள்ளேன். பாயிரத்தில் உள்ள காராருங் குழலுமையாள் என்ற காப்பு பாட்டும், பொதுவிலுள்ள பத்துப்பாடல்களும் சரஸ்வதி மகால் சுவடியில் இல்லை. என்னிடமிருந்த பிரதியில் அவையிருந்தமையால் அவற்றையும் ஒன்றாகச் சேர்த்து, நூலை முழுவடிவமாக அமைத்துக்கொண்டேன். இந்நூலை மிக முயன்று செப்பஞ்செய்து சரசுவதி மகால் வழியாகத் தமிழுலகத்திற்குத் தருகின்றேன்.

சோதிடம் என்பது காலத்தைப் பற்றி ஆராய்கின்ற நுண்கலையாகும். இக்கலையுணர்ச்சி அறிஞர்கட்கு மிக இன்றியமையாததாகும். தமிழ்நாட்டிலே சோதிடத்தினாற் பிழைப்பவர் பலருள்ளனர். அப்பலரும் சோதிட நூல்களை நன்கு படிக்கவிரும்புவதில்லை, சோதிட நூல்களைப் படிக்க விரும்புஞ்சிலர்க்கும் நன்கு ஆராய்ந்து பதிப்பிக்கப்பட்ட தமிழ்ச் சோதிட நூல்கள் கிடைப்பதில்லை. தஞ்சாவூர் சரசுவதி மகால் நூல்நிலையக் கௌரவக் காரியதரிசியாகிய ஸ்ரீ O. A. நாராயணஸ்வாமி ஐயர், B.A.,B.L., அவர்களும், மேற்படி நூல்நிலையத் தலைவர் ஸ்ரீ கோபால ஐயங்கார், B.A.,BL., அவர்களும் இக்குறையை உணர்ந்து அதனைப் போக்க வேண்டிப் பல தமிழ்ச்சோதிட நூல்களை ஆராய்ந்து, சரசுவதி மகால் நூல்நிலையத்தின் வழியாய்ப் பதிப்பிக்கக் கருதிக்கொண்டுள்ளனர். அவர்கள் கருத்தின் பயனாகவே காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் என்னும் இந்நூல் வெளிவருகின்றது. இத்தகையத் தொண்டிற்குக் காரணமாகவிருக்கும் அவ்விருவரும் நீண்டகாலம் வாழ்ந்திருக்கவேண்டும் என்று வாழ்த்துக் கூறி, என் ஆழ்ந்த நன்றியை அவர்கட்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,

தஞ்சாவூர்,
*29-4-1968.*

**திரு. அடிகளாசிரியன்,**
*தமிழ்ப் பேராசிரியன்,*
**கரந்தைப் புலவர் கல்லூரி,**



# பொருளடக்கம்





உ

இறைவன் துணை

தொண்டைநாட்டு, நந்திமாநகர்

**தில்லை நாயகப் புலவர்**

இயற்றிய

# காலச்சக்கரத் திசைப்புத்தி பலன்

## பாயிரம்

### காப்பு

காராரும் குழலுமையாள் வணங்கியே கேட்பக்
கங்கைவார் சடையண்ணல் கருத்துகந்து சொன்னச்
சீராரும் காலச்சக்ரந் தனைத்தமிழால் செப்பச்
சிற்பரமாய்த் தற்பரமாய்ச் சிவஞானப் பொருளாய்
ஆராலும் அறியவொண்ணா அருமறைக்கு முதலாய்
அழகியசிற் றம்பலத்துள் ஆனந்த நடஞ்செய்
ஏராரும் பேரொளியின் திருவடிவாய் வந்தோன்
ஏரம்ப கணபதிதன் இணையடியைத் துதிப்பாம். (1)

**(இதன் பொருள்:)** கருமுகில் போன்ற கூந்தலையுடைய உமாதேவியார், உலக நலங்கருதி வணங்கிக் கேட்ப; கங்கையைச் சூடிய நீண்ட சடையைப் பெற்றிருக்கும் பரமேசுரன் மனம் விரும்பிக் கூறிய சிறப்புப் பொருந்தும் காலச்சக்கரத் திசையைத் தமிழ் மொழியில் மொழி பெயர்த்துக் கூறவேண்டி, முதற்கண் காப்பாக ஏரம்ப கணபதியினுடைய இரண்டு திருவடிகளைப் புகழ்ந்து போற்றுவோம்.

---

ஏரம்பன் - சிவனுக்கு அண்மையில் இருப்பவன் அல்லது அடியாரை வளர்ப்பவன் என்று பொருள்

எத்தகைய கணபதி எனின்? ஞான வடிவான மேலான பொருளாய்த் 'தத்' என்னும் மகா வாக்கியப் பதத்தால் குறிக்கப்படும் உயர்பொருளாய், பதி ஞானமாகிய சிவஞானத்தால் உணர்த்தப்படும் பொருளாய், எத்தகையோராலும் அறியமுடியாத அரிய வேதத்திற்கு முதலாய், அழகிய திருச்சிற்றம்பலத்திலே ஆனந்த நடனம் செய்கின்ற அழகு பொருந்தும் பேரொளி வடிவினனாகிய பரமேசுரனுடைய திருவடிவாய் இடையூறுகளை நீக்குதற்கென்றே தோன்றிய ஏரம்பன் என்னும் மகாகணபதி (என்றவாறு)

**சிறப்புப் பாயிரம்**

திருவுடன் பிறந்த குழவிவெண் டிங்கட்
செஞ்சடைக் கடவுளம் பிகைக்கே
பொருள்விரித் துரைத்த காலசக் கரத்தைப்
புதியசெந் தமிழினாற் செய்தான்
அருணெறி தழைக்குந் தொண்டைநன் னாட்டின்
அணிதிகழ் நந்திமா நகர்வாழ்
இருநிதி யனையான் அருந்தவ நாதன்
இசைத்தருள் தில்லைநா யகனே. (2)

(இ-ள்.) திருவருள் நெறி தழைத்தோங்கும் திருத்தொண்டை நன்னாட்டிலே அழகு விளங்கும் நந்திமா நகரத்திலே வாழ்ந்திருப்பவனும், சங்கநிதி, பதுமநிதி என்னும் இரண்டு நிதியைப் போன்றவனும், அரிய தவத்தையுடைய தலைவன் என்று சொல்லப்படுபவனும் ஆகிய தில்லைநாயகப் புலவன் என்பான்; திருப்பாற் கடலிலே திருமகளுடன் தோன்றிய வெள்ளிய குழவித் திங்களைச் செஞ்சடையிலே அணிந்துள்ள பரமேசுரன் உமாதேவியார்க்குப் பொருள் விரித்துக் கூறிய காலச்சக்கர திசை என்னும் வடமொழி நூலினைப் புதிய செந்தமிழ் மொழியால் ஆக்கினான். (எ-று.)

## நூல்

# பொதுவியற் படலம்

சாற்றிய குசாதி ஏழு
　　கோட்களென் முறைமை தன்னால்
தோற்றிய கால சக்ரம்
　　தொகுத்திடும் நெறியைக் கூறின்
ஏற்றிய வலவோட் டொன்றும்
　　இடவோட்டென் றிரண்ட தாகும்
பாற்றிடும் இவ்வி ரண்டால்
　　பற்பல கதிகள் சொல்வாம்.　　　(1)

*(இ-ள்.)* சொல்லப்பட்ட செவ்வாய் முதலான ஏழு கோள்கள் என்று கூறப்படும் முறைமையால் தோற்றுவிக்கப் பட்ட காலச்சக்கரத் திசைகளைத் தொகுத்துச் சொல்லும் வழியைக் கூறத்தொடங்கினால், வலவோட்டுத் திசைகள் என ஒருவகையும், இடவோட்டுத்திசைகள் ஒரு வகையும் ஆக இரண்டுவகைத் திசைகளாக வழங்கப்படு மென்க. பகுதிபட்ட இவ்விரண்டு திசைகளால் நிகழும் பற்பல கதி விகற்பங்களைக் கூறுவோம். *(எ-று.)*

இப்பாட்டு, உடுமகாதிசை கேது முதலான ஒன்பது கோள்களால் கொள்ளப்படும். இக்காலச் சக்கரத்திசையோ செவ்வாய் முதலான ஏழு கோள்களால் வலவோட்டு, இடவோட்டென்று இருவகையாகப் பிரித்துக்கொள்ளப் படும் என்றதாம்.

## இருபத்தேழுநாட்களுள் வலவோட்டு, இடவோட்டு நாட்கள் இவை என்பன

பகருமசு வினிபரணி கார்த்திகையிம் மூன்றும்
　　பண்பான வலவோட்டாம்; உரோகிணியி னுடனே
நிகர்மிருக சீரிடத்தோ டாதிரையிம் மூன்றும்
　　நேராகும் இடவோட்டாய் நிகழ்த்திடுவ தாகும்;

உகமைமிகு நாள்மூன்றின் கால்கள்பனி ரண்டுக்(கு)
ஒருகாலுக் கொருராசி ஒருதிசையாய் நடக்கும்;
புகலுமுதன் மூன்றுவலம், பின்புமூன் றிடமாய்ப்
போற்றிருபத் தேழ்நாளும் பொருந்துறுமிம் முறையே. (2)

(இ-ள்.) இருபத்தேழு நாட்களுள் அசுவதி, பரணி, கார்த்திகை என்னும் இம்மூன்றும் வலவோட்டாகும். அடுத்த உரோகிணி, மிருகசீரிடம், திருவாதிரை என்னும் இம்மூன்றும் இடவோட்டாகும். (ஒரு நாளுக்கு நான்கு கால்களாதலின்) மேலே குறிப்பிட்ட மூன்று நாள்களுக்கும் பன்னிரண்டு கால்களாகும். ஒவ்வொரு காலுக்கும் ஒவ்வொரு இராசியாகக் கொண்டு அவ்விராசி நாதனது திசை தொடங்கி நடக்கும். மேலே சொன்ன நாட்களேயன்றி, ஏனைய அனைத்தும் புனர்பூசம், பூசம், ஆயிலியம், வலவோட்டு; மகம், பூரம், உத்திரம், இடவோட்டு; அத்தம், சித்திரை, சுவாதி, வலவோட்டு. விசாகம், அனுடம், கேட்டை, இடவோட்டு. மூலம், பூராடம், உத்திராடம், வலவோட்டு. திருவோணம், அவிட்டம், சதயம், இடவோட்டு. பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி வலவோட்டு என்று இவ்வாறு நடந்து பதினைந்து நாட்கள் வலவோட்டெனவும், பன்னிரண்டு நாட்கள் இடவோட்டெனவும் பொருந்துறும். (எ-று.)

### வலவோட்டு இடவோட்டுத் திசைகள் நடக்கும் முறை

வலவோட்டு மேடமுதல் மீனம்வரை நடக்கும்
மறுபடியும் வலமாக மேடமுதற் சுற்றும்
சொலவேண்டும் இடவோட்டு விருச்சிகமே முதலாய்த்
தூயதனு வரை நடக்கும் தொடர்ந்ததுதான் பின்னும்
துலவுவிருச் சிகம்முதலாய் வழிமுறையில் செல்லும்
கூறும்வல வோட்டெல்லாம் வலமாகத் திரியும்
இலகுமிட வோட்டெல்லாம் இடமாகப் பற்றும்
இவ்வண்ணம் சிவனுமையாட் கியம்பியசூத் திரமே. (3)

*(இ-ள்.)* வலவோட்டு நாட்களான அசுவதி, பரணி, கார்த்திகை என்பவற்றின் பன்னிரண்டு கால்களும் முறையே மேட முதல் மீனம்வரை வலமாகப் பன்னிரண்டு இராசிகளைச் சுற்றும்; பின்னும் வலவோட்டு நாட்களாகிய புனர்பூசம், பூசம், ஆயில்யம் என்பவனவற்றிற்கும், அத்தம், சித்திரை, சுவாதி என்பனவற்றிற்கும், மூலம், பூராடம், உத்திராடம் என்பனவற்றிற்கும், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி என்பனவற்றிற்கும் மேற்கூறியவாறு மேடமுதற் சுற்றும்; இடவோட்டு நாள்களான உரோகிணி, மிருகசீரிடம், திருவாதிரை என்பனவற்றின் பன்னிரண்டு கால்களும் முறையே விருச்சிகமிருந்து தனுசுவரை இடமாகச் சுற்றும்; பின்னும் இடவோட்டு நாள்களாகிய மகம், பூரம், உத்திரம் என்பவனவற்றிற்கும், விசாகம், அனுடம், கேட்டை என்பவனவற்றிற்கும், திருவோணம், அவிட்டம், சதயம் என்பவனவற்றிற்கும் மேற்கூறியவாறு விருச்சிகத்திலிருந்து துனுசுவரைச் சுற்றும். (எ-று)

**காலச்சக்கரத் திசையாண்டு**

சக்கரத்தின் திசையாண்டைத் தானெடுத்துக் கூறின்
சார்மேடம் விருச்சிகத்திற் கேழாண்டதாகும்;
மிக்கவிடைக் கோலுக்கே பதினாறாதாகும்;
மிதுனக்கன்னிக் கொன்பதாம்; ஞெண்டிருபத் தொன்றாம்;
தொக்கசிங்கத் தனக்கைந்தாம்; சிலைமீனம் பத்தாம்;
துறைமகர கும்பத்துக் கொருநாலாண் டென்பர்
வைக்குமொரு திசை தன்னில் புசிக்கின்ற கோள்கள்
வருடத்தின் அளவதனை வகுத்துரைப்பர் மானே. (4)

*(இ-ள்.)* காலச்சக்கரத் திசையாண்டினை எடுத்துச் சொன்னால், மேடச் செவ்வாய்க்கும் விருச்சிகச் செவ்வாய்க்கும் ஏழாண்டாகும். இடபச் சுக்கிரனுக்கும், துலாச்சுக்கிரனுக்கும் பதினாறாண்டாகும். மிதுன புதனுக்கும், கன்னி புதனுக்கும் ஒன்பது ஆண்டாகும். கடகத் திங்களுக்கு இருபத்தொரு யாண்டாகும். சிங்க ஞாயிற்றுக்கு

ஐந்தாண்டாம்; தனுர்வியாழனுக்கும், மீன வியாழனுக்கும் பத்து ஆண்டாம்; மகரச்சனிக்கும் கும்பச்சனிக்கும் நான்குயாண்டாகும்.

**குறிப்பு:** காலச்சக்கரத் திசையாண்டினைக் கோள் களாலும் குறிப்பதுண்டு. "மங்கலன் றனக்கே யேழாம் மாண்புகர்க் கீரெட்டாகும். தங்கிய புதனுக்கொன்பான் தணமதிக் கிருபத் தொன்றாம் வெங்கதிர்க் கைந்தேயாகும் விரும்புபொன் னவற்குப் பத்தாம்; பங்கினுக்கொருநான் காகும் பகர்திசைக் காலச் சக்ரம்" என்னும் இப்பாட்டால் அறிக. *(இது அச்சாகாத பாட்டு)*

**முழுயாண்டு அல்லது பரமாயுள்**

**இலங்கியதோர் மேடசிங்கந் தனுசுக்கு நூறாம்**
**இடபகன்னி மகரத்திற் செண்பத்தைந் தாகும்**
**துலங்குகின்ற மிதுனதுலாக் கும்பத்துக் கேதான்**
**தொகைவருடம் எண்பத்து மூன்றாகச் சொல்வர்**
**நலங்கிளரும் கடகவிருச் சிகமீனத் திற்கே**
**நண்ணுமெண்பத் தாறாண்டு நயந்துண்ப தாகும்**
**புலங்கொள்வல வோட்டுமிட வோட்டென்னு மிரண்டால்**
**பொருந்துதிசைக் குப்புத்தி பிரித்திவற்றால் அறியே. (5)**

*(இ-ள்.)* மேடம், சிங்கம், தனுசு என்னும் மூன்று இராசிகளில் தொடங்கும் காலச்சக்கரத் திசைகட்கு ஒன்பது புத்திக்குடையவரின் திசையாண்டுகளை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு *(பரமாயுள்)* நூறாகும்; இடப கன்னி, மகரங்கட்கு எண்பத்தைந்தாகும்; மிதுன துலா கும்பங்கட்கு எண்பத்து மூன்றாகும்; கடக விருச்சிக மீனங்கட்கு எண்பத்தாறாண்டாகும்; வலவோட்டுத் திசை பன்னிரண் டினுக்கும் இடவோட்டுத்திசை பன்னிரண்டினுக்கும் இம் முழுயாண்டால் *(பரமாயுளால்)* புத்தி பிரித்தறிக. *(எ-று)*

## புத்தி அறிய

காலச்சக்கரத் திசைக்குப் புத்தியின் கால அளவை அறிந்துகொள்ள வேண்டின், திசைக்குரிய கோளின் திசையாண்டினைப் புத்திக்குரிய கோளின் திசையாண்டினாற் பெருக்கி, முழுயாண்டால் (பரமாயுளால்) வகுத்தது யாண்டாம்; மிகுதியைப் பன்னிரண்டால் பெருக்கி முழுயாண்டால் வகுத்தது திங்களாம்; மிகுதியை முப்பதாற் பெருக்கி முழுயாண்டால் வகுத்தது நாளாம்; மிகுதியை அறுபதாற் பெருக்கி முழுயாண்டால் வகுத்தது நாழிகையாம்; அறுபதாற் பெருக்கி முழுயாண்டால் வகுத்தது விநாடியாம். இங்ஙனமின்றித் திசையாண்டினை முழுயாண்டால் வகுத்து வந்த ஈவினைக் காணவேண்டிய புத்திக்குரியவரின் திசையாண்டினால் பெருக்கியும் காணலாம்.

### காலச்சக்கரத் திசையுள் புத்திகளின் கதி

அரிதான காலசக்ரத் திசைப்புத்தி தாமும்
அநேககதி யாய்நடக்கும் அதிற்சிறிது சொல்வாம்
துரிதமார் நீர்க்கதியும் துரகத்தின் கதியும்
சொல்லரிய சிங்காவ லோகனத்தின் கதியும்
பரிவாங்குக் குடகதியும் மயூரத்தின் கதியும்
பகர்தவளைக் கதியும்பாம் புக்கதியும் என்றே
விரிவுருமிவ் வேழுகதி தம்மில்வரு பலனும்
விளம்புசக்ரத் திசாபுத்திப் பலன்களும்நாம் சொல்வாம். (6)

(இ-ள்.) அருமையான காலச்சக்கரத் திசையுள் புத்திகளின் நடப்பு, பலவகைக் கதிகளாக நடக்கும்; அக்கதியிற் சிறிது கூறுவாம்; இடைவிடாமல் நடக்கும் ஆற்றுநீர்க்கதியும், இடைவிட்டு நடக்கின்ற துரக கதியும், சிங்காவலோகன கதியும், குக்குட(கோழி) கதியும், மயூர(மயில்) கதியும், தவளைக் கதியும், பாம்புக்கதியும் என ஏழு கதிகளாம்; இனி, இவ்வேழு கதிகள் நிகழும் பொழுது விளையும் பலனையும், காலச்சக்கரத் திசாபுத்திகள் நடக்கும்பொழுது விளையும் பலன்களையும் நாம் சொல்லத் தொடங்குவோம். (எ-று.)

**சூடாமணி உள்ளமுடையான் 355ஆம் பாட்டு உரை:** வலவோட்டெல்லாம் மேடம் முதலாக மீனம் வரையிலும் வலமாகத் திசைகொள்ளும், இடவோட்டெல்லாம் விருச்சிகம் முதலாக இடமாகத் தனுசு வரையிலும் திசை கொள்ளும்; புத்திக்குப் பாய்ச்சலே யொழிய திசைக்குப் பாய்ச்சிலில்லை என்று கூறுகிறது. புத்திகள் இடமாவது வலமாவது இடைவிடாமல் நடப்பது. 1) ஆற்றுநீர்க் கதியாகும்; மீனத்தில் நின்று விருச்சிகத்திற் பாய்ந்தாலும், தனுசில் நின்று மேடத்திற் பாய்ந்தாலும், 2) சிங்காவலோகன கதியாம்; விருச்சிகத்தில் நின்று மீனத்திற் பாய்ந்தாலும், மேடத்தில் நின்று தனுசிற் பாய்ந்தாலும், 3) துரக கதியாம்; கடகம் நின்று சிங்கம் புரளில், 4) சர்ப்ப கதி; சிங்கம் நின்று கடகம் புரளில், 5) மயூரகதி; மிதுனம் நின்று சிங்கம் பாய்ந்தாலும், சிங்கம் நின்று மிதுனம் பாய்ந்தாலும், கடகத்திலிருந்து கன்னியிற் பாய்ந்தாலும், 7) தவளைக்கதி ஆகும். மேலே கூறியவற்றிற்கு மாறுபாடாகவும் இந்நூலுள் கூறப்பட்டுள்ளது.

வலவோட்டு நாட்களை முதல் இடை கடையென மூன்றாகப் பிரித்துக்கொள்க. அம்மூன்றில் முதல் நாட்களுக்கும் கடை நாட்களுக்கும் புத்தி கொள்ளும் வாக்கியங்கள் கூறப்படுகின்றன.

கந்தாரும் அசுவதிநாற் காலுக்கும் அல்லால்
கார்த்திகைநாற் காலுக்கும் நான்குவாக் கியந்தாம்
.அந்தாதி மீதுசூட் டென்றேற்கை தானே
ஆதும்பொற் போல்வெளவேய் பெற்றார்நீ டுதியாம்
தந்தான மெளவோர்தோல் லைவராகி. யாதும்
தான்வீறு கூர்செவ்வேல் கைக்கொண்டோய் வெளவாம்
பிந்தாத முதல்நாட்கும் கடைநாட்கு மாகப்
பேசியநால் வாக்யமிவை புத்திகொள்ளும் முறைக்கே. (7)

(இ-ள்.) வலவோட்டுள் முதல் நாளாகிய அசுவதி நான்கு கால்களுக்கும், கடை நாளாகிய கார்த்திகை நான்கு கால்களுக்கும் புத்திகளைக் கொள்ளும் முறைமையை அறிவிக்கின்ற வாக்கியங்களைக் கூறின். முதற்காலுக்கு "அந்தாதி மீது சூட்டென் றேற்கை " என்பதும், இரண்டாங் காலுக்குப் " பொற்போல் வெளவேய் பெற்றூர் நீடுதி " என்பதும், மூன்றாங்காலுக்குத் "தான மௌவோர் தொல்லைவராகி " என்பதும், நான்காங்காலுக்கு " வீறுகூர் செவ்வேல் கைக்கொண் டோய்வெள " என்பதும் ஆகும்; இவ்வாக்கியங்களே வலவோட்டுள் ஏனைய முதல் நாட்களாகிய புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி என்பனவற்றிற்கும்; வலவோட்டுள் ஏனைய கடை நாட்களாகிய ஆயில்யம், சோதி, உத்திராடம், இரேவதி என்பனவற்றிற்கும் ஆகும். (எ-ள்.)

இவ்வாக்கியங்களுக்கு உரிய விளக்கம் பின்னர்த் திசாபுத்தி பலன் கூறுமிடத்தே தரப்பட்டுள்ளது. ஆண்டுக் காண்க.

**வாக்கியங்கள்:** கணிதத்திற்கு வேண்டிய எண்களை எண்ணாகவே குறிப்பிட்டால் அவ்வெண்கள் தவறிப்போய் விடும். அவற்றை நினைவிலே வைத்துக்கொள்ளுதலும் அரிதாயிருக்கும்; ஆதலால் அறிஞர் அவ்வெண்களைத் தொடர்மொழியாலேயே குறிப்பிடத் தொடங்கினர். கணிதவெண்களைத் தொடர்மொழிகளால் (வாக்கியங்களால்) குறிப்பிடும் பொழுது முதலிலிருந்து கணக்கிடும் படியும், ஈற்றிலிருந்து கணக்கிடும்படியும் அம்மொழிகளைச் சான்றோர் அமைத்துக்கொள்வர். எடுத்துக்காட்டாக.

*சித்திரையும் ஐப்பசியும் சீரொக்கும் சித்திரைவிட்(டு)*
*ஐப்பசிமுன் னைந்தும் அழுக்கேறும் - ஐப்பசிக்கும்*
*பின்னைந்து மாதம் பிசகாமல் ராவேறும்*
*மின்னே விடுபூ முடி..*

என்ற பாட்டில் விடுபூமுடி என்னும் வாக்கியத்தை முதலிலிருந்து கணக்கிட வேண்டும். சூடாமணி உள்ளமுடை

யானில் "ஐயாறன்" என்னும் சூரியன் மந்தசா வாக்கியத்தை (129) ஈற்றிலிருந்து கணக்கிட வேண்டும். வாக்கியத்தை முதலிலிருந்தோ ஈற்றிலிருந்தோ கணக்கிடத் தொடங்கின் வர்க்கமுள்ள உயிரெழுத்துக்களையும்,உயிர்மெய்யெழுத்துக் களையுமே கொள்ளவேண்டும். ஒற்று, ஆய்தம் என்னும் எழுத்துக்களை விட்டுவிட வேண்டும். இந்நூலுள் ஆங்காங்கே கூறியுள்ள புத்தி வாக்கியங்களெல்லாம் முதலிலிருந்து கணக்கிட்டறியும்படிக் கூறப்பட்டவை யாகும். அவ்வாக்கியங்களைக்கொண்டு அறிந்துகொள்ள வேண்டிய எண்களையும், அவ்வெண்களால் அறிந்துகொள்ள வேண்டிய இராசிகளையும் "சீர்கொண்ட" என்னும் (11) பாட்டிற்கும் ஏனைய பாடல்களுக்கும் எழுதியுள்ள வாக்கிய விளக்கம் என்னும் பகுதியை ஊன்றிப் படித்துத் தெரிந்துகொள்ளலாம்.

**வலவோட்டில் இடைநாட்களுக்குரிய காலச்சக்கரத் திசைகளின் புத்தி வாக்கியம்**

வாகான பரணிநாற் காலுக்கும் முறையே
வாக்கியம்தேர் என்றுரீர் புரியாடல் வெளவாம்
பாகாரும் கோன்கொடை வல் லார்திக்கீர் முப்பூண்
பரிந்தெம்பே ரைத்தொட்டோர் வெளதேனெட் டூராம்
வேகாரும் நீடுதிலா பங்கௌவோர் சொல்லை
விரும்புமிவை பரணிமுதல் இடைநாட்கா கும்மே
தேகாதி சீவனென வகுக்குமுறை யெல்லாம்
செப்புமிந்த வாக்கியத்திற் றெரிந்துகொள்வர் தாமே. (8)

*(இ-ள்.)* வலவோட்டுள் இடைநாளாகிய பரணி நான்கு கால்களுக்கும் முறையே புத்தியறியும் வாக்கியமாவன. முதற்காலுக்குத் "தேர் என்றுரீர் புரியாடல் வெள" என்றும், இரண்டாங் காலுக்குக் "கோன் கொடை வல்லார் திக்கீர் முப்பூண்" என்றும், மூன்றாங்காலுக்கு "எம்பேரைத் தொட்டோர் வெளதே னெட்டூராம் " என்றும், நான்காங் காலுக்கு "நீடுதி லாபம் கௌவோர் சொல்லை" என்றும் கூறப்படும். இவ்வாக்கியங்களே வலவோட்டு ஏனைய

இடை நாட்களாகிய பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி என்பனவற்றிற்கும் ஆகும்; இவ்வாக்கியங்களில் முதலெழுத்துக்குரிய இராசியை அவ்வத்திசைக்கு உடலென்றும், ஈற்றெழுத்திற்குரிய இராசியை உயிரென்றும் கூறுவர். இவற்றை அறிஞர் ஆராய்ந்து கொள்வர்.

இந்நூலுள் வலவோட்டுத் திசைக்கு முதலிற் றொடங்கும் புத்திக்குரிய ராசி உடலென்றும், முடியும் புத்திக்குரிய ராசி உயிரென்றும் கூறப்பட்டுள்ளன. இடவோட்டிற்கு வலவோட்டில் உயிராயிருந்து உடலாகவும், உடலாயிருந்து உயிராகவும் மாறிவரும். இக்கருத்தினைச்

*“செப்புவல வோட்டுக்குச் சேர்தொட்ட லக்கினம்மெய்;*
*ஒப்பரிய சீவன்விடும் ஓரையே - தப்புமிட*
*வோட்டிற்கு மாறாய் உரை; இவற்றி லேசுபர்கள்*
*கூட்டமுறின் நற்பலனே கூறு..”* *(1131)*

என்னும் சாதகாலங்காரப் பாட்டால் அறிக. இப்பாடலால் உயிர், உடலான இடங்களில் நல்லோர் நின்றால் அப்புத்திகளில் நற்பலன் நிகழும்; அருத்தாபத்தியால் தீயவர் நின்றால் தீயபலன் நிகழும் என்க.

**இடவோட்டு முதல் நாளுக்கும் கடைநாளுக்கும் உரிய காலச்சக்கரத் திசைகளின் புத்தி வாக்கியங்கள்**

**செய்யவுரோ கிணிநான்கு காற்கும்ஆ திரைதன்**
**செப்புநாற் காலுக்கும் வாக்கியத்தைக் கூறில்**
**தூய்ய பைம்பொன் னோர்கௌக லாபியுற்றீர் என்றும்**
**கூதென்றே வெளவோர்பொன் னைச்சேரென்னென்றும்**
**மெய்யதொரு கூறுநீ ரிலாக்கங்கை பொய்யோ**
**மேவிதென்றும் வெளவலாரி புக்கீர்தூ தென்றே**
**அய்யமிலாச் சகடைமுதல் முதல்நாள் கட்கும்**
**ஆதிரையே முதற்கடைநாட் களுக்கு மாமே. (9)**

(இ-ள்.) இடவோட்டுள் முதல் நாளாகிய உரோகிணி நான்கு காற்கும், கடைநாளாகிய திருவாதிரை நான்கு காற்கும்

புத்தி அறியும் வாக்கியங்களைக் கூறின் மேற்கண்ட நாட்களின் முதற்காலுக்குப் "பைம்பொன்னோர் கௌகலாபி யுற்றீர்" என்றும், இரண்டாங்காலுக்குச் "சூதென்றே வெளவோர் பொன்னைச் சேரென்" என்றும், மூன்றாங்காலுக்குக் "கூறுநீ ரிலாக் கங்கை பொய்யோ" என்றும், நான்காங்காலுக்கு "வெளவலாரி புக்கீர் தூதென்றே" என்றும் கூறப்படும்; இவ்வாக்கியங்கள் உரோகிணிக்கேயன்றி ஏனைய முதல் நாட்களாகிய மகம், விசாகம், திருவோணம் என்பனவற்றிற்கும்; திருவாதிரைக்கேயன்றி ஏனைய கடை நாட்களாகிய உத்திரம், கேட்டை, சதயம் என்பன வற்றிருக்கும் ஆகும். (எ-று.)

**இடவோட்டு இடைநாட்களுக்குரிய காலச்சக்கரத் திசைகளின் புத்தி வாக்கியங்கள்**

வருமிருக சீரிடநாற் காலின்வாக் கியத்தான்
வெளகோட்சொல் லையேதென் றூடுநீ யன்றும்
இரு நிலா வரைதொட்டோ வெளவற்றார் என்றும்
இருசீர்சூட் டென்றேவெள வோர்பொன்னே யென்றும்
பொரும்வைவேல் பெற்றூர்ந்து நீதியாகம் என்றும்
புகல்நான்கு வாக்கியம்மான் தலையாதிக் கென்பர்
அருமையதாம் இவ்வெட்டு வாக்கியங்கள் தாமும்
ஆகுமிட வோட்டிற்குப் புத்திவாக் கியமே. (10)

(இ-ள்.) இடவோட்டுள் இடைநாளாகிய மிருகசீரிடம் நான்கு காற்களுக்குரிய திசைகட்குப் புத்தி அறியும் வாக்கியங்களைக் கூறின், முதற்காலுக்கு "வெளகோட் சொல்லையேதென் றூடுநீ" என்றும், இரண்டாங்காலுக்கு "நிலாவரை தொட்டோ வெளவற்றார்" என்றும், மூன்றாங் காலுக்கு "இருசீர் சூட்டென்றே வெளவோர் பொன்" என்றும், நான்காங்காலுக்கு "வைவேல் பெற்றூர்ந்து நீதியாகம்" என்றும் கூறப்படும். இவ்வாக்கியங்கள் மிருகசீரிடத்திற்கே யன்றி ஏனைய இடைநாட்களாகிய பூரம், அனுடம், அவிட்டம் என்பனவற்றிற்கும் ஆகும். முற்பாட்டில்

இடவோட்டு முதல் நாள்கட்கும் கடைநாள்கட்கும் கூறிய நான்கும், ஆக இவ்வெட்டு வாக்கியங்களும், இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னிரண்டிற்கும் புத்தி அறியும் வாக்கியங்களாம் (எ-று.)

### காலச்சக்கரத் திசைகொள்வது

### வலவோட்டுத்திசை - 12

வலவோட்டு நாட்கள் பதினைந்தினை முதல்நாள், இடைநாள், கடைநாள் என்று மூன்றாகப் பிரித்துக்கொள்க; வலவோட்டு முதல் நாள்களாகிய அசுவதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி என்னும் இவ்வைந்து நாட்களின் நான்கு காற்கும் முறையே மேடச்செவ்வாய்த்திசை, இடபவெள்ளித்திசை, மிதுனபுதன் திசை, கடகத் திங்கள் திசை என்று கொள்க. வலவோட்டு இடைநாள்களாகிய பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி என்னும் இவ்வைந்து நாள்களின் நான்கு காற்கும் முறையே சிங்கச்சூரியன் திசை, கன்னிபுதன் திசை, துலா வெள்ளித்திசை, விருச்சிகச் செவ்வாய்த்திசை என்று கொள்க. வலவோட்டுக் கடை நாள்களாகிய கார்த்திகை, ஆயில்யம், சோதி, உத்திராடம், இரேவதி என்னும் இவ்வைந்து நாள்களின் நான்கு காற்கும் முறையே தனுர் வியாழத்திசை, மகரச்சனித் திசை, கும்பச்சனித் திசை, மீனவியாழத் திசை என்று கொள்க.

### இடவோட்டுத் திசை - 12

இடவோட்டு நாள்கள் பன்னிரண்டனை முதல்நாள், இடைநாள், கடைநாள் என்று மூன்றாகப் பிரித்துக்கொள்க. இடவோட்டு முதல் நாள்களாகிய உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் என்னும் நான்கு நாள்களின் நான்கு காற்கும் முறையே விருச்சிகச் செவ்வாய்த்திசை, துலா வெள்ளித்திசை, கன்னி புதன் திசை, சிங்கச் சூரிய திசை என்று கொள்க. இடவோட்டின் இடை நாள்களாகிய மிருகசீரிடம், பூரம், அனுடம், அவிட்டம் என்னும் நான்கு நாள்களின் நான்கு

காற்கும் முறையே கடகத்திங்கள் திசை, மிதுன புதன் திசை, இடப வெள்ளித்திசை, மேடச்செவ்வாய்த்திசை என்று கொள்க. இடவோட்டின் கடைநாள்களாகிய திருவாதிரை, உத்திரம், கேட்டை, சதயம் என்னும் நான்கு நாள்களின் நான்கு காற்கும் முறையே மீன வியாழத்திசை, கும்பச்சனி திசை, மகரச்சனி திசை, தனுசு வியாழத் திசை என்று கொள்க.

இவற்றிற்குப் புத்தி கொள்ளும் முறையைத் திசையில் புத்திக்குரிய பலன் கூறுமிடத்துக் காண்க.

பொதுவியர்படலம் முற்றும்.

## வலவோட்டுப்படலம்

### காலச்சக்கரத் திசைப்புத்தி பலன்

### முதலாவது வலவோட்டு மேடச்செவ்வாய்த்திசை யாண்டு ஏழு

**(இத்திசை வலவோட்டு முதல் நாள்களாகிய அசுவதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி ஆகிய இவ்வைந்தின் முதற்காலுக்குரியது)**

சீர்கொண்ட வலவோட்டில் மேடச்சேய் சக்ரத்
திசைவருடம் ஏழுக்கும் புத்திவாக் கியந்தான்
கார்கொண்ட அந்தாதி மீதுசூட் டென் றேற்கை
கருதுமொரு நூறாண்டும் பகுத்துண்ணு மிதற்கே
ஏர்கொண்ட உடல்மேடம்; உயிர்தனுவாம்; செவ்வா
யின்புசிப்பின் சோரரக் கினிகருவி மன்னர்
போர்கொண்ட சத்துருவால் பயந்தேக பீடை
பொருள்தனதா னியச்சேதம் அலைச்சல்மின்னார் பீடை. (11)

*(இ-ள்.)* சிறப்பினைக் கொண்ட வலவோட்டியே மேடச்செவ்வாய்க் காலச்சக்கரத் திசையாண்டு ஏழாகும்; இத்திசைக்குப் புத்தி அறியும் வாக்கியமானது "அந்தாதி மீது சூட்டென்றேற்கை" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு (பரமாயுள்) நூறாண்டாகும்; இத்தொகையால்

இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணும்; இத்திசைக்கு உடலிராசி மேடமும், உயிரிராசிப் புத்தியாகிய மேடச்செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 5, நாள் 26, நாழிகை 24 ஆகும். இதனுள் கள்வரால், நெருப்பால், வாள் முதலான கருவியால், அரசரால், போரிடும் பகையால் அச்சம் நிகழும். உடல் துன்பமும், பொருட்கேடும் தானியக்கேடும் அலைச்சலும் பெண்களுக்குத் துன்பமும் உண்டாம். (எ-று)

இந்நூல், திசையுள் புத்திக்குப் பலன் கூறுகின்றதே அன்றித் திசைக்குப் பலன் கூறவில்லை. சூடாமணி உள்ளமுடையான் என்னும் நூல், வலவோட்டு, இடவோட்டு என்னும் இரண்டில் வரும் மேடச்செவ்வாய்த்திசை, விருச்சிகச் செவ்வாய்த்திசை இரண்டிலும், "சுரமும் அக்கினி பயமும்" நிகழும் என்கின்றது. அவ்வாறே பலதீபிகை என்னும் நூல் பூமி நாசம், விழிநோய், பணக்கேடு, தாய்க்குக் கேடு, பித்தநோய், பகைவரால் அச்சம், பகைவிளைதல், இடமாற்றம், அம்மைநோய், சுரம், வெப்பநோய் என்னும் இவை உண்டாகும் என்கின்றது.

**வாக்கிய விளக்கம்**

இச்செவ்வாய்த் திசைக்குப் புத்தி அறியும் வாக்கியம் அந்தாதி மீது சூட்டென் றேற்கை என்பதாம்; வாக்கியத்தினை எண்ணும் முறை:- ஒற்றுக்களை நீக்கி, உயிர், உயிர்மெய் யெழுத்துக்களை அவ்வவ் வருக்கத்தின் முதலிலிருந்து எண்ணி, எண் குறிக்க வேண்டும்.

அ-1; மேடச்செவ்வாய்ப் புத்தி; தா-2; இடபவெள்ளிப் புத்தி; தி-3; மிதுன புதன் புத்தி; மீ-4; கடகத்திங்கள் புத்தி; து-5; சிங்கச் சூரிய புத்தி; சு-6; கன்னி புதன் புத்தி; டெ-7; துலா வெள்ளிப்புத்தி; றே-8; விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி; கை-9; தனுர் வியாழ புத்தி இவற்றின் திசையாண்டுகள் முறையே

7+16+9+21+5+9+16+7+10 இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு 100 ஆகும்.

வலவோட்டு நாட்களுள், முதல் நாள்களாகிய அசுவதி முதலானவற்றைப் போலவே கடைநாளாகிய கார்த்திகை முதலானவற்றிற்கும் புத்திகொள்ள வேண்டுதலின், இங்குக் கூறிய வாக்கியமே வலவோட்டுத் தனுர்வியாழ திசைக்கும் கூறப்பட்டிருத்தலை இந்நூல் 54-ஆம் செய்யுளிற் காண்க.

**பீடசுற்றும் இடபவெள்ளி புத்தியிற்சஞ் சாரம்**
**பெறுபொருட்சே தஞ்சோம்பல் வாகனங்கள் பீடை**
**தேடரிய மனையாளுக் கரிட்டமென்பர் மிதுனந்**
**தெரிந்தபுதன் புத்தியினில் தாபசுரம் சோரர்**
**நீடியசத் துருக்கள்பயம் வருந்தனமே நாசம்**
**நிறையான தேகவெப்பம் யானைபரி பசுக்கள்**
**கூடியநாற் கால்மிருக பயம்மிகவுண் டாகும்**
**கொங்கையெனும் பொருட்டுடைய கோதையிளங் குயிலே. (12)**

*(இ-ள்.)* நகில் என்னும் குமிழியையுடைய மாலை அணிந்த இளங்குயில் போன்றவளே! வலவோட்டு மேடச்செவ்வாய்த்திசையில் இடபவெள்ளிப்புத்தி ஆண்டு 1, திங்கள் 1, நாள் 13, நாழிகை 12 ஆகும். இதன் பலன்:- உலக சஞ்சாரமும், தான் அடையக்கூடிய பொருளுக்குச் சேதமும், சோம்பலும், ஊர்திக்குத் துன்பமும், மனைவிக்குக் கேடும் உண்டாகும் என்பர். இத்திசையில் இதன்பின் மிதுன புதன் புத்தி நடக்கும். இதன் காலம் திங்கள் 7, நாள் 16, நாழிகை 48 ஆகும்; இதன் பலன்:- சுரநோயும், பழைய பகைவரால் அச்சமும், வாகனக்கேடும், உடல் வெப்பமும், யானை, குதிரை, பசு முதலான நாற்கால் விலங்குகளால் அச்சமும் உண்டாகும். (எ-று)

**குயிலேசேய் சக்கரத்தின் கடகமதிப் புசிப்பில்**
**கூர்பந்து சனப்பிரியம் நவமணியா பரணம்**
**இயலார்பொன் தானியம்வத் திரலாபம் மகிழ்ச்சி**
**இனியசௌபாக் கியமுண்டாம் சிங்கரவி புசிப்பில்**
**செயமன்னர் சன்மானம் சரக்குப்பொன் வரவு**
**திகழ்சண்டை பராக்கிரமம் சத்துருவைச் செயித்தல்**
**நியமாகும் உயுத்தசெயம் இவையெல்லாம் உண்டாம்**
**நிலவுமிழும் மதிமுகஅம் புயமலர்க்கை அனமே. (13)**

*(இ-ள்.) குயில் போன்றவளே ! நிலவினை வெளிப் படுத்தும் திங்கள் போன்ற முகமும் தாமரை மலர் போன்ற கையும் உடைய அன்னம் போன்றவளே ! வலவோட்டாகிய மேடச்செவ்வாய்க் காலச்சக்கரத் திசையில் கடகத்திங்கள் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 5, நாள் 19, நாழிகை 12 ஆகும். இதன் பலன்:- உறவினர் விருப்பமும், நவமணிகளாற் செய்த அணிகளும், பொன்னும், தானியமும், ஆடையும் கிடைக்கும். சுகமும் உண்டாகும். இத்திசையில் இதன்பின் சிங்க ஞாயிறு புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 4, நாள் 6 ஆகும். இதன் பலன்:- வெற்றியுடைய மன்னரால் உபசரிக்கப் படுதலும், வியாபாரப் பொருளாய்ச் செம்பொன் வருதலும், விளங்கா நின்ற போர்ச் செயலும், பேராற்றலும், பகைவரை வெல்லுதலும், நியமம் பொருந்திய போரிலே வெற்றியும் ஆகிய இவையெல்லாம் உண்டாகும் அன்னம் போன்றவளே! (எ-று.)*

**அன்னசெவ்வாய்ச் சக்கரத்திற் கன்னிபுதன் உண்ணின்**
**அரியவா கனச்சேதம் மனத்தாபம் வியாதி**
**கன்னமிடு சோரபயம் வியாச்சியம்மேற் றிரிதல்**
**காட்டுதுலா வெள்ளிபுத்தி வியாதிதனச் சேதம்**
**மன்னுதா னியநட்டம் பரதேசத் தலைதல்**
**மனைவிக்கே துன்பமுண்டாம் விருச்சிகச்சேய்ப் புசிப்பில்**
**பன்னுமன்னர் பயந்தேக பீடைவெப்பஞ் சோரர்**
**பரசத்ரு அக்கினியாற் பயமுண்டாம் பகரே. (14)**

*(இ-ள்.) வலவோட்டாகிய மேடச்செவ்வாய்க் காலச்சக்கரத் திசையில் கன்னி புதன் புத்தியின் காலம் திங்கள்7, நாள் 16, நாழிகை 48 ஆகும். இதன் பலன்:- சிறந்த ஊர்திகட்குக் கேடும், மனவேறுபாடும், நோயும், கன்னமிடுகின்ற கள்வரால் அச்சமும், வழக்கிடுதலும், மேலைத்திசையிலே அலைந்து திரிதலும் உண்டாகும். இத்திசையில் இதன்பின் நிகழ்வது துலாவெள்ளி*

*புத்தியாகும். இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 1, நாள் 13, நாழிகை 12 ஆகும். இதன் பலன்:- நோயும், பணச்சேதமும், தானியம் கெடுதலும், வேற்று நாட்டிலே அலைந்து திரிதலும், மனையாளுக்குத் துன்பமும் உண்டாகும். இத்திசையில் இதன்பின் நிகழ்வது விருச்சிகச்செவ்வாய் புத்தியாகும்; இதன் காலம் திங்கள் 5, நாள் 26, நாழிகை 24 ஆகும். இதில் அரசரால் அச்சமும், உடல் துன்பமும், உடல் வெப்பமும், கள்வர், மேலான பகைவர் நெருப்பு இவற்றால் அச்சமும், உண்டாகும் என்று சொல்வாய். (எ-று.)*

**பகரும் மேடச் செவ்வாயில்**
**பண்பாந் தனுவின் குருபுத்தி**
**புகலும் மன்னர் வெகுமானம்**
**பூமி லாபம் குருபத்தி**
**திகழ்நற் கன்மம் சிவபத்தி**
**திருமந் திரத்தில் விசுவாசம்**
**மகிழும் புத்தி தேகசுகம்**
**வாழ்வு மிகவும் உண்டாமே. (15)**

*(இ-ள்.) வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசையில் தனுர்வியாழன் புத்தியின் காலம் திங்கள் 8, நாள் 12 ஆகும். இதன் பலன்:- அரசரால் சிறப்பிக்கப்படுதலும், நிலப்பேறும், ஆசிரியனிடத்தில் அன்பும், தற்செயலில் சிவனுடைய பத்தியில் உயர்ந்த மந்திரத்தில் நம்பிக்கை வைத்தலும், மகிழ்வதற்குக் காரணமான அறிவும், உடல் நலமும், நல்வாழ்வும் மிக உண்டாகும். (எ-று)*

வலவோட்டு மேடச்செவ்வாய்க் காலச்சக்கரம் முற்றும்.

## இரண்டாவது வலவோட்டு இடப வெள்ளிக் காலச்சக்கரம்

*(இது வலவோட்டு முதல் நாள்களாகிய அசுவதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி ஆகிய இவ்வைந்தின் இரண்டாங்காலுக்குரியது)*

**வரைத்தவல வோட்டிடபச் சுக்கிரனின் றிசைதான்**
**வருடம்ஈ ரெட்டிற்கும் புத்திவாக் கியந்தான்**
**உரைத்த பொற் போல்வெளவேய் பெற்றூர்நீ டுதியென்**
**றோதுமாண் டெண்பத்தைந் தினிற்பகுத்தே உண்ணும்**
**நிரைத்தவுடல் மகரம்; உயிர் மிதுனமே என்பர்;**
**நீண்மகரச் சனிபுசிப்பில் பட்டினத்தில் வாசம்**
**தரைக்குள்விளை யாடல்நல்ல புத்திபகை வெல்லல்**
**சந்தோடம் அதிகாரப் பிரியம்மிகு உறவே. (16)**

*(இ-ள்.) வரையறுத்த வலவோட்டு இடபவெள்ளித் திசையாண்டு பதினாறாகும்; இதற்குப் புத்திகள் கொள்ளும் முறையை அறிவிக்கும் வாக்கியந்தான் "பொற்போல் வெளவேய் பெற்றூர் நீடுதி" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தைந்தாம்; இத்திசையாண்டினை இதன் புத்திகள் இம்முழுயாண்டுத் தொகையால் பிரித்துண்ணும். இத்திசைக்கு உடலிராசி மகரமும் உயிரிராசி மிதுனமும் ஆகும்; இவ்வெள்ளித் திசையில் முதலாவதாகிய மகரச்சனிப்புத்தியின் காலம் திங்கள்9, நாள்1, நாழிகை 3, விநாடி 32 ஆகும். இதன் பலன்:- பட்டினத்திற் சென்று வசித்தலும், விளையாட்டு நிகழ்த்தலும், நற்புத்தியும், பகைவரை வெல்லுதலும், மகிழ்ச்சியும், அதிகாரவிருப்பமும், மிக்க உறவும் உண்டாம். (எ-று.)*

**இவ்வெள்ளித் திசைக்குப் பலன்:**

*திருமணம், மகப்பேறு, கல்விப்பேறு, அணிகலப் பேறு, நிலப்பேறு, நீதியாய் நடத்தல், ஊர்தி உண்டாதல் முதலியன நிகழும் என்று பலதீபிகை கூறுகின்றது. "வெள்ளி வாழ்வுண்டாம்" என்று சூடாமணி உள்ளமுடையான் கூறுகின்றது.*

**வாக்கிய விளக்கம்:**

*இத்திசைக்குப் புத்தியறியும் வாக்கியம் "பொற் போல் வெளவேய் பெற்றூர் நீடுதி" என்பதாம்; இதனை, பொ-10,*

மகரச்சனி; போ-11, கும்பச்சனி; வெள-12, மீன வியாழன்; வே-8, விருச்சிகச்செவ்வாய்; பெ-7, துலா வெள்ளி; றா-6, கன்னிப்புதன்; நீ-4, கடகத்திங்கள்; டு-5, சிங்க ஞாயிறு; தி-3, மிதுன புதன் என்று இவ்வாறு கணக்கிட்டு அறிக.

இப்புத்திகளின் திசையாண்டுகள் முறையே: 4+4+10+7+16+9+21+5+9 ஆகும். இவற்றை ஒன்றாகக்கூட்டிய முழுயாண்டு எண்பத்தைந்தாகும்.

வலவோட்டு மகரச்சனிக் காலச்சக்கரத் திசைக்கும் இதே வாக்கியமாகும். (செய்யுள்-58)

உறவாகும் இடபவெள்ளி தனிற்கும்பச் சனிநூண்
ஒன்னலரால் பயஞ்சோம்பல் மனோதுக்கம் பீடை
திறவாகும் சஞ்சாரம் இவையுண்டாம்; இதன்மேல்
செப்பரிய மீனகுரு புத்தியிலா சாரம்
பெறவேண்டுங் கனபுத்தி வித்தியா லாபம்
பெயரான தனலாபம் இராசவெகு மானம்
மறவாத பந்துநட்பு வெகுசெல்வம் உண்டாம்
வளர்மீனத் திருந்துவிருச் சிகந்தனிலே பாயும். (17)

(இ-ள்.) நட்பான வலவோட்டு இடபவெள்ளிக் காலச்சக்கரத் திசையில் கும்பச்சனிப் புத்தியின் காலம் திங்கள்9, நாள் 1, நாழிகை 3, விநாடி 32 ஆகும். இதன் பலன்::- பகைவரால் அச்சமும், சோம்பலும், மனத்துன்பமும், உடற்பீடையும், கூறுபாடான உலக சஞ்சாரமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் மீன வியாழன் புத்திக்காலம் ஆண்டு 1, திங்கள் 10, நாள் 17, நாழிகை 38, விநாடி 50 ஆகும். இதன் பலன்:- நல்லொழுக்கமும், உயர்ந்த புத்தியும், கல்விப்பேறும், பொருட்பேறும், அரசரால் சிறப்பும், மறவாத உறவினருடைய நட்பும், பலவகைச் செல்வமும் உண்டாகும். இத்திசையில் மீன குருபுத்தி நடந்து முடிந்தபின் அடுத்து விருச்சிகத்திற் பாயும். (எ-று.)

பாயும்மீ னத்திலிருந்து விருச்சிகரா சியினில்
பகர்ந்திடுசிங் காவலோ கனகதியாம் பலன்றான்
ஆயுலகிற் சஞ்சாரம் சரீரசுரம் துக்கம்
தனச்சேதம் மிகவுண்டாம் சாமான்ய பலனாம்
தாயவிருச் சிகச்செவ்வாய்ப் புத்திமனோ துக்கம்
சொற்பதிர வியலாபம் பொருட்சேதம் உண்டாம்
தாயதரித் திரம்ரெத்தக் கடுப்புமன்னர் கோபம்
கடுங்கிரக பீடைபயித் தியரோகம் காட்டும். (18)

*(இ-ள்.) மேலே மீனவிராசியிலிருந்து விருச்சிக இராசியிற் பாயும் என்று சொன்ன கதி, சிங்காவலோகன கதியாகும்; இது நிகழுங்கால் தேச சஞ்சாரமும், உடம்பிற்குச் சுரநோயும், மனத்துன்பமும், பொருட்கேடும் மிகவும் உண்டாகும். செய்யுந் தொழிலில் அற்பமான பயனே கிடைக்கும். இவ்விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 3, நாள் 24, நாழிகை 21, விநாடி 11 ஆகும். இதன் பலன்:- மனத்துன்பமும், சிறிதான பொருட்பேறும், பொருட்கேடும், வறுமையும், இரத்தக் கடுப்பும், அரசருடைய சினமும், வீட்டிற்குக் கடுமையான பீடையும், பயித்தியமென்னும் நோயும் உண்டாகும். (எ-று.)*

காட்டிடபச் சக்கரத்தில் துலாவெள்ளி புத்தி
காரியங்கள் கைகூடும் அரசர்வெகு மானம்
தாட்டிகம னோதிடமாஞ் சவுக்கியமும் பூமி
தனலாபம் சயனசுகம் பெண்போகம் உண்டாம்
நாட்டுகன்னி புதன்புசிப்பில் சவுக்கியஞ்சந் தோடம்
நாடியகா ரியசித்தி நண்பர்களின் சேர்க்கை
மீட்டுதிர வியலாபம் இவையுண்டாம் என்பர்
மிதுகன்னி தனிலிருந்து கடகத்திற் குதிக்கும். (19)

*(இ-ள்.) வலவோட்டு இடப வெள்ளிக் காலச்சக்கரத் திசையில் துலா வெள்ளிப் புத்தியின் காலம் ஆண்டு 3, திங்கள்0, நாள் 4, நாழிகை 14, விநாடி 7 ஆகும்; இதன் பலன்:- தொடங்கிய காரியங்கள் கைகூடும். மன்னராற்*

சிறப்புண்டாம். மன உறுதியும், உடல் நலமும், நிலப்பேறும், பொருட்பேறும் உண்டாகும்; படுக்கை யின்பமும், பெண்ணின்பமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் கன்னிப்புதன் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள்8, நாள் 9, நாழிகை 52, விநாடி 56 ஆகும். இதன் பலன்:- உடல் நலமும், மகிழ்ச்சியும், கருதிய காரியம் கைகூடுதலும், நண்பருடன் சேர்ந்திருத்தலும், பொருட்பேறும் உண்டாகும். இதன்பின் அடுத்த புத்தி கன்னி இராசியிலிருந்து கடக விராசியிற் பாயும். (எ-று.)

**குதிகொளுங்கன் னியிலிருந்து கடகத்திற் பாய்தல்**
**கூறியமண் டூகத்தின் பாய்தலிதன் பலன்றான்**
**நிதியனைய மாதுர்பிதுர் பெண்ணிவர்க்குப் பீடை**
**நீரினிற்கண் டஞ்சனங்கள் பகைமேற்குப் பயணம்**
**மதியனைய கெர்ப்பசஞ் சலங்காட்டும் கடக**
**மதிபுசிப்பில் தலைவலிகா மாலைதந்த நோயாம்**
**பதிதனம்போம் நகச்சுற்று பாண்டுபந்து நாசம்**
**கர்வாத சயித்தியமாம் மனைவிக்கே நோய்கள். (20)**

(இ-ள்) மேலே கன்னியிராசியிலிருந்து கடகத்திற் பாயும் என்ற கதி, தவளைக்கதி யாகும்; இக்கதி நிகழும் பொழுது தாய், தந்தை, பெண்கள் இவர்க்குப் பீடையுண்டாகும்; தண்ணீராற்றத்தும், பொதுமக்கள் பகையும், மேற்றிசைப் பயணமும் பயணமும் கர்ப்பத்தைப் பற்றிய கவலையும் உண்டாகும். இக்கடகத் திங்கள் புத்தியின் காலம் ஆண்டு 3, திங்கள் 11, நாள் 13, நாழிகை 3, விநாடி 32 ஆகும். இதன் பலன்:- தலைவலியும், காமாலை நோயும், பல் நோயும் உண்டாகும். நிலையான இடமும், பொருளும் போகும்; நகச்சுற்றும், பாண்டு என்னும் நோய்களும் உண்டாகும். உறவினர் கெடுவர்; வாத சயித்தியம் என்னும் பிணி தோன்றும்; மனைவிக்குப் பிணி விளையும். (எ-று.)

கம்மியகர்க் கடகநின்று சிங்கத்திற் புரளல்
கருதுசர்ப்ப கதியென்பர் காணுமிதன் பலன்றான்
விம்மியவுட் டினம்கிரந்தி கபாலம்நேத் திரத்தில்
வியாதியப செயம்வயிற்று வலிவாத நோய்கள்
அம்முதுசிங் காதித்தன் புத்தியிற்கால் விலங்கு
அரியநேத் திரரோக முடன்கண்ட மாலை
தம்மில்மன்னர் பயஞ்சத்ரு பகைபசுக்கள் நாசம்
தான்காட்டும் சிங்கம்நின்று மிதுனத்திற் றாண்டும். (21)

*(இ-ள்.) வலவோட்டு இடப வெள்ளித் திசையில் கடகத்திங்கள் புத்தி நடந்து முடிந்தபின், கடகவிராசியிலிருந்து அடுத்த புத்தி சிங்கவிராசியிற் புரளும்; இதனைப் பாம்புக் கதி என்பர். இக்கதி நிகழும்பொழுது உண்டாகும் பலன்றான்:- மிக்க வெப்பமும், கிரந்தி நோயும், தலையிலும் விழியிலும் நோயும், தொடங்கிய காரியத்தில் வெற்றியின்மையும், வயிற்றுவலியும், வாய்வு நோய்களும் உண்டாகும். இச்சிங்க ஞாயிற்றின் புத்திக்காலம் திங்கள் 11, நாள் 8, நாழிகை 49, விநாடி 25 ஆகும். இதன் பலன்:- கால் விலங்கும், கண்ணோயும் கண்டமாலை என்னும் பிணியும், அரசரால் அச்சமும், பகைவர்தம் பகைமிகுதலும், பசுக்கள் கெடுதலும் உண்டாகும். இப்புத்தியின் பின் சிங்கவிராசியிலிருந்து மிதுன விராசியிற் பாயும். (எ-று.)*

ஏகியசிங் கத்திருந்து மிதுனத்திற் குதித்தல்
ஏத்தியகுக் குடகதியென் றியம்புவரிப் பலன்றான்
ஆகுமனோ பயம்வாத ரோகந்திரீ கலகம்
ஆக்குமென்பர் மிதுனபுதன் புசிப்பினிற்சந் தோடம்
வாகுறுகா ரியங்கள்செயம் வித்தைதன லாபம்
வருஞான வயிராக்கியம் தருமத்தை விரும்பல்
தேசவுக் கியமுண்டாம் என்பரனப் பெடைக்கும்
சிறியபிடிக் கும்நடையைத் திருத்தியசிற் றடியே. (22)

*(இ-ள்.) அன்னப் பேட்டிற்கும், இளைய பிடி யானைக்கும் நடையைத் திருத்திய, சிறிய அடியினையுடை*

*யாளே! மேலே சிங்க இராசியிலிருந்து மிதுன இராசியிற் பாயும் என்ற கதி கோழியின் கதியாகும் என்பர். இக்கதி நிகழும்பொழுது நடைபெறும் பலன்றான்:- மனத்திலே அச்சம் விளைதலும், வாய்வு நோய் உண்டாதலும், பெண்களாற் கலகந்தோன்றலும் ஆம் என்பர். இம் மிதுனபுதன் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 8, நாள் 9, நாழிகை 52, விநாடி 56 ஆகும்; இதன் பலன்:- மகிழ்ச்சியும் ஒழுங்கான காரியங்களிலே வெற்றியும், கல்விப்பேறும், பொருட்பேறும், தத்துவஞானமும், வைராக்கியமும், அறத்தை விரும்பலும், உடல் நலமும் உண்டாதலாம். (எ-று.)*

வலவோட்டு இடபவெள்ளிச்சக்கரம் முற்றும்.

**மூன்றாவது வலவோட்டு மிதுனபுதன் காலச்சக்கரம்**

*(இது வலவோட்டு முதல் நாள்களாகிய அசுவதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி ஆகிய இவ்வைந்தின் மூன்றாவது காலுக்குரியது)*

**வலவோட்டா கியமிதுன சக்கரத்தின் திசையாம்**
**வருடமொன்ப திற்புத்தி வாக்கியந்தான் புகலில்**
**சொலுந்தான மௌவோர்தொல் லைவராகியென்றே**
**சொலுவருடம் எண்பதுமூன் றிற்பகுத்தே யுண்ணும்;**
**குலவிதற்கே இடபமுடல்; உயிர்மிதுன மென்பர்;**
**கூறிடபப் புகர்பொசிப்பில், வாகனம்பூ லாபம்**
**இலகுமணி திரீலாபம் புத்திமிகு போகம்**
**எதிர்சூது நிவிர்த்திபொருள் வரவுசவுக் கியமே. (23)**

*(இ-ள்.) வலவோட்டாகிய மிதுன புதன் காலச்சக்கரத் திசையாண்டு ஒன்பதாகும்; இத்திசைக்குப் புத்தி அறியும் வாக்கியத்தைக் கூறினால் அது "தானமௌவோர் தொல்லை வராகி" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழு யாண்டு எண்பத்து மூன்றாம்; இம் முழுயாண்டுத் தொகையால் இத்திசையின் புத்திகள் இத்திசையைப் பிரித்துண்ணுமென்க; இத்திசைக்கு இடப விராசி தொடக்கமாகிய உடலாகும்;*

மிதுனவிராசி முடிவாகிய உயிராகும்; இத்திசையில் முதற் புத்தியாகிய இடபவெள்ளிப் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 8, நாள் 24, நாழிகை 34, விநாடி 42 ஆகும்; இதன் பலன்:- ஊர்தியும், நிலமும் ஒன்பது மணிகளும், பெண்ணும் ஆகிய இவை கிடைத்தலும், அறிவும், மிகுதியான உலக போகங்களும் கிட்டலும், எதிர்ப்பட்ட சூதான செயல்கள் குறைதலும், பொருள் வருதலும், நலமாயிருத்தலும் ஆகிய இவை விளையும். *(எ-று.)*

**இப்புதன் திசைக்குப் பலன்:**

வாகனம் நிலம் பணம் இவை கிடைத்தலும், திருமணமும், மகப்பேறும் உண்டாதலும், கணக்கு முதலிய கல்விப் பயிற்சியும் உடல் ஒளியும் உடல் நலமும் ஏற்படுதலும், புதிய வீட்டில் வாழ்தலும், தொழில் முதலியன நிலைபெறுதலும் உண்டாமென்பர். பலதீபிகையார். கல்வியும் புதல்வரும் உண்டாகும் என்பது சூடாமணி உள்ளமுடையான். *(செய்யுள்-356)*

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தி அறியும் வாக்கியம் "தான மௌவோர் தொல்லை வராகி " என்பதாம்; இதனை தா-2, இடபவெள்ளி ன-1, மேடச்செவ்வாய்; மௌ-12, மீன வியாழன்; வோ-11, கும்பச்சனி; தொ-10 மகரச்சனி; லை-9, தனுர்வியாழன்; வ-1, மேடச்செவ்வாய்; ரா-2, இடபவெள்ளி; கி-3, மிதுன புதன் என்று இவ்வாறு கணக்கிட்டறிக.

இப்புத்திகளின் திசையாண்டு முறையே 16+7+10+4+4+10+7+16+9 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்.

வலவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத்திசைக்கும் இதுவே வாக்கியமாகும். *(செய்யுள்-63)*

சக்கரம்-4

இயல்மேடக் குசன்புத்தி தனிற்காலிற் புண்கள்
எழிலாரும் மகப்பீடை கிலேசம்மெய்யிற் காயம்
செயவரசர் பயமுண்டாம் விடரோகந் தீர்தல்
சிறந்தமன்னர் வெகுமானம் கீர்த்திபின்னர் உண்டாம்
நயமான மீனகுரு புத்திதனிற் கீர்த்தி
நாற்றிசையும் பிரசித்தி புத்திரருண் டாகும்
தயவுடைய குருபத்தி தேவதா பத்தி
தக்கவத்தி ராபரணம் பூலாபம் உண்டே. (24)

*(இ-ள்.) வலவோட்டு மிதுன புதன் திசையுள் மேடச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 9, நாள் 3, நாழிகை 15, விநாடி 11 ஆகும். இதன் பலன்:- கால்களிற் புண்களும், அழகு பொருந்திய மக்கட்குப் பீடையும், கவலையும், உடம்பிற் காயமும், வேந்தரால் அச்சமும் உண்டாகும். இப்புத்தியின் பிற்கூற்றிலே விடநோய் நீங்குதலும், சிறந்த அரசரால் உபசரிக்கப்படுதலும், புகழும் உண்டாகும். இத்திசையில் இதன்பின் மீன வியாழன் புத்தி நடக்கும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 1, நாள் 0, நாழிகை 21, விநாடி 41 ஆகும். இதன் பலன்:- நாற்றிசையிலும் தன்பெருமை வெளிப்படுதலும், புதல்வரும் உண்டாகும்; குரு பத்தியும், கடவுள் பத்தியும், ஆடை அணி நிலப்பேறும் உண்டாகும். (எ-று.)*

உண்டாகும் குடச்சனியின் புத்திதலை வலியும்
உதரவலிச் சூலைமனத் துயரசதிகாட் டும்;
விண்டமக ரச்சனியின் புத்தியிற்சஞ் சாரம்
மிகுந்தேக பீடையுடன் உறவினர்க்குக் கிலேசம்
மண்டியதோர் விலங்குபயம் கள்வர்பயம் மனையாள்
மன்னுமுடற் பீடைவரும்; தனுர்க்குருபுத் தியிலே
கொண்டதெய்வம் குருமறையோர் பத்திமைந்தர் நிலங்கள்
கூறுவர்கள் கீர்த்தியுநற் கலைபணியும் தருமே. (25)

*(இ-ள்.) வலவோட்டு மிதுன புதன்றிசையுள் கும்பச்சனிப் புத்திக் காலம் திங்கள் 5, நாள் 6, நாழிகை 8, விநாடி 40 ஆகும்; இதன் பலன்:- தலைநோயும், வயிற்று*

வலியும், சூலை நோயும், மனத்துன்பமும் உறவினர்க்குக் கவலையும், விலங்குகளால் அச்சமும், கள்வரால் அச்சமும், மனைவிக்கு உடல் துன்பமும், விளையும் இத்திசையில் இதன்பின் தனுர் வியாழன் புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 1, நாள் 0, நாழிகை 21, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- தான் வழிபடுதலாக மேற்கொண்ட தெய்வத்தினிடத்திலும், குருவினிடத்திலும், அந்தணரிடத் திலும் பத்தி செய்தலும், மகப்பேறும், நிலப்பேறும் உண்டாதலும், புகழும், ஆடையும், அணியும் பெறுதலும் நிகழும். (எ-று.)

**தருமிந்தத் தனுசில்நின்று மேடத்திற் றாண்டும்**
**சாற்றியசிங் காவலோ கனகதியின் பலன்றான்**
**மருவுதெற்குப் பயணமுண்டாம் சோரர்பயமெய்தும்**
**மன்னுதனச் சேதமுடற் பீடைபிதுர்ப் பீடை**
**வெருவுமவ மிருத்துகெண்டம் பிராணபய மாகும்**
**மேடச்செவ் வாய்ப்புத்தி தனிற்றேசத் தலைநல்**
**பொருந்துசத்ரு துயர்நீச வார்த்தையுடன் றுக்கம்**
**புகலக்னி பயம்பந்து சனநாசம் என்பார். (26)**

(இ-ள்.) வலவோட்டு மிதுன புதன் திசையில் தனுர் வியாழபுத்தி நடந்து முடிந்த பின், தனுர் இராசியிலிருந்து மேட விராசியிற் பாய்ந்து அடுத்த புத்தி நடக்கும்; இவ்வாறு பாய்வது சிங்காவலோகன கதியாகும்; இக்கதி நிகழும் பொழுது தென்றிசையிற் பயணமும், கள்வரால் அச்சமும், தன்னிடத்துப் பொருந்திய பொருட்கேடும், உடல்துன்பமும், தந்தைக்குத் துன்பமும், துன்மரணமும், தத்தும், உயிர்க்கு அச்சமும் உண்டாகும். இம் மேடச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 9, நாள் 3, நாழிகை 15, விநாடி 11 ஆகும்; இதன் பலன்:- தேசங்களில் அலைந்து திரிதலும், பகைவரால் துன்பம் நிகழ்தலும், தாழ்வான சொல் உண்டாதலும், மனத்துயரும், நெருப்பினால் அச்சமும், உறவினர் கேடும் விளையும் (எ-று.)

பார்கொண்ட மிதுனபுதன் சக்கரத்தி லேதான்
　　　பகரிடப் புகர்புத்தி தன்னில்நவ மணிகள்
சீர்கொண்ட படிலாபம் சவுக்கியஞ்சத் துருவைச்
　　　செயித்தல்உடை ஆபரணம் பெண்ஊர்தி லாபம்
கூர்கொண்ட திசைவிசயம் உண்டாகும் இதன்மேல்
　　　கூர்மிதுன புதன்புத்தி தனிலதிக லாபம்
ஏர்கொண்ட குருபத்தி வியாபார லாபம்
　　　எண்ணுபந்துப் பிரியம்மன்னர் சன்மானம் புசிப்பே. (27)

*(இ-ள்.)* உலகத்தவர் கொண்ட வலவோட்டு மிதுன புதன் காலச்சக்கரத் திசையுள் இடப வெள்ளிப் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 8, நாள் 24, நாழிகை 34, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- ஒன்பது மணிகளும், நிலமும், சுகமும், பகைவரை வெல்லுதலும், ஆடையும், அணிகலனும், பெண்ணும், வாகனமும் என்னும் இவை உண்டாதலும், தான் சென்ற இடங்களிலெல்லாம் வெற்றி நிகழ்தலும் விளையு மென்க. இத்திசையில் இதன்மேல் மிதுன புதன் புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 11, நாள் 21, நாழிகை 19, விநாடி 31 ஆகும். இதன் பலன்:- குருவினிடத்தில் அன்பு செய்தலும், வியாபாரத் தொழிலில் பொருட்பேறும், உறவினர் விருப்பமும், அரசரால் சிறப்புப் பெறுதலும், நல்லுணவுகளைப் புசித்தலும் உண்டாம். (எ-று.)

பொசிப்புள சுக்கிரன் புதனுந் தாமிவர்
வசித்திடும் உடலுயிர் ஆகி நிற்பதால்
விசித்திசெய் திரிகளால் விடஞ்ச லத்தினால்
அசத்துவாம் அவமிருத் தாலுங் கண்டமே. (28)

*(இ-ள்.)* வலவோட்டு மிதுன புதன் காலச்சக்கரத் திசைக்கு இடபவெள்ளி உடலாகவும், மிதுன புதன் உயிராகவும் பொருந்தி நிற்றலால், இப்புத்திகள் நிகழுங் காலத்திலே அழிவு செய்யும் பெண்களாலும், நஞ்சினாலும், தண்ணீராலும் துன்மரணமும், தத்தும் நிகழும் (எ-று.)

இப்பலன்கள், எல்லாத்திசைகளிலும் உடலுயிர் இராசிகளில் தீயவர் நிற்க அப்பொழுது அப்புத்திகள் நடைபெறின் விளைவனவாகும். அவ்விராசிகளில் நல்லோர் நிற்பின் நற்பலனே நிகழுமென்க. இக்கருத்தினை,

செப்புவல வோட்டுக்குச் சேர்தொட்ட லக்கினம்மெய்;
ஒப்பரிய சீவன்விடும் ஓரையே; - தப்புமிட
வோட்டிற்கு மாறாய் உரையிவற்றி லேசுபர்கள்
கூட்டமுறின் நற்பலனே கூறு - (1131)

என்னும் சாதகாலங்காரப் பாட்டால் அறிக.

வலவோட்டு மிதுன புதன் காலச்சக்கரம் முற்றும்.

**நான்காவது கர்க்கடக திங்கள் காலச்சக்கரத் திசை ஆண்டு 21**

(இத்திசை, வலவோட்டு முதல் நாள்களாகிய அசுவதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி ஆகிய இவ்வைந்தின் நான்காங்காலுக்குரியது.)

சக்கரங்காண்[1] ஈனர் சசியோடு துங்கமிலா
வெக்கிரனா யோர்வந்து கூடிடினும் - உக்கிரமாய்ப்
பார்த்தாலும் சோரர் பயம்நோய் அபசெயம்; பொன்
பார்த்தாலோ இன்பம் வரும்.

(இ-ள்.) இராசிச்சக்கரத்திலே காணப்படும் பலங் குறைந்த திங்களுடனே நன்மையில்லாத தீயகோள்கள் வந்து கூடினாலும், அல்லது கடுமையாகப் (முழுப்பார்வையாகப்) பார்த்தாலும் இக்கடகச் சந்திர திசை நடக்குங் காலத்திலே கள்வரால் அச்சமும், பிணிகளும், தோல்வியும் உண்டாகும்; பலம் குறைந்து, தீயவருடன் கூடிய, தீயவரால் பார்வையடைந்த திங்களை வியாழன் நோக்கினால் துன்பமெல்லாம் நீங்க இன்பமே வரும். (எ-று.)

மேலே கூறியுள்ள பாட்டின் கருத்தினை,

---

1. "சக்கரங்கான்" என்னும் இப்பாட்டு சரசுவதி மகால் பிரதியில் மட்டும் உள்ளது.

உள்ளபடி கலைகுறைந்த மதியேயா னாலும்
ஒன்னார்வீட் டினும்வியமெட் டுடனாறாமி டத்தும்
மெள்ளெனநின் றிடிற்பொன்கேந் திரத்தினிலே யுற்றால்
வெண்மதிகுற் றந்தீரும்; அஃதெவ்வா றென்னில்
கள்ளவிழும் பசுங்கன்றைப் பரன்றன்னன் பர்க்குக்
கனபாவந் தவிர்த்தின்பங் காட்டுதல்போ லாகும்
தெள்ளியநல் லோர்பார்வை பெற்றசசி குற்றம்
தினகரனைக் கண்டபனி போற்றீரு மென்னே. (212)

*என்னும் சாதகலங்காரப் பாட்டால் அறிக.*

தனித்தவல வோட்டான கர்க்கடகத் திங்கள்
சக்கரத்தின் திசைவருடம் இருபத்தொன் றிதற்கே
கனித்தபுத்தி வாக்கியந்தான் வீறுகூர் செவ்வேல்
கைக்கொண்டோய் வெளவென்ற வாக்கியத்தின் படியே
இனித்தவெண்பத் தாறாண்டிற் பகுத்துண்ணு மிதற்கே
இயல்கடகம் உடல்; மீனம் உயிராகும் என்பர்;
மனித்தண்டு திங்கள்புத்தி மன்னர்வெகு மானம்
மகாசவுக்யம் தனலாபம் வருமென்பர் மானே. (30)

*(இ-ள்.) ஒப்பற்ற வலவோட்டாகிய கர்க்கடகத் திங்கள் காலச்சக்கரதிசை இருபத்தொரு யாண்டாகும். இத்திசைக்குப் புத்தியறியும் வாக்கியமாவது "வீறுகூர் செவ்வேல் கைக்கொண் டோய்வெள" என்பதாம்; இதற்குள்ள முழுயாண்டு (பரமாயுள்) எண்பத்தாறாண்டாகும். இம் முழுயாண்டுத் தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணு மென்க. இத்திசைக்கு உடலிராசி கடமும், உயிரிராசி மீனமும் ஆகும்; இத்திசையுள் முதற்புத்தியாகிய கடகத்திங்கள் புத்தியின் காலம் ஆண்டு 5, திங்கள் 1, நாள் 16, நாழிகை 2, விநாடி 48 ஆகும். இதன் பலன்:- அரசரால் சிறப்பிக்கப்படுதலும், பெரிய சுகமும், பொருட்பேறும் உண்டாகும். (எ-று.) (இப்புத்தியின் பலன் அடுத்த பாட்டிலும் தொடர்கிறது.)*

**இக்கடகத் திங்கள் திசைக்குப் பலன்:**

திருமணம், ஆடை அணி புதல்வர்ப்பேறு, கருப்பத் தோற்றம், வெற்றி, பணமும், தானியமும் ஏனைய செல்வங்களும் உண்டாதல் முதலியனவாம் என்பது பலதீபிகை, "வண்டார் குழலார் மனைபுகுவர் மதியூண்" என்பது சூடாமணி உள்ளமுடையான்.

**வாக்கிய வீளக்கம்:**

வலவோட்டுக் கர்க்கடகத் திங்கள் திசை இருபத் தொன்றுக்குப் புத்தி வாக்கியம் "வீறுகூர் செவ்வேல் கைக்கொண்டோய் வெள்" இதனை, வீ-4, கடகத்திங்கள்; று-5, சிங்க ஞாயிறு; கூ-4, கன்னி புதன்; செ-7, துலாவெள்ளி; வே-8, விருச்சிகச் செவ்வாய்; கை-9, தனுர் வியாழன்; கொ-10, மகரச்சனி; டோ-11, கும்பச்சனி; வெள-12, மீனவியாழன் என்று இவ்வாறு கணக்கிட்டறிக.

இப்புத்திகளின் திசையாண்டுகள் முறையே 21+5+9+16+ 7+10+4+4+10 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்தாறாகும்.

வலவோட்டு மீன வியாழன் காலச்சக்கரத் திசைக்கும் இதுவே வாக்கியமாகும். (செய்யுள்-67)

மானேதேன் சர்க்கரைபால் வியாபார மதனால்
மன்னுகப்பல் வாணிகத்தால் சுமையெடுத்தல் தன்னால்
தானேகைப் பொருளுண்டாம் சந்தோடம் மணமும்
சந்ததியுண் டாகுமுற்றார்ப் பிரியமிக வாகும்
ஊனேநும் விடரோகங் காணும் என்றே
உரைப்பரிதன் மேற்சிங்க ரவிபுத்தி தன்னிற்
காணேசத் துருநாசம் ரோகமே நிவர்த்தி
காரியங்கள் சித்தியாந் தனலாபந் தருமே. (31)

(இ-ள்.) மான் போன்றவளே ! இன்னும் கடகத்திங்கள் திசையில் கடகத்திங்கள் புத்தியில் தேன், சர்க்கரை, பால்

வாணிபத்தாலும், கப்பல் வாணிபத்தாலும், சுமைகளைச் சுமத்தலாலும் கைப்பொருள் உண்டாகும்; மகிழ்ச்சியும், திருமணமும், மகப்பேறும் உண்டாகும்; உறவினர் விருப்பம் மிக வளரும்; இவையன்றி உடம்பினை மெலியச் செய்கிற விடநோயும் தோன்றித் தணியும். இத்திசையில் இதன் மேல் சிங்க ஞாயிறு புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள்2, நாள் 19, நாழிகை 32, விநாடி 6 ஆகும்; இதன் பலன்:- பகைவர்க்கேடும், நோய் நீங்கலும், காரிய சித்தியும் பொருட்பேறும் உண்டாகும். (எ-று.)

தருகடக மதிசக்ரந் தனிற்கன்னி புதன்ஊண்
தனில்வித்தை மைந்தர்நிலம் திரீவெள்ளி யுடனே
துருவறுவெண் கலவுருக்கும் வந்தெய்தும் இதன்மேல்
துலாவெள்ளி புத்தியினில் வாகனங்கள் பூமி
வருமென்மேல் வெகுகளத்ரம் கப்பல்வியா பாரம்
வாய்த்தவுற வினர்சேர்க்கை வெள்ளிசெம்பொன் னாடை
எருமையொடு லாபமுண் டாம் என்பார்கள் குடக்கில்
எழுந்தபிறை நுதற்புருவம் பெற்றருள்பூங் கொடியே. (32)

(இ-ள்.) மேற்கில் தோன்றும் பிறை போன்ற நெற்றியையும், புருவத்தையும் பெற்றுள்ள பூங்கொடி போன்றவளே! வலவோட்டுக் கடகத் திங்கள் காலச்சக்கரத் திசையில கன்னிப்புதன் புத்தியின் காலம் ஆண்டு 2, திங்கள் 2, நாள் 11, நாழிகை 9, விநாடி 46 ஆகும்; இதன் பலன்:- கல்வியும், மைந்தரும், நிலமும், பெண்ணும், வெள்ளியாலான பொருள்களும், வெண்கலத்தாற் செய்த ஏனங்களும் வந்து சேரும். இத்திசையில் இதன் மேல் துலா வெள்ளி புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 3, திங்கள் 10, நாள் 26, நாழிகை30, விநாடி 42 ஆகும். இதன் பலன்:- வாகனங்களும், நிலமும் மேன்மேலும் வரும்; பல மனைவியரும், கப்பல் வாணிபமும், உறவினர் சேர்க்கையும், வெள்ளியும், செம்பொன்னும், உடைகளும், எருமையும் கிடைக்கும் என்பர் (எ-ள்.)

பொற்பனைய கா கமதிச் சக்கரத்தி லேதான்
புகலும்விருச் சிகச்செவ்வாய்ப் புத்தியினிற் பன்னிற்
கற்பனையாய்ப் பகைவர்பயம் சோரர்பயம் தலையில்
கனபாரம் ரெத்தபித்தம் பயித்தியரோ கந்தான்
முற்பமக் கினிவாதை வயிற்றிரத்தக் கடுப்பு
மொழியுமுறைப் பாடிதன்மேல் தனுக்குருபுத் தியிலே
எற்புறும்பொன் வித்தைநிலம் ஆடையா பரணம்
இலாபந்திரீ லாபம்வரும் பந்துசவுக் கியமே. (33)

*(இ-ள்.) அழகிய வலவோட்டுக் கடகத்திங்கள் காலச்சக்கரத் திசையில் விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 8, நாள் 15, நாழிகை 20, விநாடி 56 ஆகும்; இதன் பலன்:- கற்பனையாக (உண்மையன்றிப்) பகைவரால் அச்சமும், கள்வரால் அச்சமும், தலைப்பாரமும், இரத்தபித்தம் என்னும் நோயும், பயித்திய நோயும் உண்டாகும். நெருப்பினால் துன்பமும், வயிற்றில் இரத்தக்கடுப்பு என்னும் நோயும், முறைப்பாடும் உண்டாகும். இத்திசையில் இதன் பின்னர், தனுர் வியாழன் புத்தி நிகழும்; இதன் காலம்:- ஆண்டு 2, திங்கள் 5, நாள் 9, நாழிகை 4, விநாடி 11 ஆகும்; இதன் பலன்: மாற்றுயர்ந்த பொன்னும், கல்வியும், நிலமும், உடையும், அணியும், பெண்ணும் கிடைக்கும். உறவினர் சுகம் உண்டாகும். (எ-று.) இப்புத்தியில் அரசரின் அருளும் கிடைக்கும் என்பர்.*

சவுக்கியமாம் கா கமதிச் சக்கரத்தில் மகரச்
சனிபுத்தி தனிற்பந்துக் கலகமெய்யிற் பீடை
உவர்ப்புறுபுத் திரசேதம் மனோதுக்கங் காணும்
உற்றரும்பச் சனிபுத்தி தனில்உறுப்பு நோய்கள்
கூவிப்புறுதீக் கடுநோய்கள் பொருள்கள் மிக அழிவு
கலங்குபயம் சிறைவிலங்கு பிசாசுபயம் உற்றார்
அவப்படுவர் மீனகுரு புத்திவித்தை மைந்தர்
அருண்ஞானம் தானியம்பொன் னடையும்வெகு
மானம். (34)

*(இ-ள்.) வலவோட்டுக் கடகத்திங்கள் காலச்சக்கரத் திசையில் மகரச்சனிப் புத்தியின் காலம் திங்கள் 11, நாள் 21, நாழிகை 37, விநாடி 40 ஆகும். இதன் பலன்:- உறவினரால் கலகம், உடல் துன்பம், புதல்வர்க்குக் கேடு, மனத்துன்பம் என்னும் இவை உண்டாகும். இத்திசையில் இதன்மேல் கும்பச்சனிப் புத்தியின் காலம் திங்கள் 11, நாள் 21, நாழிகை 37, விநாடி 40 ஆகும். இதன் பலன்: உடலுறுப்புக்களில் நோய் தோன்றுதலும், தீய கடுமையான நோய்கள் உண்டாதலும், பொருள் அழிதலும், மனங்கலங்கும்படியான அச்சம் ஏற்படுதலும், சிறைப்படுதலும், விலங்கு பூணப்படுதலும், பேயால் அச்சம் நிகழ்தலும், உறவினர்க்குக் குற்றம் உண்டாதலும் நிகழும் என்பர்; இத்திசையில் மீன வியாழன் புத்தியின் காலம் ஆண்டு 2, திங்கள் 5, நாள் 9, நாழிகை 4, விநாடி 11 ஆகும்; இதன் பலன்:- கல்வியும், மகப்பேறும், திருவருண் ஞானமும், தானியமும், பொன்னும், உபசரிக்கப் படுதலும் உண்டாகும். எ-று.)*

வலவோட்டுக் கர்க்கடகத் திங்கள் காலச்சக்கரம் முற்றும்.

### ஐந்தாவது வலவோட்டுச் சிங்க ஞாயிறு காலச்சக்கரத் திசையாண்டு 5.

*(இத்திசை, வலவோட்டு இடைநாள்களான பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி ஆகிய இவ்வைந்தின் முதற்காலுக்குரியது)*

**தந்தவல வோட்டான சிங்கரவித் திசையாம்**
**சக்கரத்தின் வருடமைந்திற் புத்திவாக் கியந்தான்**
**முந்திய தேர் என்றாரீர் புரியாடல் வெளவாம்**
**மொழிகின்ற பரமாயுள் நூறுண்ணு மிதற்கே**
**வந்தவிருச் சிகம்உடலாம்; மீனமே உயிராம்;**
**வரும்விருச்சி கச்செவ்வாய்ப் புத்தியது தனிலே**
**உந்துநவ மணிபூமி லாபம்யுத்த செயமாம்**
**உற்றபயித் தியநோய்கள் வைராக்யம் என்பார். (35)**

(இ-ள்.) தரப்பட்ட வலவோட்டுச் சிங்கஞாயிறு காலச்சக்கரத் திசையாண்டு ஐந்தாகும்; இதற்குப் புத்தி அறியும் வாக்கியமாவது "தேர் என்றூரீர் புரியாடல் வெள" என்பதாம். இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு நூறாகும்; இம்முழுயாண்டுத் தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணுமென்க; இத்திசைக்கு விருச்சிக இராசி உடலாகும்; மீனவிராசி உயிராகும்; இத்திசையில் உடற்புத்தியாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 4, நாள் 6 ஆகும். இதன் பலன்:- நவமணிப்பேறும், நிலப்பேறும், போரில் வெற்றியும் உண்டாம். பயித்திய நோய் தோன்றும்; வைராக்கியம் உண்டாகும் என்பர். (எ-று.)

**இச்சிங்க ஞாயிறு திசைப்பலன்:**

பிணியும், அரசரால் அச்சமும், வயிற்று நோயும், வெப்பமும், பயித்திய நோயும், தாய் தந்தையர்க்குக் கேடும், புதல்வர், நண்பர், பெண்கள் என்னும் இவர்க்குத் துன்பம் விளைதலும், இரத்த, பித்த நோய் உண்டாதலுமாம் என்பது பலதீபிகை.

"உண்டாம் அரசரால் அழிவும் இளைப்பும் அருக்கன் ஊன்" என்பது சூடாமணி உள்ளமுடையான்.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தியறியும் வாக்கியம் "தேர் என்றூரீர் புரியாடல் வெள" என்பதாம். இதனை தே-8, விருச்சிகச் செவ்வாய்ப்புத்தி; எ-7, துலாவெள்ளி புத்தி; றூ-6, கன்னிப் புதன் புத்தி; ரீ-4, கடகத்திங்கள் புத்தி; பு-5, சிங்க ஞாயிறு புத்தி; ரி-3, மிதுன புதன் புத்தி; யா-2, இடபவெள்ளிப்புத்தி; ட-1, மேடச்செவ்வாய்ப் புத்தி; வெள-12, மீனவியாழன் புத்தி என்று கணக்கிட்டறிக.

இவற்றின் திசையாண்டுகள் முறையே 7+16+9+21+5+9+16+7+10 ஆகும். இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு நூறாகும்.

பார்மன்னுந் துலாவெள்ளி புத்திதலைப் பாரம்
　　பகர்கண்ட நோய்கள்குரல் தடிப்புசுர பயமாம்
சீர்மன்னும் பெண்லாபம் சரீரந்தூர்ப் பலமாம்
　　தேசமேற் றிரிதல்பசு வினங்கலைமத் திமமாம்
பேர்மன்னுங் கன்னிபுதன் புத்திதனில் வாந்திப்
　　பிராந்திகுட்ட நோய்வெற்றிப் பயணங்கள் மென்மேல்
ஏர்மன்னு புத்திரவத் திரலாபம் கீர்த்தி
　　இயலுற்றார் நலமென்றே இயம்பினர்கூற் றவரே. (36)

(இ-ள்.) உலகத்திலே பொருந்திவரும் வலவோட்டுச் சிங்கஞாயிறு காலச்சக்கரத் திசையில் துலா வெள்ளிப் புத்தியின் காலம் திங்கள் 9, நாள் 18 ஆகும். இதன் பலன்:- தலைக்கனமும், கழுத்தைப் பற்றிய நோயும், குரலோசை கெட்டுத் தடிப்பாகவொலித்தலும் சுரநோயாற் பயமும் உண்டாகும்; பெண் லாபம் கிட்டும்; உடம்பின் பலம் குறையும்; தேசங்களில் அலைந்து திரிதலும், பசுக்கூட்டத் திற்கும் கன்று முதலானவற்றிற்கும் மத்திப பலனும் நிகழும். இத்திசையில் இதன்பின் கன்னிப்புதன் புத்தி நிகழும்; இதன் காலம்: திங்கள் 5, நாள் 12 ஆகும். இதன் பலன்:- வாந்தியும், மயக்கமும், குறைப்புண்ணும் உண்டாகும்; இவையன்றி தொடங்கிய செயலில் வெற்றியும், மேலும் பல பயணங்கள் ஏற்படுதலும், புதல்வரும் ஆடையும் புகழும் உறவினர் சுகமும், உண்டாகலும் ஆம் என்பர். (எ-று.)

கற்றகன்னி தனிலிருந்து கடகத்திற் பாயும்
　　கருதிலிது மண்டூக மாகுமிதன் பலன்றான்
உற்றசல கண்டமுடன் வயிற்றுப் பேதி
　　உகந்தபெண்கள் உறவினர்தங் கேடுபிதுர்க் கண்டம்
முற்றியதோர் வாதநோய் காட்டும் என்பார்
　　மொழிந்திடுகர்க் கடகமதி புத்தியிற்பொன் வரத்து
கொற்றமும் இடர்நாசம் சரீரசவுக் கியமாம்
　　கூறியதூர்ச் சனர்நேசம் தலைநோயுண் டாகும். (37)

*(இ-ள்.)* சிங்கஞாயிறு திசையுள் கன்னிப்புதன் புத்தி நடந்து முடிந்தபின் அடுத்த புத்தி கன்னியிலிருந்து கடகத்திற்கு பாய்ந்து நடக்குமென்க. இதனைக் கருதினால் இது தவளைக் கதியாகும். இக்கதி நிகழும் பொழுது நடக்கும் பலன்றான்: தண்ணீரால் தத்தும், வயிற்றோட்டமும், பெண்களுக்கும், உறவினர்களுக்குங் கேடும், தந்தைக்குத் தத்தும், முதிர்ந்த வாத நோயும் உண்டாகும் என்பார். இக்கடகத் திங்கள் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 0, நாள் 18 ஆகும். இதன் பலன்:- பொன் கிடைக்கும், வெற்றி யுண்டாம், இடையூறு நீங்கும், உடல் நலமாயிருக்கும், தீய மக்கள் உறவு உண்டாகும். தலைநோய் தோன்றும். (எ-று.)

இப்பாட்டின் முதலடி, "கற்றகன்னி தனிலிருந்து கடகத்திற் பாயும் கருதிலிது மயூரகதி யாகுமிதன் பலன்றான்" என்றும் பாடபேதம் காணப்படுகிறது. இந்நூல் 20 ஆம் பாட்டில் கன்னியிலிருந்து கடகத்திற் பாய்தல் தவளைக்கதி என்றே கூறப்பட்டுள்ளது. இதனைச் சூடாமணி உள்ளமுடையானும், பலதீபிகையும் தவளைக்கதி என்றே கூறுகின்றது.

காட்டியகர்க் கடகநின்று சிங்கத்திற் புரளும்
காண்கிலிது சர்ப்பகெதி தனிற்கிழக்கே பயணம்
நாட்டியதோர் வலப்புறத்திற் கிரந்திகுன்ம ரோகம்
நலிவுற்ற வாதபித்தம் சிலேத்துமமே காணும்
ஈட்டியசிங் காதித்தன் புத்தியில்வெள் ளாண்மை
எய்திடும்பூ டணம்பூமி லாபபுத்ர லாபம்
வீட்டில்வைத்துக் கெட்டபொருள் தானும்வந்து சேரும்
வேந்தர்பயம் வேந்தர்வெகு மானசத்ரு பயமே. (38)

*(இ-ள்.)* இவ்வலவோட்டுச் சூரிய திசையுள் கடகச் சந்திரபுத்தி நடந்து முடிந்தபின் மிதுன புதன் புத்தி நடைபெறாமல் பின்னோக்கிச் சிங்க இராசியிற் புரளும்; ஆராயில், இது பாம்புக்கதியாகும்; இக்கதி நிகழும்பொழுது கிழக்கே பயணமும், உடம்பின் வலப்பக்கத்தில் கிரந்தி

என்னும் நோயும், குன்ம நோயும், வாதபித்த சிலேத்துமங் களால் நலிவும் உண்டாகும். இச்சிங்க ஞாயிற்றின் புத்திக் காலம் திங்கள் 3 ஆகும். இதன் பலன்:- வேளாண்மைத் தொழில் உண்டாகும்; அணிகளும் நிலமும் கிட்டும்; மகப்பேறுண்டாகும்; வீட்டினில் வைத்து இழந்துபோன பொருள் வந்துசேரும்; அரசரால் அச்சமும், அரசரால் உபசரிப்பும், பகைவரால் அச்சமும் உண்டாகும். (எ-று.)

பயக்குமிந்தச் சிங்கம்நின்றே மிதுனத்திற் றாண்டும்
பகரிலிது மண்டுகப் பாய்ச்சலிதன் பலன்தான்
நயக்குமனை யாள்பீடை பிதுர்பந்துக் கிலேசம்
நல்குமென்பார் மிதுனபுதன் புத்திமனோ துக்கம்
மயக்கமறும் ஞானநிரோ தனங்கன்ம நாசம்
மன்னுதனச் சேதமுடன் அபவாதம் உண்டாம்
தியக்கமுறும் சத்துருவால் பயம்பீடை காட்டும்
செய்யதா மரைமுகைபோல சிவந்தெழுபூண்
முலையே. (39)

(இ-ள்.) சிவந்த தாமரை அரும்பு போலச் சிவந்து எழுகின்ற பூணணிந்த நகிலினைஉடையாளே! வலவோட்டுச் சிங்க ஞாயிறு திசையுள் சிங்க ஞாயிற்றின் புத்தி நடந்து முடிந்தபின் சிங்க இராசியிலிருந்து மிதுன விராசியிற் றாண்டும்; பகரில் இக்கதியைத் தவளைப்பாய்ச்சல் என்பர். இக்கதி நிகழும்பொழுது விளையும் பலன்றான் மனைவிக்குத் துன்பமும், தந்தை உறவினர் என்னும் இவர்களைப் பற்றிய கவலையும் கொடுக்கும் என்பர். இம்மிதுன புதன் புத்தியின் காலம் திங்கள் 5, நாள் 12 ஆகும்; இதன் பலன்:- மனத்துன்பமும், மயக்கமற்ற உண்மை ஞானத்திற்குத் தடையும், தொழிற்கேடும், பொருட்சேதமும், குற்றமான சொல்லும் உண்டாகும். பகைவரால் அச்சமுந், துன்பமும் உண்டாகும். (எ-று.)

முதலடியில் "பகரிலிது பன்னகத்தின் பாய்ச்சலிதன் பலன்றான்" என்றும் பாடம் உண்டு. சிங்கவிராசியிலிருந்து

*மிதுன விராசியிற் பாய்வதைச் சூடாமணி உள்ள முடையான் உரை குக்குடகதி என்று கூறுகிறது; பலதீபிகை தவளைப் பாய்ச்சல் என்று கூறுகிறது.*

பூணிலகும் இடபவெள்ளிப் புத்தியில்ஆ பரணம்
பொருந்துதிரீ லாபம்அலங் காரமன்னர் கோபம்
நீணிலமேற் றிரிதல்மனோ பயஞ்சோர பயமாம்
நீடுசுரப் பிணிசெம்பொன் போம்கொறிசேய் புத்தி
காணில்மன்னர் வெகுமானம் இராசபய மாகும்
கைப்பொருள்போம் மனோபீதி மீனகுரு புத்தி
காணில்மன்னர் வெகுமானம் இராசபய மாகும்
கைப்பொருள்போம் மனோபீதி மீனகுரு புத்தி
நாணிறைபொன் கரிபரிதண் டிகைபூமி பணிகள்
நல்குமான மகிழ்ச்சியுண்டாம் சத்துருநா சனமே. (40)

*(இ-ள்.) வலவோட்டுச் சிங்கஞாயிறு திசையுள் இடப வெள்ளிப் புத்தியின் காலம் திங்கள் 9, நாள் 18, ஆகும்; இதன் பலன்:- அணிகலனும், பெண்ணும் கிடைக்கும். தன்னை அழகு செய்து கொள்ளுதலும், அரசரால் சினமும், உலகத்திற் சஞ்சரித்தலும், மனத்தில் அச்சமும், கள்வரால் அச்சமும், நீண்ட சுரநோயும் உண்டாகும்; செம்பொன் கெடும். இத்திசையில் இதன்பின் மேடச்செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 4, நாள் 6 ஆகும்; இதன்பலன்:- அரசரால் உபசரிப்பும் அவர்களால் அச்சமும் உண்டாகும். கைப்பொருள் போகும்; மனத்தில அச்சமும் உண்டாகும்; இத்திசையில் இதன்பின் மீனவியாழன் புத்தி நடக்கும்; இதன் காலம் திங்கள் 6 ஆகும். இதன் பலன்:- நாடோறும் நிறைந்த பொன்னும், யானையும், குதிரையும், பல்லக்கும், நிலமும், அணிகளும் ஆகிய இவற்றைக் கொடுக்கும்; மனமகிழ்ச்சியைத் தரும்; பகைவர்தம் கேட்டையும் கொடுக்கும். (எ-று.)*

*ஈற்றடியில் "நல்குமண மகிழ்ச்சி" என்றும் பாடம்.*

*சிங்கஞாயிறு காலச்சக்கரம் முற்றும்.*

## ஆறாவது வலவோட்டுக் கன்னிப்புதன் காலச்சக்கரத் திசையாண்டு ஒன்பது

*(இத்திசை, வலவோட்டு இடைநாட்களான பரணி; பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி ஆகிய இவ்வைந்தின் இரண்டாங் காலுக்குரியது.)*

**வென்றிவல வோட்டான கன்னிபுதன் றனக்கே**
**விளம்பியசக் கரத்திசைதான் வருடமொன் பதாகும்;**
**என்றபுத்தி கோன்கொடை வல் லார்திக்கீர்முப்பூண்**
**என்னுமெண் பத் தைந்தினிலே பிரித்துண் ணு; மிதற்கே**
**ஒன்றியதே கங்குடமாம்; உயிர்கன்னி யாகும்;**
**உரைத்தகும்பச் சனிபுத்தி தனிற்றேக மீனை**
**துன்றியசத் துருவேதை நிலைபிரிதல் துக்கம்**
**சொன்னவிடாக் கினியயமாம் தனச்சேதம் சொல்லே. (41)**

*(இ-ள்.)* வென்றியைத் தரும் வலவோட் டாகிய கன்னிப்புதன் காலச்சக்கரத் திசையாண்டு ஒன்பதாகும்; இத்திசைக்குப் புத்திமுறை அறிந்துகொள்ளும் வாக்கிய மாவது "கோன்கொடை வல்லார்திக்கீர் முப்பூண்" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தைந் தாகும்; இத்திசையை இதன் புத்திகள் இம்முழுயாண்டுத் தொகையால் பிரித்துண்ணு மென்க; இத்திசைக்கு உடலிராசி கும்பமாகும்; உயிரிராசி கன்னியாகும்; இத்திசையில் உடற்புத்தியாகிய கும்பச்சனிப் புத்தியின் காலம் திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- உடல் துன்பமும், பகைவரால் துன்புறுத்தப்படுதலும், இருப்பிடம் விட்டுப் பிரிதலும், மனத்துன்பமும், நஞ்சினாலும், நெருப்பினாலும், அச்சமும், பொருட் சேதமும் சொல்வாய். *(எ-று.)*

வலவோட்டு மிதுன புதன் திசைக்குக் கூறிய பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

*இத்திசைக்குப் புத்தி வாக்கியம் "கோன் கொடை வல்லார் திக்கீர் முப்பூண்" என்பதாம்; இதனை கோ-11, கும்பச்சனிப்புத்தி; கொ-10, மகரச்சனிப்புத்தி; டை-9, தனுர்வியாழன் புத்தி; வ-1, மேடச்செவ்வாய்ப்புத்தி; லா-2, இடப வெள்ளிப்புத்தி; தி-3, மிதுன புதன் புத்தி; கீ-4, கடகத் திங்கள் புத்தி; மு-5, சிங்க ஞாயிறு புத்தி; பூ-6, கன்னிப் புதன் புத்தி என்று கணக்கிட்டறிக.*

*இவற்றின் திசையாண்டுகள் முறையே 4+4+10+7+16+9 + 21+5+9 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்தைந்தாகும்.*

சொல்லுமக ரச்சனியின் புத்தியிநீர்ப் பாடு
சுரம்பூத பசாசுகளால் பயம்வயிற்று வலியாம்
அல்லலுறும் நால்வகையால் கிலேசமுண்டா மிதன்மேல்
ஆனத்தனுக்குக் குருபுத்தி அதனில்வித்தை லாபம்
நல்லசெம்பொன் வத்திரா பரணமிவை லாபம்
நாட்டுதெய்வ குருபத்தி பராக்கிரமம் உண்டாம்
வெல்லுமிந்தத் தனுசில்நின்று மேடத்தில் தாண்டும்
வினவிலிது சிங்காவ லோகனமாம் மின்னே. (42)

*(இ-ள்.) மின்னல் போன்றவளே! வலவோட்டுக் கன்னிப்புதன் காலச்சக்கரத் திசையுள் மகரச்சனிபுத்திக் காலம் திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- நீரிழிவு நோயும், சுரநோயும், பூதங்களாலும், பேய்களாலும், அச்சமும், வயிற்றுவலியும், அல்லலும் உண்டாகும். பலவகைக் கவலைகளும் தோன்றும். இத்திசையில் இதன்மேல் தனுர் வியாழப்புத்தி நடக்கும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 0, நாள் 21, நாழிகை 10, செம்பொன்னும், ஆடையும், அணிகளும் கிடைத்தலும், தெய்வபத்தி, குருபத்தி செய்தலும் வீரச்செயல் புரிதலும் உண்டாகும்; இதன்பின் தனுசில் நின்று விருச்சிகத்திற் செல்லாமல் பின் நோக்கி மேடவிராசியிற் பாயுமென்க; இது சிங்காவ லோகன கதியாகும். (எ-று.)*

சக்கரம்-6

பலதீபிகை தனுசிலிருந்து மேடம் பாய்வதைத் துரக கதி என்று கூறுகிறது; ஆனால் சூடாமணி உள்ளமுடையான் உரை இதனைச் சிங்காவலோகன கதி என்றே கூறுகிறது.

மின்னுமிதன் பலன்கருவி சர்ப்பபயம் உண்டாம்
மிக்கமனத் தாபம்பிதுர்க் கிலேசம்மே காட்டும்
பன்னுமே டக்குசன்றன் புத்தியனல் வாதை
பந்துக்கள் நாசசுர பயம்வேந்தர் கோபம்
மன்னர்வெகு சன்மானம் வசூரிநீர்ப் பாடு
வருமிடப வெள்ளிபுத்தி தனலாபம் பசும்பொன்
உன்னுமொட்ட கம்பூமி கொறிலாபம் புத்ரர்
உற்றார்கள் விருப்பமென உரைத்திடவே வேண்டும். (43)

(இ-ள்.) கன்னிப்புதன் காலச்சக்கரத் திசையுள் மேற்கூறிய சிங்காவலோகன கதி நிகழும் பொழுது படைக்கருவிகளாலும், பாம்பாலும் அச்சம் உண்டாகும். மனத்திலே விசனமும், தந்தையைப் பற்றிய கவலையும் தோன்றும்; இம்மேடச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள்8, நாள்26, நாழிகை 49, விநாடி 25 ஆகும். இதன் பலன்:- நெருப்பினால் துன்பமும், உறவினர் கேடும், சுரநோயைப் பற்றிய அச்சமும், அரசரால் கோபிக்கப்படுதலும், அவர்களால் உபசரிக்கப்படுதலும், அம்மை நோயும், நீரிழிவு நோயும் தோன்றும்; இத்திசையுள் அடுத்து இடப வெள்ளி புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 8, நாள் 9, நாழிகை 52, விநாடி 57 ஆகும்; இதன் பலன்:- பொருட்பேறும், பொன்னும், ஒட்டகமும், நிலமும், ஆடும் ஆகிய இவை கிடைத்தலும், மக்கள் , உறவினர் விருப்பமும் உண்டாகு மென்று சொல்லவேண்டும். (எ-று.)

வேண்டுமிதன் மேல்மிதுன புதன்புத்தி தன்னில்
மிகுசூது வாணிபத்தா லிலாபந்தன லாபம்
ஈண்டியபுத் திரர்மணிக ளிலாபஞ்சந் தோடம்
இதன்மேலும் கடகமதி புத்தியிற்கா மாலை

பூண்டசுரம் பீனிசஞ்சஞ் சாரத்தீச் சிந்தை
பொருந்துகுரு நாசங்கன்று காலிதனச் சேதம்
தூண்டியவா கனமுடக்கம் வாகனத்தாற் பயமாந்
துடியிடையும் புயமுகைபோல் துணைமுலையுஞ்
சுகமே. (44)

(இ-ள்.) உடுக்கை போன்ற இடையும், தாமரை அரும்பு போன்ற நகிலும் உடைய கிளிபோன்றவளே! வலவோட்டுக் கன்னிப் புதன் திசையுள் மிதுன புதன் புத்தியின் காலம் திங்கள்11, நாள்13, நாழிகை 3, விநாடி 32 ஆகும். இதன் பலன்:- சூதான வாணிபத் தொழிலால் பொருட்பேறும்; வேறு தொழிலால் பொருட்பேறும்; மக்கட்பேறும்; மணிகள் கிடைத்தலும், மகிழ்ச்சியும் உண்டாகும்; இத்திசையுள் இதன்மேல் கடகத்திங்கள் புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 2, திங்கள் 2, நாள் 20, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- காமாலை, சுரம், பீனிசம் என்னும் நோய்களும், உலக சஞ்சாரமும், பாவ எண்ணமும், தனக்குப் பொருந்திய குருவிற்குக் கேடும். கன்று, பசுக்கூட்டம், பொருள் இவற்றிற்குச் சேதமும், ஊர்திகளுக்கு முடக்கமும், ஊர்தியால் அச்சமும் நிகழும் (எ-று.)

சுகமிகுசிங் காதித்தன் புத்திதனி லேதான்
சூரியமந் திரசித்தி சத்துருவால் வேதை
நிகருமணி லாபங்கா ரியத்தால் லாபம்
நீர்ப்பயமுண் டாமிதன்மேல் கன்னிபுதன் புத்தி
பகரில்சுபம் தெய்வபூ சனைகள்கனச் செல்வம்
பாரில்போ சனசவுக்கியம் தேகசவுக் கியமாம்
திகழரசர் சந்தோடம் தனலாபம் உண்டாம்
திறமுடையோர் கணித்தவிதி செப்பியதிப் படியே. (45)

(இ-ள்.) வலவோட்டுக் கன்னிப்புதன் காலச்சக்கரத் திசையுள் சிங்க ஞாயிறு புத்தியின் காலம் திங்கள் 6, நாள் 10, நாழிகை 35, விநாடி 18; இதன் பலன்:- சூரிய மந்திரம் கிடைத்தலும், பகைவரால் துன்புறுத்தப்படலும், நவமணி

கிடைத்தலும், தொழிலாற் பயன் கிடைத்தலும் உண்டாகும்; தண்ணீரால் அச்சம் உண்டாம்; இத்திசையுள் இதன்மேல் கன்னிப்புதன் புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 11, நாள் 13, நாழிகை 3, விநாடி 32 ஆகும். இதன் பலன்:- திருமணம் முதலான நற்காரியமும், கடவுள் வழிபாடும், மிகுதியான செல்வமும், உணவின் சுகமும், உடல் நலமும், அரசரால் மகிழ்ச்சியும், பொருட்பேறும் உண்டாகும் என்று அறிவுடையோர் கருதிக் கூறியமுறை இதுவாகும். (எ-று.)

முதலடியில் சூரிய சித்தி என்று பாடம்.

வலவோட்டுக்கன்னிப்புதன் காலச்சக்கரம் முற்றும்.

## ஏழாவது, வலவோட்டுத் துலா வெள்ளிக் காலச்சக்கரத் திசையாண்டு பதினாறு

(இத்திசை, வலவோட்டு இடைநாட்களாகிய பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி ஆகிய இவ்வைந்தின் மூன்றாங்காலுக்கக்குரியது.)

அணிவலவோட் டானதுலா வெள்ளிசக்ர திசைதான்
ஆண்டுபதி னாறுக்கும் புத்திவாக் கியமே
துணிவிலெம் பேரைத்தொட் டோர்வெளதே னெட்டூர்
சொன்னவாக் கியம்வருடம் எண்பத்து மூன்றும்
தணிவின்றிப் பிரித்துண்ணுந் துலாத்திற்கே உடலம்
தருந்துலா மாம்; கன்னிச் சீவனென்கை யாலே
பணிதுலா வெள்ளிபுத்தி தனிற்கீத நிருத்தம்
பரிமளம்சோ பனம்உழவு வாணிபத்திற் செயமே. (46)

(இ-ள்.) அழகிய வலவோட்டான துலா வெள்ளிக் காலச்சக்கரத் திசையாண்டு பதினாறாகும்; இதற்குப் புத்தி கொள்ளும் முறையை அறியும் வாக்கியமாவது எம்பேரைத் தொட்டோர் வெளதே னெட்டூர் என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்; இதனால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணும் என்க; இத்திசைக்கு உடலிராசி துலாமாகும்; உயிரிராசி

கன்னியாகும்; இத்திசையின் முதற்புத்தியாகிய துலா வெள்ளிப் புத்தியின் காலம் ஆண்டு 3, திங்கள் 1, நாள் 0, நாழிகை 21, விநாடி 41 ஆகும். இதன் பலன்:- இசைப்பாட்டும், நாட்டியமும், நறுமணப் பொருள்களும், சுபத்தைத் தரும் பொருள்களும் ஆகிய இவற்றைப் பெற்று நுகர்தலுண்டாகும்; உழவுத்தொழில், வாணிபத் தொழில் களில் வெற்றியுண்டாகும். (எ-று.)

வலவோட்டு இடப வெள்ளிக்குக் கூறிய திசைப் பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தி அறியும் வாக்கியம், "எம்பேரைத் தொட்டோர் வெளதே னெட்டூர்" என்பதாம்; இவ் வாக்கியத்தை எ-7, துலா வெள்ளிப்புத்தி; பே-8, விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி; ரை-9, தனுர் வியாழன் புத்தி; தொ-10, மகரச்சனிப்புத்தி; டோ-11, கும்பச்சனிப் புத்தி; வெள-12, மீனவியாழன் புத்தி; தே-8, விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி; னெ-7, துலா வெள்ளிப் புத்தி; டூ-6, கன்னிப்புதன் புத்தி முறையே 16+7+10+4+4+10+7+16+9 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்.

**செயலுடைய விருச்சிகச்சேய் புத்தியினில் துணைவர்**
**திகழ்தந்தை பீடைமனோ பயம்விரணம் சுரத்தால்**
**பயமிகுதி யாமிதன்மேற் றனுக்குருவின் புத்தி**
**பாக்கியமா சாரம்மைந்தர் இலாபசுதந் தரமாம்**
**இயலுமிதன் மேல்மகரச் சனிப்புத்தி தனிலே**
**இராசபகை தனக்கேடு பிதுர்ப்பீடை பூமி**
**செயலழியும் கும்பசனி புத்தியினில் துக்கம்**
**திரவியமைந் தரும்நாசம் சோரர்சத்ரு பயமே. (47)**

(இ-ள்.) வலவோட்டுத் துலாவெள்ளித் திசையில் விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 4, நாள் 5, நாழிகை 46, விநாடி 59 ஆகும்; இதன் பலன்:-

பலவகைச் செல்வமும், நல்லொழுக்கமும், மகப்பேறும், உரிமையாயிருத்தலும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் தனுர் வியாழன் புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 4, நாள் 5, நாழிகை 46, விநாடி 59 ஆகும்; இதன் பலன்:- உடன் பிறந்தார்க்கும், தகப்பனுக்கும், துன்பமும், மனத்திலே அச்சமும், புண்களும், சுரநோயால் அச்சமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் தனுர்வியாழன் புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 11, நாள் 3, நாழிகை 58, விநாடி33 ஆகும்; இதன் பலன்:- பலவகைச் செல்வமும், நல்லொழுக்கமும், மகப்பேறும், உரிமையாயிருத்தலும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் மகரச்சனிப் புத்தி நிகழும்; இதன் காலம்: திங்கள் 9, நாள் 7, நாழிகை 35, விநாடி26 ஆகும்; இதன் பலன்:- அரசருடைய பகையும், பொருட்கேடும், தகப்பனுக்குத் துன்பமும், நிலத்தைப் பற்றிய தொழிற்கேடும் உண்டாம். இத்திசையில் இதன்மேல் நடப்பது, கும்பச்சனிப் புத்தியாகும்; இதன் காலம் திங்கள் 9, நாள் 7, நாழிகை 35, விநாடி 26 ஆகும்; இதன் பலன்:- மனத்துக்கமும், பொருட்கேடும், மைந்தர்க்கேடும், கள்வரால், பகைவரால் அச்சமும் நிகழும். (எ-று.)

**சத்தியமாம் மீனகுரு புத்தியிலா சாரம்**
**தருமசுதந் திரம்சீலம் சம்பத்து விருத்தி**
**சுத்தியபோ சனம்பூமி லாபஞ்சல் லாபம்**
**சொல்லுமிந்த மீனம்நின்றே விருச்சிகத்திற் பாயும்**
**வைத்ததொரு சிங்காவ லோகனமிப் பலன்றான்**
**மனோதுக்கம் இராசபயம் வயிற்றுளைவல் லாமல்**
**அத்திசுரம் அக்கினிசத் துருவிடத்தால் பயமாம்**
**அரிதான பூமிதானம் நாசனமாம் அணங்கே.** (48)

(இ-ள்.) அணங்கு போன்றவளே! வலவோட்டுத் துலா வெள்ளித் திசையில் மீனவியாழன் புத்தியின் காலம் ஆண்டு1, திங்கள் 11, நாள் 3, நாழிகை 58, விநாடி 33 ஆகும். இதன் பலன்:- நல்லொழுக்கமும், அறத்தினை உரிமையாகச் செய்தலும், நற்பண்பும், செல்வப்பெருக்கமும், தூய

உணவும், நிலம் கிடைத்தலும், உறவினருடன் உவப்பாய்ப் பேசுதலும் உண்டாகும். இப்புத்தி நிகழ்ந்து முடிந்தபின்பு, மீனஇராசியிலிருந்து விருச்சிக இராசியிற் பாயு மென்க; இது சிங்காவ லோகன கதியாகும்; இக்கதி நிகழுங்கால் மனத்துன்பமும், அரசரால் அச்சமும், வயிற்றுவலியும் உண்டாகும். இவையல்லாமல் எலும்பைப் பற்றிய சுரநோயும், நெருப்பால் பகைவரால் நஞ்சினால் அச்சமும் நிகழும்; அருமையான நிலமும், பொருளும் அழியும். (எ-று.)

**அணங்கரசே! விருச்சிகர்செவ் வாய்ப்புத்தி தனிலே**
**அத்திசுரம் சுரதாகம் தேகவுட்ண மாகும்**
**குணங்கொள்பிதுர்ப் பீடைதனச் சேதமிதன் மீதில்**
**கூறுதுலா வெள்ளிபுத்தி தனிற்கிருஷி லாபம்**
**இணங்கியவா கனங்கலைபொன் பாரியுமே லாபம்**
**ஏற்றசவுக் கியஞானச் சிந்தையிதன் மீதில்**
**வணங்குகன்னி புதன்புத்தி தனிற்செம்பொன் மைந்தர்**
**வாகனமா ரோக்கியஞ்சந் தோடமென வகுப்பர். (49)**

(இ-ள்.) அணங்குகளுக்கெல்லாம் அரசாயிருப்பவனே! வலவோட்டுத் துலாவெள்ளித் திசையில் இவ்விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 4, நாள் 5, நாழிகை 46, விநாடி 59 ஆகும்; இதன் பலன்:- எலும்பைப் பற்றிய சுரநோயும், சுரவெப்பமும், உடல் வெப்பமும், தந்தைக்குத் துன்பமும், பொருட்சேதமும் உண்டாகும்; இதன்மேல் இத்திசையில் துலா வெள்ளிப் புத்தி நிகழும்; இதன்காலம் ஆண்டு 3, திங்கள் 1, நாள் 0, நாழிகை 21, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- செம்பொன்னும் புதல்வரும் ஊர்திகளும் நோயற்ற வாழ்வும், மகிழ்ச்சியும் உண்டாகும் என்று வகுத்துக் கூறுவர். (எ-று.)

வலவோட்டுத் துலா வெள்ளிக் காலச்சக்கரத் திசை முற்றும்

## எட்டாவது வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்க் காலச்சக்கரத் திசையாண்டு ஏழு

*(இத்திசை, வலவோட்டு இடை நாட்களாகிய பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி ஆகிய ஐந்தின் நான்காங்காலுக்குரியது)*

தடங்கோள்வல வோட்டான விருச்சிகச்செவ் வாய்தன்
சக்கரத்தின் திசைவருடம் ஏழுக்குந் தானே
தொடர்ந்தபுத்தி வாக்கியந்தான் வரலாறு கூறில்
சொல்லும் நீடுதிலாபம் கௌவோர்சொல்லை யதாம்
அடங்கலுமெண் பத்தாறில் பிரித்துண்ணு மிதற்கே
அருட்கடகம் உடல்; வில்லு உயிராகும் என்பர்;
இடம்பெறுகர்க் கடகமதி புத்தியினிற் பூமி
எழின்மணிபுத் திரர்தனதா னியலாபம் வருமே. (50)

*(இ-ள்.) பெருமையை யுடைய வலவோட்டாகிய விருச்சிகச் செவ்வாய்க் காலச்சக்கரத் திசையாண்டு ஏழாகும்; இத்திசைக்குப் புத்திமுறை அறிந்துகொள்ளும் வாக்கிய மாவது நீடுதி லாபம் கௌவோர் சொல்லை என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தாறாகும்; இத்தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணு மென்க; இத்திசைக்கு உடலிராசி கடமாகும்; உயிரிராசி தனுசாகும்; இத்திசையின் முதற்புத்தியாகிய கடகத் திங்கள் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 8, நாள் 15, நாழிகை 20, விநாடி 56 ஆகும்; இதன் பலன்:- நிலங்களும், அழகும், நவமணியும், புதல்வரும், பொருட்பேறும், தானியப்பேறும் உண்டாம். (எ-று.)*

*வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசைக்குக் கூறிய திசைப் பலன்களையே இத்திசைக்குங் கொள்க.*

**வாக்கிய விளக்கம்:**

*இத்திசைக்குப் புத்தி அறியும் வாக்கியம் "நீடுதி லாபம் கௌவோர் சொல்லை" என்பதாம்; இவ்வாக்கியத்தை நீ-4,*

*கடகத்திங்கள் புத்தி; டு-5, சிங்க ஞாயிறு புத்தி; தி-3, மிதுன புதன் புத்தி; லா-2, இடப வெள்ளிப் புத்தி; ப-1, மேடச் செவ்வாய்ப் புத்தி; கௌ-12, மீன வியாழன் புத்தி; வோ-11, கும்பச் சனிப் புத்தி; சொ-10, மகரச்சனிப் புத்தி; லை-9, தனுர் வியாழன் புத்தி என்று கணக்கிட்டறிக; இப்புத்திக் கோள்களின் திசையாண்டுகள் முறையே 21+5+9+16+10+4+4+10 ஆகும்; இவற்றைக் கூட்டிய முழுயாண்டுத் தொகை எண்பத்தாறாகும்.*

**வருமிரவிப் புத்திவலப் பாரிசத்திற் கிரந்தி**
**வருங்கிழக்கே யாத்திரையாம் போர்ச்செயலில் வெற்றி**
**பெருகுதன தானியம்மா ணிக்கமுத்து லாபம்**
**பெறுமிதன்மேல் சிங்கவிரா சியிலிருந்து நீங்கிப்**
**பருகுமிது னந்தனிலே குதிப்பதுமண் டூகப்**
**பாய்ச்சலிதன் பலன்வயிறு பேதிதீ ரோகம்**
**தருவாத நோயுண்டாம் மிதுனபுதன் புத்தி**
**தனில்தேக உட்ணம்பசு நாசம்பல் பயமே. (51)**

*(இ-ள்.) வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசையில் சிங்க ஞாயிறு புத்தியின் காலம் திங்கள் 4, நாள் 26, நாழிகை 30, விநாடி 42 ஆகும்; இதன் பலன்:- வலப்பக்கத்திற் கிரந்தி என்னும் நோய் வரும்; கீழ்த்திசையில் பயணம் உண்டாகும்; போரில் வெற்றி கிட்டும்; மிக்க பணமும், தானியமும், மாணிக்கமும், முத்தும் கிடைக்கும். இத்திசையில் இதன்மேல் அடுத்த புத்தி, சிங்க இராசியிலிருந்து மிதுனத்திலே குதித்து நடக்கும்; இது தவளைக்கதியாகும்; இக்கதி நிகழும்பொழுது வயிற்றோட்டமும், பெண் நோயும், வாதநோயும் உண்டாகும்; இம் மிதுன புதன் புத்தியின் காலம் திங்கள் 8, நாள் 23, நாழிகை 43, விநாடி 15 ஆகும்; இதன் பலன்:- உடல் வெப்பமும், பசுக்களுக்குக் கேடும், பலவகை அச்சமும் உண்டாகலாம். (எ-று.)*

*· சிங்கத்திலிருந்து மிதுனம் பாய்வதைக் குக்குடகதி என்று கூறுகிறது சோதிடக் களஞ்சியம் என்னும் நூல்.*

பலமாகும் இடபவெள்ளி புத்திதனச் சேதம்
பசுநட்டம் திரீபீடை மந்திரவிக் கினமாம்
புலவுடலில் பீடையிதன் மேன்மேடச் செவ்வாய்ப்
புத்தியிலக் கினிமன்னர் சோரர்சுரம் கருவி
இலகுபயம் உண்டிதன்மேல் மீனகுரு புத்தி
எழில்ஞான சிந்தைகுரு புத்திதனலாபம்
நலமிகுபாக் கியமுண்டாம் நன்மக்கட் பேறும்
நன்மையுண்டாம் கல்வியது நலமாக வளரும். (52)

*(இ-ள்.)* வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசையில் இடபவெள்ளிப் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 3, நாள் 18, நாழிகை 50, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- பணச்சேதமும், பசுக்கள் கெடுதலும், பெண்களுக்குத் துன்பமும், ஆராய்வதற்குத் தடையும், உடல் துன்பமும் நிகழும்; இதன் மேல் இத்திசையில் மேடச்செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன் காலம்: திங்கள் 6, நாள் 25, நாழிகை 6, விநாடி 59 ஆகும். இதன் பலன்:- தீயினாலும், கள்வராலும், சுரநோயாலும், வாள் முதலான கருவிகளாலும் அச்சம் வரும். இத்திசையில் இதன் மேல் மீன வியாழன் புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 9, நாள் 23, நாழிகை 1, விநாடி 24 ஆகும்; இதன் பலன்:- அழகிய ஞானத்தைப் பற்றிய எண்ணமும், ஆசிரியனிடத்திலே அன்பு செய்தலும், பலவகைச் செல்வமும், நன்மக்கட்பேறும், பல நலங்களும் உண்டாகும்; கல்வி வளர்ச்சி அடையும். (எ-று.)

வளர்கும்பச் சனிப்புத்தி தன்னில்தன லாபம்
வந்தபிணிப் பகைநாசம் நீசப்பெண் போகம்
தளர்வின்றி வேசையரைப் புணர்தலால் நோய்கள்
தாமுண்டாம் மகரசனி புத்தியினிற் கலக்கம்
கிளர்பந்து சத்துருக்கள் பகைகாவல் விலங்கு
கிலேசமிகும் தனச்சேதம் தனுர்க்குருவின் புத்தி
சுழலுமா யுதபீதி நோயெல்லாம் எய்தல்
சுற்றத்தார் பிரியம்வயி ராக்கியமுந் தோற்றும். (53)

*(இ-ள்.)* வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசையில் அடுத்து கும்பசசனிப் புத்தி நிகழும்; இதன் காலம்: திங்கள் 3,

நாள் 27, நாழிகை 12, விநாடி 33 ஆகும்; இதன் பலன்:- பண வருவாயும், நோயும், பகையும், கெடுதலும், தாழ்ந்த குலப்பெண்களின் கூட்டுறவும், சோர்வின்றிப் பரத்தையரைக் கூடியதால் நோய்களும் உண்டாகும்; இத்திசையில் இதன் மேல் நிகழ்வது மகரச்சனிப் புத்தியாகும்; இதன் காலம் திங்கள்3, நாள்27, நாழிகை 12, விநாடி 33 ஆகும்; இதன் பலன்:- மனக்கலக்கமும், (கலகம் என்றும் பாடம்) உறவினர்-பகைவர் என்னும் இவர்கள் பகை தோன்றுவதாலும், சிறை, விலங்கு என்னும் இவைகளைப் பற்றிய கவலையும் உண்டாகும்; பணச்சேதமும் நிகழும் இத்திசையில் இதன்மேல் தனுர் வியாழ புத்தி நடைபெறும்; இதன் காலம் திங்கள் 9, நாள் 23, நாழிகை 1, விநாடி 24 ஆகும்; இதன் பலன்:- ஆயுதங்களால் அச்சமும், பிணிகள் வருதலும் நிகழும்; உறவினர் விருப்பமும், வைராக்கியமும் உண்டாகும். (எ-று.)

வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்க் காலச்சக்கரத் திசைப்பலன் முற்றும்.

## ஒன்பதாவது தனுர் வியாழன் வலவோட்டுக் காலச்சக்கரத் திசையாண்டு பத்து

(இத்திசை, வலவோட்டுக் கடை நாட்களான கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி ஆகியவற்றின் முதற்காலுக்குரியது.)

சிந்தாத வலவோட்டம் தனுர்க்குருவின் சக்ரம்
திசைவருடம் பத்திற்கும் புத்திவாக் கியந்தான்
அந்தாதி மீதுகூட் டென் றேற்கை யென்றே
அறைகின்ற நூறாண்டும் பகுத்துண்ணும்; இதற்குச்
சந்தாரும் மேடம்உடல்; தனுர்உயிராம் எனவே
சாற்றியதோர் மேடச்சேய் புத்தியிற்பூ லாபம்
பிந்தாத சூரம்மிகு சவுக்கியமுண் டாகும்
பேருலகில் பாவகன்மப் பேருறும்பூண் முலையே. (54)

(இ-ள்.) பூண் அணிந்த நகிலாளே! கெடாத வலவோட்டுத் தனுர் வியாழ காலச்சக்கரத் திசையாண்டு

பத்தாகும்; இத்திசைக்குப் புத்திமுறை அறிந்துகொள்ளும் வாக்கியமாவது "அந்தாதி மீது சூட்டென்றேற்கை" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு நூறாகும்; இத்தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணு மென்க. இத்திசைக்கு உடலிராசி மேடமும், உயிரிராசி தனுசும் ஆகும்; இத்திசையில் உடற்புத்தியும் முதற் புத்தியுமாகிய மேடச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 8, நாள் 12 ஆகும்; இதன் பலன்:- நிலம் கிடைத்தலும், பின்னிடாத வீரமும் மிக்க சுகமும் உண்டாகும்; பாவமான தொழில் செய்பவன் என்று உலகத்திலே பெயர் வாங்குவன். (எ-று.)

இத்தனூர் வியாழத் திசைக்குரிய திசைப்பலன்:- "புதல்வர்ப்பேறு, நிலமும், பொருளும் கிடைத்தல், உண்மையான புகழ், அரசரால் சிறப்பெய்தல், திருமணம், கல்விப்பயிற்சி, அறமும், இன்பமும், நல்லொழுக்கமும் எய்தல் ஆகிய இவை உண்டாகும்" பலதீபிகை.

வியாழ திசையில் பொன் உண்டாகும் என்று சூடாமணி உள்ளமுடையான் கூறும்.

**வாக்கிய விளக்கம்:**

வலவோட்டு முதல் நாள்கள் ஐந்திற்கும் கடைநாள்கள் ஐந்திற்கும் புத்திகொள்ளும் முறை என்றேயாதலின், இத்தனூர் வியாழத்திசைக்குக் கூறப்பட்டுள்ள புத்தி வாக்கியம் மேடச்செவ்வாய்த் திசைக்கும் உரித்தாதலைக்(செய்யுள்-21ல்) காண்க.

இவ்வாக்கியத்திற்கு விளக்கம் அங்கே கூறப் பட்டுள்ளது.

உறுமிதன்மேல் இடபவெள்ளிப் புத்தியில்வே தியர்க்கு
உபகாரம் பொன்சேதம் சத்துருவாற் பயமாம்
மறுமிதன் மேன்மிதுன புதன்புத்தி தனிலே
மறையவரால் தனச்சேதம் வஞ்சமனத் துக்கம்

பெறும்உறவுள் ளோர்நாசம் இதன்மேலே கடகப்
பிறைபூணில் சஞ்சாரம் பகைநாசம் மகிழ்ச்சி
நிறுவியதோர் தனலாபம் இராசர்வெகு மானம்
நிகர்தரும வர்த்தனையாம் நிறைந்தருள்கல் யாணம். (55)

*(இ-ள்.)* வலவோட்டுத் தனுர் வியாழ திசையில் மேடச் செவ்வாய்ப் புத்திக்குமேல் இடப வெள்ளிப் புத்தி நடக்கும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 7, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- அந்தணர்க்கு உபகாரம் செய்தலும் (கற்றோர்க்கு உபகாரம் செய்தல் என்று சோதிடக் களஞ்சியம் கூறும்) பொருட்கேடும், பகைவரால் அச்சமும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் மிதுன புதன் புத்தி நடக்கும்; இதன் காலம் திங்கள் 10, நாள் 24 ஆகும்; இதன் பலன்:- அந்தணரால் பணச்சேதமும், வஞ்சகமும், மனத்துன்பமும், உறவினர்க்குக் கேடும், (உறவு, பகை; உற்றார்க்குக் கேடு என்று கூறும் சோதிடக் களஞ்சியம்) நிகழும். இத்திசையில் இதன்மேல் கடகத்திங்கள் புத்தி நடக்கும்; இதன் காலம் ஆண்டு 2, திங்கள் 1, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- உலகிற் சஞ்சரித்தாலும், பகைக்கேடும், மகிழ்ச்சியும், பணங்கிடைத்தலும், அரசரால் உபசரிக்கப்படுதலும், அறச்செயல்களை நிகழ்வித்தலும், திருமணமும் உண்டாகும். *(எ-று.)*

கடகத்திங்கள் புத்தியில் காசநோயும், தாயத்தாரின் பொருட்பேறும் உண்டாகும் என்று உரைக்கும் சோதிடக் களஞ்சியம்.

கலிக்குமிதன் மேற்சிங்கா தித்தபுத்தி தன்னில்
கலகமிகு ரோகபயம் தனம்பூமி லாபம்
துலக்குமன்னர் சன்மானம் இவையுண்டாம்; இதன்மேல்
துய்யகன்னி புதன்புசிப்பில் பந்துசனப் பகையாம்
விலக்குதரித் திரம்பாரி கலகமிதன் மீதில்
வீறுதுலா வெள்ளிபுத்தித் தன்னில்தன விரையம்
பலிக்கும்வே தியரினால் உபகாரம் ஒன்னார்
பகையுண்டாம் என்னவே பகர்ந்தனர்பைங்கிளியே. (56)

*(இ-ள்.)* பச்சைக்கிளி போன்றவளே! வலவோட்டு தனுர் வியாழ திசையில் கடகத் திங்கள் புத்திக்குமேல் சிங்க ஞாயிறு புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 6 ஆகும்; இதன் பலன்:- கலகமும், பிணியால் அச்சமும், பணமும், நிலமும் கிடைத்தலும், அரசரால் உபசரிக்கப்படுதலும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் நடப்பது கன்னிப்புதன் புத்தியாகும்; இதன் காலம் திங்கள் 10, நாள் 24 ஆகும்; இதன் பலன்:- உறவினர் பொதுமக்கள் பகையும், வறுமையும், மனையாளைப் பற்றிய கலகமும், உண்டாகும்; இத்திசையில் இதன்மேல் துலா வெள்ளி புத்தி நடக்கும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 7, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- பணச் செலவும் அந்தணரால் உபகாரமும், பகைவர் பகைச் செயலும் உண்டாகும். *(எ-று.)*

சிங்க ஞாயிறு புத்தியில் பயணமும், துலாவெள்ளியில் கன்று காலிகளுக்குப் பீடையும் உண்டாகும் என்று கூறும் சோதிடக் களஞ்சியம்.

**கிளிமொழியே விருச்சிகச்செவ் வாய்ப்புத்தி தன்னில்**
**கீர்த்திப்பிர தாபம்மன்னர் கோபந்தனச் சேதம்**
**வளைபடுகால் விலங்குசிறை உட்டினவி யாதி**
**வருஞான வைராக்கியம் காட்டுமிதன் மீதில்**
**ஒளிதனுவில் குருபுத்தி தன்னில்மன மகிழ்ச்சி**
**உலகில்மன்னர் வெகுமானம் ஞானசாத் திரத்தைத்**
**தெளிவுடனே அறிதல்தன தானியமே லாபம்**
**சிந்தைவை ராக்கியந்தான் செய்தலென மொழிவார். (57)**

*(இ-ள்.)* கிளிபோன்ற சொல்லையுடையவளே! வலவோட்டுத் தனுர் வியாழ திசையில் விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 8, நாள் 12 ஆகும்; இதன் பலன்:- புகழும், வீரச்சிறப்பும், அரசரின் சினமும், பணச்சதேமும், கால் விலங்கும், வைராக்யமும் நிகழும். இத்திசையில் இதன் பின் கடைசிப் புத்தியாகிய தனுர் வியாழ புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1 ஆகும்; இதன் பலன்:-

மனமகிழ்ச்சியும், அரசரால் உபசரிக்கப்பெறுதலும், தானியம் கிடைத்தலும், மனத்திலே வைராக்கியந் தோன்றலும் உண்டாம் என்பர். (எ-று.)

வலவோட்டுத் தனுர்வியாழன் காலச்சக்கரத் திசைப்பலன் முற்றும்.

## பத்தாவது வலவோட்டு மகரச்சனிக் காலச்சக்கரத் திசையாண்டு நான்கு

(இத்திசை, வலவோட்டுக் கடைநாட்களான கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி என்னும் ஐந்தின் இரண்டாங்காலுக்குரியது.)

தெரியும்வல வோட் டான மகரச்சனி சக்ரத்
திசைவருடம் நான்கிற்கும் புத்திவாக் கியந்தான்
அரிய பொற்போல் வெளவேய் பெற்றூர்நீ டுதியென்
றதுவருடம் எண்பத்தைந் தினிற்பிரித்தே யுண்ணும்
பரிவிலிதற் கேயுடலம் மகரமாம்; உயிர்தான்
பகர்மிதுனம் ஆம்மகரச் சனிப்புத்தி தனிலே
எரிவுசுரம் புத்திரரால் கலகம்விதே சத்தில்
ஏகல்மனச் சஞ்சலமும் எய்தும்எனல் ஆமே. (58)

(இ-ள்.) ஆராயும் வலவோட்டு மகரச்சனிக் காலச்சக்கரத் திசையாண்டு நான்காகும்; இத்திசைக்குப் புத்தி முறை அறிந்துகொள்ளும் வாக்கியமாவது "பொற்போல் வெளவேய் பெற்றூர் நீடுதி" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தைந்தாகும்; இத்தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணுமென்க; இத்திசைக்கு உடலிராசி மகரமும், உயிரிராசி மிதுனமும் ஆகும்; இத்திசையில் முதற்புத்தியாகிய மகரச்சனிப் புத்தியின் காலம் திங்கள் 2, நாள் 7, நாழிகை 45, விநாடி 53 ஆகும். இதன் பலன்:- உடம்பெல்லாம் எரிகின்ற சுரநோய் உண்டாதலும், மைந்தரால் கலகந் தோன்றலும் அயலிடத்தை நோக்கிச் செல்லலும், மனம் ஒருநிலையின்மையும் எய்தும் என்று கூறுக. (எ-று.)

இம் மகரச்சனிப்புத்தியில் தேச கலகமும் உண்டாகும் என்று கூறுகிறது சோதிடக் களஞ்சியம்.

இச்சனி திசைப்பலன் பாபச் செயலைச் செய்தலும், தன் இடம் விட்டுப்போதலும், உறவினர்ப் பகையும், சோம்பலும், வறுமையும், நோயும் உண்டாகும் என்று கூறுகிறது பலதீபிகை. "சனியூண் சிறையும் வழக்காடும்" என்று கூறுகிறது சூடாமணி உள்ளமுடையான்.

**வாக்கிய விளக்கம்:**

வலவோட்டு இடபவெள்ளித் திசைக்குரிய (செய்யுள்-16) வாக்கியமே இதற்கும் ஆதலின் இவ் வாக்கியத்தின் விளக்கத்தை ஆண்டுக் காண்க.

**மேவுமிதன் மேற்கும்பச் சனிப்புத்தி தனிலே**
**வெகுயோகம் ஆசாரம் மைந்தர்பவுத் திரரும்**
**பூவுலகில் வர்த்தனையாம் சவுக்கியமாம் இதன்மேல்**
**புகழ்மீனக் குருவூணில் மைந்தர்பவுத் திரரும்**
**நாவுறுவர்த் தனையோகம் மிகுந்ததன லாபம்**
**தருமிந்த மீனம்நின்று விருச்சிகத்திற் றாண்டும்**
**ஏவுறுசிங் காவலோ கனமிதனிற் பலன்றான்**
**யாத்திரைதெற் கேகலுயிர் பயந்தனநா சனமே. (59)**

(இ-ள்.) இம் மகரச்சனித் திசையில் மகரச்சனிப் புத்தியின்மேல் நடப்பது கும்பச்சனிப் புத்தியாகும். இதன் காலம் திங்கள் 2, நாள் 7, நாழிகை 45, விநாடி 53 ஆகும். இதன் பலன்:- மிகுதியான யோக பலனும் நல்லொழுக்கமும், புதல்வர்களும், பேரர்களும் உண்டாகுதலாம். இத்திசையில் இதன் மேல் நிகழ்வது மீன வியாழன் புத்தியாகும்; இதன் காலம் திங்கள் 5, நாள் 19, நாழிகை 24, விநாடி 42 ஆகும். இதன் பலன்:- புதல்வர்களும், பேரப்பிள்ளைகளும், தோன்றுதலும் மிகுந்த பணப்பேறும் உண்டாகும். இப்புத்தி நிகழ்ந்து முடிந்தபின் அடுத்து, மீன இராசியிலிருந்து விருச்சிக இராசியிற் பாயும்; இது சிங்காவலோகன கதியாகும்; இக்கதி நிகழும்பொழுது தென்றிசையிலே பயணமும், உயிர்ப் பயமும் பொருட்கேடும் உண்டாகும். (எ-று.)

நாசமிலா விருச்சிகச்செவ் வாய்ப்புத்தி தனிலே
நாட்டினிலே திரிதல்மனத் துன்பமொன்னார் கருவிப்
பூசலிடு பயமிதன்மேல் துலாவெள்ளிப் புத்தி
புகழ்செல்வ வர்த்தனைபுத் திரலாபம் நல்லோர்
நேசம்நோய் நாசமிப்பால் கன்னிபுதன் புத்தி
நிறைசெல்வம் தனலாபம் செயம்ஞான விருத்தி
வாசமிகு பந்துசன உபகாரம் இந்த
வண்கன்னி தனில்நின்றே கடகத்திற் பாயும். (60)

*(இ-ள்.) இம்மகரச் சனித்திசையில் சிங்காவ லோகன கதியாய் நிகழ்ந்த விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 3, நாள் 28, நாழிகை 35, விநாடி 18 ஆகும்; இதன் பலன்:- தேசங்களிற் சென்று அலைதலும், மனத்துயரும் பகைவராலும் படைக்கலங்களாலும் போர் நிகழும் அச்சமும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் துலா வெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 9, நாள் 1, நாழிகை 3, விநாடி 32 ஆகும். இதன் பலன்:- புகழ் வளர்தலும், செல்வம் வளர்தலும், மகப்பேறும், நல்லோர் நட்பும், பிணி கெடுதலும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் கன்னிப் புதன் புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- நிறைந்த செல்வமும், பணப்பேறும், வெற்றியும், அறிவுப்பெருக்கமும், உறவினர்க்கும், உலக மக்கட்கும், உபகாரம் செய்தலும் நிகழும். இப்புத்தி நிகழ்ந்து முடிந்த பின்பு அடுத்த புத்தி கன்னி இராசியிலிருந்து கடகவிராசியிற் பாய்ந்து நடைபெறும். (எ-று.)*

பாயுமிது மண்டூகப் பாய்ச்சலிதன் பலன்றான்
பந்துசன பிதுர்மாதுர் கண்டம்நீர்க் கண்டம்
வாயுவுறு பேதிப்பெண் கர்ப்பகிலே சந்தான்
மன்னுதெற்கே பயணமுண்டாம் கடகமதி புத்தி
ஆயுறுகா ரியநாசம் சரீரத்திற் பீடை
அநேகசனப் பகைதேசத்திற் பீடை
தேயுறநின் றேசிங்கந் தன்னிலே புரளும்
இதுசர்ப்ப கதியெனவே இயம்புவர்கா ரிகையே. (61)

(இ-ள்.) காரிகையே! வலவோட்டு மகரச்சனித் திசையில் கன்னியிலிருந்து கடகத்திற்குப் பாயும் என்ற இப்புத்தியின் கதி தவளைப் பாய்ச்சலாகும்; இக்கதி நிகழும் பொழுது, உறவினர்க்கும், தாய் தந்தையர்க்கும் தத்து உண்டாகும்; தனக்கும் தண்ணீரால் தத்து ஏற்படும். வயிற்றோட்டமும் பெண்களுக்குண்டான கர்ப்பத்தைப் பற்றிய கவலையும் தென்றிசை நோக்கிய பயணமும் ஏற்படும். இக்கடகத் திங்கள் புத்தியின் காலம் திங்கள் 11, நாள்25, நாழிகை 45, விநாடி 53 ஆகும்; இதன் பலன்:- காரியக் கேடும், உடல் துன்பமும், பல மக்களின் பகையும், தேசங்களிற் சென்று அலைதலும் நிகழும். இப்புத்தி நடந்து முடிந்தபின் அடுத்த புத்தி கடக இராசியிலிருந்து சிங்க இராசியிற் புரண்டு நடைபெறும் என்க. இதனைப் பாம்புக் கதியென்று சொல்லுவர் (எ-று.)

**காரிகையே இப்பலன்றான் வலப்புறத்திற் கிரந்தி**
**காணும்நாற் கால்மிருக பயம்சிங்கா தித்தன்**
**பாரியபுத் தியில்மைந்தர் கேடுபொருள் நாசம்**
**பகைவரால் துன்பமிந்த சிங்கத்தில் நின்றே**
**வேரியாழ் தனிற்குதிக்கும் குக்குடத்தின் கதியாம்**
**மிக்கவிதன் பலன்கிழக்கே செலல்தலையின் நோயாம்**
**நாரிகெர்ப்ப சஞ்சலமாம் மிதுனபுதன் புத்தி**
**நல்லுறவு நற்செல்வம் வரும்பகைநோய் போமே. (62)**

(இ-ள்.) காரிகையே! வலவோட்டு மகரச்சனித் திசையில் கடகத்திலே நின்று சிங்கவிராசியிற் புரளும் பாம்புக்கதி நிகழும் பொழுது நடக்கும் பலன்றான்:- வலப்பக்கத்திலே கிரந்தி என்னும் பிணி தோன்றுதலும், விலங்குகளால் அச்சம் நிகழ்தலும் உண்டாகுமென்க. இச்சிங்க ஞாயிறு புத்தியின் காலம் திங்கள் 2, நாள் 24, நாழிகை42, விநாடி 21 ஆகும்; இதன் பலன்:- மக்களுக்குக் கேடும், பொருட்கேடும், பகைவரால் துன்பமும் நடைபெறும்; இத்திசையில் இதன்பின் அடுத்தபுத்தி சிங்கவிராசியிலிருந்து மிதுனவிராசியிற் குதித்து நடக்கும்;

இது கோழிக்கதியாகும்; இக்கதி நிகழ்ச்சியில் விளையும் பலன்:- கீழ்த்திசைப் பயணமும், தலைவலியும், பெண்ணின் கருப்பத்தைப் பற்றிய சஞ்சலமும் உண்டாகுதலாம். இம் மிதுன புதன் புத்தியின் காலம் திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும். இதன் பலன்:- நல்லோர் நட்பும், நல்ல செல்வமும் உண்டாகும்; பகையும், பிணியும் போகும். (எ-று.)

வலவோட்டு மகரச்சனி காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் முற்றும்.

## பதினொன்றாவது வலவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத்திசையாண்டு நான்கு

(இத்திசை, வலவோட்டுக் கடைநாட்களான கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி ஆகிய ஐந்தின் மூன்றாங் காலுக்குரியது.)

ஆனவல வோட்டான கும்பச்சனி சக்ரம்
 ஆண்டுநாற் கும்புத்தி வாக்கியத்தைக் கூறில்
தானமௌவோர் தொல்லைவ ராகியென்ற தாகும்
 தனிவருடம் எண்பத்து மூன்றுபகுத் துண்ணும்
பானுலவு கும்பத்துக் கிடபமதே உடலாம்;
 பகர்மிதுனம் உயிராகும்; இடபவெள்ளிப் புத்திக்(கு)
ஈனமிலா வுத்யோகம் புத்திரசம் பத்து
 இனியபசுத் தனலாபம் பிரபலமென் றியம்பே. (63)

(இ-ள்.) வலவோட்டுக் கும்பச் சனிக் காலச்சக்கரத் திசையாண்டு நான்காகும். இத்திசைக்குப் புத்திகள் நடக்கும் முறையை அறிந்துகொள்ளும் வாக்கியத்தைக் கூறின் "தான மௌவோர் தொல்லை வராகி" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்; இம்முழுயாண்டுத் தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணுமென்க. இக்கும்பச் சனித்திசைக்கு இடபவிராசியே உடலாகும்; மிதுனவிராசியே உயிராகும்; இத்திசைக்கு உடற்புத்தியும் முதற்புத்தியுமாகிய

இடபவெள்ளிப் புத்தியின் காலம் திங்கள் 9, நாள் 7, நாழிகை35, விநாடி 25 ஆகும்; இதன் பலன்:- தாழ்ச்சியில்லாத உத்தியோகமும், மக்கட்செல்வமும் இனிமை தரும் பசுலாபமும், தனலாபமும், பெருமையும் உண்டாகும் என்று கூறுக. (எ-று.)

இக்கும்பச் சனித்திசைக்கு, மகரச்சனித் திசைக்கு கூறிய திசைப்பலனையே கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

முன்னே (இந்நூலில் 23ஆம் செய்யுளிற் கூறியுள்ளது) வலவோட்டு மிதுன புதன் திசைக்குக் கூறியுள்ள புத்தி வாக்கியமே இதற்கும் ஆதலின், இவ்வாக்கியத்திற்கு விளக்கம் அங்கே காண்க.

**இயங்குமிதன் மேல்மேடச் செவ்வாயின் புத்தி**
**இனியதுன்பம் பீடைவன வாசஞ்சஞ் சாரம்**
**தயங்கியதோர் மீனகுரு புத்திதனில் தனமாம்**
**தானியம்பொன் னாடையா பரணமைந்தர் லாபம்**
**வயங்குகும்பச் சனிப்புத்தி தனிற்சனவி ரோதம்**
**வருஞ்சண்டை பிணித்துன்பம் வாகனமே நாசம்**
**பயந்தமைந்தர் நாசமர்த்த நாசமது காட்டும்**
**பங்கயச்செந் திருவனைய பாவையருக் கரசே. (64)**

(இ-ள்.) தாமரை மலரில் வாழும் சிவந்த திருமகளை ஒத்த பெண்களுக்கரசே! இவ்வலவோட்டுக் கும்பச்சனித் திசையில் இடப வெள்ளிப் புத்திக்கு மேல் நடப்பது மேடச் செவ்வாய்ப் புத்தியாகும்; இதன் காலம் திங்கள் 4, நாள் 1, நாழிகை 26, விநாடி 45 ஆகும்; இதன் பலன்:- மிக்க துன்பமும், பீடையும், காட்டிலே வசித்தலும், தேசங்களிற் சஞ்சரித்தலும் நடைபெறுதலாம். இத்திசையில் இதன் மேல் மீன வியாழன் புத்தி நடைபெறும்; இதன் காலம் திங்கள் 5, நாள் 23, நாழிகை29, விநாடி 38 ஆகும். இதன் பலன்:- பணமும், தானியமும், செம்பொன்னும், ஆடைகளும், புதல்வரும் கிடைக்கப்பெறுதலாம். இத்திசையிலே இதன்பின் கும்பச்

சனிப் புத்தி நடைபெறும். இதன் காலம் திங்கள் 2, நாள் 9, நாழிகை 23, விநாடி 52 ஆகும். இதன் பலன்:- பொதுமக்கள் பகையும், போரும், நோயும், துன்பமும் உண்டாகும்; வாகனங்கட்குக் கேடு நிகழ்தலும், புதல்வர்க்கேடும், பொருட்கேடும் விளைதலுமாம். (எ-று.

அரசியற்கைத் தருமகரச் சனிபுத்தி தனிலே
ஆனதயி ரியமைந்தர் நாசம்வடக் கேகல்
புரவலரால் பயம்சண்டை விரோதமுண்டாம் தனுவில்
பொன்னவன்புத் தியில்தனதா னியலாபம் செல்வம்
திரமுறுபுத் திரர்நேசம் மகிழ்ச்சிகா ரியங்கள்
சித்திக்கும்; தனுவில்நின்று மேடத்திற் பாயும்
பரவிலிது சிங்காவ லோகனமாம் தெற்கே
பயணத்தால் பயம்பீடை அவமிருத்து கண்டம். (65)

(இ-ள்.) வலவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத் திசையில் அரசனின் இயல்பான அச்சத்தைத் தரும் மகரச்சனிப் புத்தியின் காலம் திங்கள் 2, நாள் 9, நாழிகை 23, விநாடி 52 ஆகும்; இதன் பலன்:- மன உறுதியும் மைந்தர்க்குக் கேடும், வடதிசைப் பயணமும், அரசரால் அச்சமும், போரும், பகையும் உண்டாகுதலாம். இத்திசையில் இதன்மேல் தனுர் வியாழன் புத்தி நடைபெறும். இதன் காலம் திங்கள்5, நாள்23, நாழிகை 29, விநாடி 38 ஆகும்; இதன் பலன்:- பணமும், தானியமும் கிடைத்தலும் பலவகைச் செல்வங்களும், புதல்வர் உறவும், உவப்பான காரியங்களும் உண்டாதலாம், இத்திசையில் இதன்பின் தனுர் இராசியில் நின்று மேடத்தில் பாயும் என்க. இப்புத்தியின் கதி சிங்காவலோகனமாம்; இக்கதி நிகழுங்கால் தென்றிசைப் பயணமும், அச்சமும், துன்பமும், தீய சாவு, தத்தும் உண்டாகும். (எ-று.)

கண்டதொரு மேடச்சேய் புத்தியிற்கண் ணோயும்
காவலரால் பயம்காவல் விலங்குதனச் சேதம்
கொண்டவயி ராக்கியமாம் இடபவெள்ளி புத்தி
குலநங்கை கிடைத்தல்பெண் பீடைகுறி மகிழ்ச்சி

விண்டமனத் துன்பமன மகிழ்ச்சிவெகு செல்வம்
மிதுனபுதன் புத்திதனில் வித்தைபிர பலமாம்
உண்டருள்போ சனம்சயன சவுக்கியம்சம் பத்தாம்
உயர்தனதா னியஞானம் சனப்பிரியம் மிகுமே. (66)

*(இ-ள்.)* இவ்வலவோட்டுக் கும்பச்சனித் திசையில் சிங்காவலோகனகதியாய் வந்த மேடச்செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 4, நாள் 1, நாழிகை 26, விநாடி 45 ஆகும்; இதன் பலன்:- விழிநோயும், அரசரால் அச்சமும், காவலும், விலங்கும், பணச்சேதமும், வைராக்கியமும் நிகழ்தலாம். இத்திசையில் இதன்பின் இடபவெள்ளிப் புத்தி நடைபெறும்; இதன் காலம் திங்கள் 9, நாள் 7, நாழிகை 35, விநாடி 25 ஆகும்; இதன் பலன்:- குலப்பெண் கிடைத்தலும், பெண்களுக்குத் துன்பமும் உண்டாகும்; குறித்துப்பெறும் மகிழ்ச்சியும் மனத்துன்பம் நீங்கி மகிழ்ச்சி அடைதலும், மிக்க செல்வம் உண்டாதலும் ஏற்படும் என்க. இத்திசையில் இதன்பின் கடைசிப் புத்தியும் உயிர்ப்புத்தியுமாகிய மிதுன புதன் புத்தி நடைபெறும்; இதன் காலம் திங்கள் 5, நாள் 6, நாழிகை 8, விநாடி 40 ஆகும்; இதன் பலன்:- கல்வி பெருகுதலும், விரும்பி உண்ணப்படும் உணவு கிடைத்தலும், படுக்கைச் சுகம் உண்டாதலும், பலவகைச் செல்வமும், பணமும், தானியமும், அறிவும், உலக மக்களின் விருப்பமும் ஏற்படுதலுமாகிய இவை நிகழுமென்க. *(எ-று.)*

வலவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத் திசைப்புத்தியின்
பலன் முற்றும்.

## பன்னிரண்டாவது வலவோட்டு மீன வியாழன் காலச்சக்கரத் திசையாண்டு பத்து

*(இத்திசை, வலவோட்டுக் கடை நாட்களான கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி ஆகிய ஐந்து நாட்களின் நான்காங்காலுக்குரியது)*

திசையான வலவோட்டாம் மீனகுரு சக்ரத்
திசைவருடம் பத்திற்கும் புத்திவாக் கியந்தான்
இசைவீறு கூர்செவ்வேல் கைக்கொண்டோய் வெளவாம்
என்றபடி வருடமெண்பத் தாறதனி லுண்ணும்
அசைவிலிதற் கேயுடலம் கடகம்; மீன் உயிராம்;
ஆகுமிதிற் கடகமதி புத்திதன லாபம்
வசையில்பாக் கியம்பகைவர் நாசம்பொற் பணிகள்
வரும்சுபசோ பனமுண்டாம் மனமகிழ்ச்சி தானே. (67)

(இ-ள்.) வலவோட்டுத் திசைகளுள் ஒன்றாகிய மீன வியாழன் காலச்சக்கரத் திசையாண்டு பத்தாகும்; இதற்குப் புத்தியறியும் வாக்கியத்தைக் கூறின், "வீறுகூர் செவ்வேல் கைக்கொண்டோய் வெள" என்பதாம்; இப்புத்தி வக்கியத்திற் குரிய முழுயாண்டு எண்பத்தாறாகும்; இத்தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணு மெண்க; இத்திசைக்கு உடலிராசி கடகமும், உயிரிராசி மீனமும் ஆகும்; இத் திசையின் புத்திகள் ஒன்பதனுள் உடற்புத்தியும் முதற்புத்தியு மாகிய கடகத்திங்கள் புத்தியின் காலம் ஆண்டு 2, திங்கள் 5, நாள் 9, நாழிகை 4, விநாடி 10 ஆகும்; இதன் பலன்:- பணம் கிடைக்கும்; பலவகைச் செல்வங்கள் உண்டாம், பகைவர் கெடுவர், பொன்னாற் செய்த நகைகள் வரும், மிக்க சுபமான செயல்கள் நிகழும்; மனமகிழ்ச்சி உண்டாகும். (எ-று.)

தனுர்வியாழன் திசைக் கூறிய திசைப் பலன்களையே மீன வியாழன் திசைக்கும் கூறிக்கொள்ளுக.

**வாக்கிய விளக்கம்:**

இந்நூல் முப்பதாம் செய்யுளில் வலவோட்டுக் கடகத்திங்கள் திசைக்குக் கூறிய புத்தி வாக்கியமே இத்திசைக்கும் உரியதாதலின், இங்கு கூறியுள்ள வாக்கியத்திற்கு விளக்கம் அங்கே காண்க.

மகிழ்வுறுசிங் காதித்தன் புத்தியினிற் சண்டை
வழக்கெல்லாம் நிவர்த்திதன தானியம்பூ லாபம்
புகழ்கிராம ஆதிக்கம் பிரபலவுத் யோகம்
போற்றுகன்னி புதன்புத்தி தன்னிலபி மானம்
திகழ்கீர்த்தி தனலாபம் இராசவெகு மானம்
சிவஞான சிந்தைசுப சோபனமுண் டாகும்
புகழ்துலா வெள்ளிபுத்தி குருதெய்வ மறையோர்
புகல்பத்தி தனம்பெண்கள் செயம்சுகபோ சனமே. **(68)**

*(இ-ள்.) வலவோட்டு மீன வியாழன் திசையில் இரண்டாவதாகிய சிங்க ஞாயிறு புத்தியின் காலம் திங்கள் 6, நாள் 29, நாழிகை 18, விநாடி 8 ஆகும்; இதன் பலன்:- சண்டையும், வழக்கும் நீங்கும்; பணமும், தானியமும், நிலமும் கிடைக்கும்; ஊர்த்தலைமையும், பெரிய உத்தியோகமும் கிடைக்கும்; இத்திசையில் இதன்மேல் கன்னி புதன் புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 0, நாள் 16, நாழிகை 44, விநாடி 39 ஆகும்; இதன் பலன்:- பலரால் மதிக்கப்படுதலும், புகழப்படுதலும் உண்டாகும்; பொருள் இலாபமும், அரசரால் உபசரிக்கப்படுதலும் நிகழும்; இத்திசையில் இதன்மேல் துலா வெள்ளி புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 10, நாள் 6, நாழிகை 46, விநாடி 3 ஆகும். இதன் பலன்:- ஆசிரியன், கடவுள், அந்தணர் என்னும் இவர்கள்பால் அன்பு செய்தலும், பொருளும், பெண்ணும், வெற்றியும், இன்பந்தரும் உணவும் கிடைத்தலும் ஆம். (எ-று.)*

சனம்புகழும் விருச்சிகச்செவ் வாய்ப்புத்தி தனிலே
சத்துருவாற் பயம்அலைச்சல் புத்திவெகு செல்வம்
வினவுபயித் தியநோயாம் பந்துசனப் பிரியம்
மிக்கதனு பொன்புத்தி சவுக்கியம்நற் புசிப்பு
கனகமணி லாபசுப சோபனமுண் டாகும்
கருதுமிதன் மேன்மகரச் சனிப்புத்தி தனிலே
தினமுமுந் தையர்கலகம் சூதுவித்தை யதனாற்
சிறுகெருமை யோகமுண்டாம் மிலேச்சருற வாமே. **(69)**

(இ-ள்.) மீன வியாழன் திசையில் விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம் திங்கள் 9, நாள் 23, நாழிகை 1, விநாடி 24 ஆகும்; இதன் பலன்:- பகைவரால் அச்சமும், அலைச்சலும், அறிவும், (சபலப்புத்தி உண்டாகுமென்று கூறும் சோதிடக் களஞ்சியம்) மிகுந்த செல்வமும், பயித்திய நோயும், உறவினர் விருப்பமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் தனுர் வியாழன் புத்தி நடைபெறும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 1, நாள் 28, நாழிகை 36, விநாடி 17 ஆகும்; இதன் பலன்:- உடல் நலமும், நல்ல உணவை நுகர்தலும், பொன்னும், நவமணியும் கிடைக்கப் பெறுதலும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் மகரச்சனிப் புத்தி நிகழும். இதன் காலம் திங்கள் 5, நாள் 17, நாழிகை 26, விநாடி 31 ஆகும்; இதன் பலன்:- நாடோறும் பெண்களால் கலகமும், சூதாட்ட வித்தையும், அதனாற் சண்டையும் உண்டாம்; எருமை கிடைக்கும்; மிலேச்சர் உறவு உண்டாம். (எ-று.)

உறவாகும் இதன்மீதில் கும்பச்சனிப் புசிப்பில்
ஓதும்அநா சாரமாம் உலகினிற்சஞ் சாரம்
திறமிகுந்த மனைவியுடன் விரோதமதாற் கலகம்
தேடரிய நனலாபம் தனவிரையம்; இதன்மேல்
பிறபலமாம் மீனகுரு புத்தியினிற் றானே
பேசியவா கனலாபம் கீர்த்திபசு லாபம்
அறநெறியே நிற்றல்தெய்வம் மன்னவர்தம் சேவை
அதிபுண்ய தீர்த்தமதில் ஆடலுண்டாம் என்பர். (70)

(இ-ள்.) வலவோட்டு மீன வியாழன் திசையில் மகரச்சனிப் புத்திக்குமேல் கும்பச்சனிப் புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 5, நாள் 17, நாழிகை 26, விநாடி 31 ஆகும்; இதன்பலன்:- தீய ஒழுக்கம் உண்டாம்; உலக சஞ்சாரமும் பாகுபாடுடைய மனைவியுடன் பகையும், அதனாற் கலகமும் விளையும்; பொருட்பேறும், பொருட்செலவும் நிகழும்; இத்திசையில் இப்புத்திக்கு மேல் மீனவியாழன் புத்தி நடைபெறும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 1, நாள் 28, நாழிகை 36, விநாடி 17 ஆகும்; இதன் பலன்:- ஊர்தி

கிடைத்தலும், அறத்தின் வழியே ஒழுகி நிற்றலும், தெய்வ வழிபாடும், அரசரைச் சார்ந்தொழுகலும், மிக்க புண்ணிய தீர்த்தத்திற் படிதலும் உண்டாகும் என்பர்.

வலவோட்டு மீன வியாழன் காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் முற்றும்.

## இடவோட்டுப்படலம்

### முதலாவது இடவோட்டு விருச்சிகச் செவ்வாய்க் காலச்சக்கரத் திசையாண்டு ஏழு

*(இத்திசை, இடவோட்டு முதல் நாட்களாகிய உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் என்னும் இந்நான்கின் முதற்காலுக்குரியது.)*

**பூமலரும் இடவோட்டுச் சக்கரத்தின் முன்னம்**
**பொருந்துவிருச் சிகச்செவ்வாய் சக்கரத்தின் திசையே**
**மாமருவும் ஏழாண்டின் புத்திவாக் கியந்தான்**
**மகிழுபைம்பொன் னோர்கௌக லாபியுற்றீர் யன்றே**
**காமருவும் எண்பத்தா றாண்டில்பிரித் துண்ணும்**
**கருதுமிதற் கேயுடலம் தனுர்; உயிர்தான் கடகம்;**
**தேமருவுந் தனுர்க்குருவின் புத்திமுத்து லாபம்**
**சிவஞானம் கருவிபயம் ரோகம்மன்னர் நோக்கே. (71)**

*(இ-ள்.)* பொலிவு பொருந்திய இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னிரண்டனுள் முதலாவதாகப் பொருந்தியுள்ள விருச்சிகச் செவ்வாய்க் காலச்சக்கரத் திசையாண்டு ஏழாண்டாகும்; இத்திசைக்குப்புத்திகள் நடக்கும் முறையை அறிந்து கொள்ளும் வாக்கியமாவது "பைம்பொன்னோர் கௌகலாபியுற்றீர்" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய பரமாயுள் என்னும் முழுயாண்டு எண்பத்தாறாகும்; இத்தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணுமென்க; இத்திசைக்கு உடலிராசி தனுசும், உயிரிராசி கடகமும் ஆகும்; இத்திசையின் முதற்புத்தியாகிய தனுர் வியாழன் புத்தியின் காலம் திங்கள்9,

நாள் 23, நாழிகை 1, விநாடி 24 ஆகும்; இதன் பலன்:- முத்துக்கள் கிடைக்கும்; சிவனை அறியும் சிவஞானம் உண்டாம்; வாள் முதலான படைகளால் அச்சம் நிகழும்; நோய் உண்டாகும்; அரசரின் பார்வை கிட்டும். (எ-று.)

வலவோட்டில் மேடச்செவ்வாய்த் திசைக்குக் கூறிய திசைப் பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இடவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசைக்குப் புத்தி அறியும் வாக்கியமாவது "பைம்பொன்னோர் கௌ கலாபி யுற்றீர்" என்பதாம்; இவ்வாக்கியத்தை பை-9, தனுர் வியாழன் புத்தி; பொ-10, மகரச்சனிப் புத்தி; னோ-11, கும்பச்சனிப் புத்தி; கௌ-12, மீன வியாழன் புத்தி; க-1, மேடச் செவ்வாய்ப்புத்தி; லா-2, இடப வெள்ளிப்புத்தி; பி-3, மிதுன புதன் புத்தி; யு-5, சிங்க ஞாயிறு புத்தி; றீ-4, கடகத்திங்கள் புத்தி என்று கணக்கிட்டறிக.

இவற்றின் திசையாண்டுகள் முறையே 10+4+4+10+7+16+9+5+21 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்தாறாகும்.

இப்புத்தி வாக்கியம் இடவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசையில் ஆறாவது புத்தியாகிய இடப வெள்ளிப் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 3, நாள் 18, நாழிகை 50, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- புதல்வர்க்குக் கேடும், உடல் துன்பமும், பசுக்களும், செம்பொன்னுமாகிய இவற்றிற்குக் கேடும், பெண்களுக்குத் துன்பமும் என்னும் இவை விளையும். இத்திசையில் ஏழாவது புத்தியாகிய மிதுன புதன் புத்தியின் காலம் திங்கள் 8, நாள் 23, நாழிகை 43, விநாடி 15 ஆகும்; இதன் பலன்:- பகைவராலும், கொடிய கள்வராலும் அச்சம் நிகழ்தலும், செம்பொன் குறைந்து போதலும், வெப்பம் விளைதலும் ஆகிய இவை உண்டாம். இத்திசையில் இதன்பின், எட்டாவது புத்தி மிதுன

இராசியிலிருந்து சிங்க இராசியிற் பாய்ந்து நடக்கும்; இது தவளைக் கதியாகும்; இக்கதி நிகழும் பொழுது, பெண்களின் சினமும், வாய்வு நோயாலும், சுரநோயாலும், உயிர்க்குக் கேடு நிகழுமோ என்று அஞ்சும் அச்சமும் உண்டாகும். (எ-று.)

**வேண்டுசிங்க ரவிபுத்தி தனிற்போரில் வெற்றி**
**வேந்தர்வெகு மானம்பொன் தானியமா பரணம்**
**ஈண்டுநவ மணியாடை பெறுவர்சிங்கம் நின்றே**
**இயல்கடகந் தனிற்புரளும் மயூரகதி என்பர்;**
**தூண்டுமிதன் பலன்வலது பாரிசத்திற் கிரந்தி**
**சோரர்தீப் பயம்கிழக்கே யாத்திரையுண் டாகும்**
**தாண்டுகட கப்பிறையின் புத்திதிருக் கன்பாம்**
**தானியம்பொன் பூமிமைந்தர் மணிதரும்நற் புசிப்பே. (74)**

(இ-ள்.) இடவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசையில் இத்தவளைக் கதியான சிங்க ஞாயிறு புத்தியின் காலம் திங்கள்4, நாள்26, நாழிகை30, விநாடி 42 ஆகும்; இதன் பலன்:- போரில் வெற்றி உண்டாதலும், அரசரால் உபசரிக்கப் படுதலும், செம்பொன்னும், தானியமும், நகைகளும், நவமணியும், ஆடையும் கிடைக்கப்பெறுதலும் நிகழும். இத்திசையில் இதன்பின் சிங்க இராசியிலிருந்து கடகவிராசியிற் புரண்டு ஒன்பதாவது புத்தி நடைபெறும். இக்கதி மயிலின் கதியாகும்; இக்கதி நிகழும்பொழுது, வலப்பக்கத்திலே கிரந்தி என்னும் நோயும், கள்வராலும், நெருப்பாலும் அச்சமும் கீழ்த்திசை நோக்கிய பயணமும் உண்டாகும்; இக்கடகத் திங்கள் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள்8, நாள்15, நாழிகை20, விநாடி 56 ஆகும்; இதன் பலன்:- திருமகள் அன்பும், தானியமும், செம்பொன்னும், நிலமும், புதல்வரும், நவமணிகளும் கிடைக்கப்பெறும்; நல்லுணவு உண்டாம். (எ-று.)

இடவோட்டு விருச்சிகச் செவ்வாய்க்காலச்சக்கரத் திசையின் புத்திப்

பலன் முற்றும்.

## இரண்டாவது இடவோட்டுத் துலாவெள்ளிக் காலச்சக்கரத் திசையாண்டு பதினாறு

*(இது இடவோட்டு முதல்நாட்களாகிய உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் ஆகிய இந்நான்கின் இரண்டாங் காலுக்குரியது.)*

**தெரியுமிட வோட்டான துலாவெள்ளி சக்ரத்**
**திசைவருடம் பதினாறின் புத்திவாக்கியமே**
**இரிசூதென் றேவெளவோர் பொன்னைச்சேரென்**
**னிவ்வருடம் எண்பத்து மூன்றில்பகுத் துண்ணும்**
**புரியிதற்கே கன்னிகையுடல்; துலாமுயிராம்; பலன்கேள்**
**புகழ்கன்னிப் புதன்புத்தி தனில்ஆடை லாபம்**
**பரிவுறுபுத் திரலாபம் வாகனலா பமுமாம்**
**பகரும்ஆ ரோக்கியம்உ ச்சாகமும்உண் டென்னே.** (75)

(இ-ள்.) ஆராயப்படும் இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னிரண்டனுள் இரண்டாவதாகிய துலா வெள்ளிக் காலச்சக்கரத் திசையாண்டு பதினாறாகும்; இதற்குப் புத்தி முறை அறியும் வாக்கியமாவது "சூதென்றே வெளவோர் பொன்னைச் சேரென்" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற் குரிய முழுயாண்டுத் தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணுமென்க; இத்திசைக்கு உடலிராசி கன்னியும், உயிரிராசி துலாமும் ஆகும் என்க; இத்திசையின் புத்திகளுள் உடலிராசிப் புத்தியாகிய முதற்புத்தி கன்னிப்புத்தி புதன் புத்தியாகும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 7, நாள் 24, நாழிகை 34 ஆகும்; இதன் பலன்:- உடைகள் கிடைக்கும், மகப்பேறுண்டாம் ஊர்தி உண்டாம். உடல் நலமும், முயற்சியும் உண்டாகும் என்று கூறு. (எ-று.)

வலவோட்டு இடபவெள்ளித் திசைக்குக் கூறிய பலன்களையே இத்திசைக்கும் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்துலா வெள்ளித் திசைக்குப் புத்தி வாக்கியமாவது "சூதென்றே வெளவோர் பொன்னைச் சேரென்" என்பதாம்; இவ்வாக்கியத்தை; சூ-6, கன்னிப் புதன் புத்தி; தெ-7, துலாவெள்ளிப் புத்தி; றே-8, விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி; வெள-12, மீன வியாழன் புத்தி; வோ-11, கும்பச்சனிப் புத்தி; பொ-10, மகரச் சனிப்புத்தி; னை-9, தனுர் வியாழன் புத்தி; சே-8, விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி; ரெ-7, துலா வெள்ளிப் புத்தி என்று கணக்கிட்டறிக.

இவற்றின் திசையாண்டுகள் முறையே 9+16+7+10+4+4+10+7+16 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்.

இவ்வாக்கியமே இடவோட்டுக் கும்பச்சனிக் காலச் சக்கரத்திசைக்கும் உரியதென்பதை இந்நூல் 114ஆம் பாட்டால் அறிக.

வலவோட்டுத் துலாவெள்ளித் திசையின் புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதே இத்திசைக்கும் புத்தி முறையாதலின் அத்திசையின் புத்தி வாக்கியமாகிய "எம்பேரைத் தொட்டோர் வெளதே னெட்டூர்" என்பதை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசைக்குப் புத்தி முறை அறியலாம்.

**என்னுமிந்தத் துலாவெள்ளி புத்தியினிற் செல்வம்**
**இனியமக்கள் தானியவத் திராபரண லாபம்**
**மன்னும்பெண் லாபம்வா கனலாபம் உண்டாம்**
**வாய்ந்தவிருச் சிகச்செவ்வாய்ப் புசிப்பில்சுர தாகம்**
**பன்னுபகை தனச்சேதம் பிதுர்ப்பீடை காட்டும்**
**பார்க்கில்விருச் சிகத்திலிருந்து மீனத்திற் குதிக்கும்**
**உன்னிலிது துரககதி என்பரிதன் பலன்றான்**
**உள்ளபடி உரைத்திடுதல் உத்தமர்சொற் படியே. (76)**

*(இ-ள்.) இடவோட்டுத் துலா வெள்ளித் திசையில் இரண்டாவது புத்தியாகிய துலாவெள்ளிப் புத்தியின் காலம் ஆண்டு 3, திங்கள் 1, நாள் 0, நாழிகை 21, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- செல்வமும், நல்ல புதல்வரும், தானியமும், ஆடையும், அணிகலன்களும், பெண்களும், வாகனமும் கிடைத்தலாம். இத்திசையில் இதன்பின் மூன்றாவதாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி நடக்கும். இதன் காலம் ஆண்டு1, திங்கள் 4, நாள் 5, நாழிகை 46, விநாடி 59 ஆகும்; இதன் பலன்:- சுரநோயும், தாகமும், தீமையாகக்கூறப்படும் பகையும், பணங்கள் கெட்டுப் போதலும், தந்தைக்குத் துன்பமும் உண்டாகும். இதன்பின் இத்திசையில் நான்காவது புத்தி விருச்சிக இராசியிலிருந்து மீன இராசியிற் பாய்ந்து நடக்கும்; இது குதிரைக்கதியாகும்; இக்கதி நிகழும்பொழுது நடக்கும் பலனை உள்ளவாறு உயர்ந்தோர் உரைப்படி உரைப்பேன். (எ-று.)*

படியில்லிடர் தீச்சோரர் கருவிசுரம் ஒன்னார்
பயம்பூமி நாசமுடன் பிராணபயம் காட்டும்
வடிவுடைய மீனகுரு புத்தியினிற் சீலம்
மனமகிழ்ச்சி ஆசாரம் நல்லதுணம் செல்வம்
துடியான நற்புசிப்பு சுகந்தம்தாம் பூலம்
துய்யசவுக் கியமிதன்மேற் கும்பசனிப் புத்தி
கொடியவொன்னார் பயஞ்சோரம் பயந்தனநா சனமாம்
குலநாசம் பெண்பீடை குலமைந்தர்க் கிடரே. (77)

*(இ-ள்.) இடவோட்டுத் துலாவெள்ளித் திசையில் விருச்சிகத்திலிருந்து மீனத்திற் பாயுமென்று மேற்பாட்டிற் கூறிய குதிரைக்கதி நிகழும்பொழுது நஞ்சினாலும் நெருப்பினாலும், கள்வராலும், படைக்கலங்களாலும், சுரநோயாலும், பகைவராலும் அச்சம் உண்டாகும்; நிலம் கெடும்; உயிருக்கு அச்சம் உண்டாகும். இந்த மீன வியாழன் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 11, நாள் 3, நாழிகை 58, விநாடி 33 ஆகும்; இதன்பலன்:- நல்லியல்பை மேற் கொள்ளலும், மனத்திற்கு உவகையும், நல்லொழுக்கமும்,*

நற்பண்பும், செல்வமும், உயர்ந்த நல்ல உணவும், நல்ல மணப்பொருளும், வெற்றிலைப் பாக்கும், சிறந்த சுகமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் நிகழும் ஐந்தாம் புத்தி கும்பச்சனிப் புத்தியாகும்; இதன் காலம் திங்கள் 9, நாள் 7, நாழிகை 35, விநாடி 26 ஆகும்; இதன் பலன்:- கொடிய பகைவராலும், கள்வராலும் அச்சமும், பணம் அழிதலும், குலவொழுக்கங் கெடுதலும், பெண்களுக்குத் துன்பமும், குலப்புதல்வர்கட்கு இடையூறும் நிகழும் (எ-று.)

(பலன் அடுத்த பாட்டிலும் தொடர்கிறது)

**வேறு**

இடர தாமனத் தாபமுண் டென்பரே
ஏற்கை யாகும் சுரச்ச னிப்புத்தி
புடவி யாளும் புரவலர் கோபமாம்
பூமி நட்டம் புகல்பல சேதமாம்
திடமி குந்த சகோதரப் பீடையாம்
சேனவி ரோதம் தனங்கெடு மென்பரால்
தொடரு மாதம் உயிருறு கோட்களின்
தொகுதி கண்டு பலாபலன் சொல்வரே. (78)

(இ-ள்.) மேற்பாட்டிலே குறிப்பிட்ட கும்பச்சனிப் புத்தியில் துன்பத்தைச் செய்யும் மனவேறுபாடும் உண்டாகும் என்பர். இத்திசையில் இதன்மேல் ஆறாவதாகிய மகரச்சனிப் புத்தி நிகழும்; இதன் காலம் திங்கள் 9, நாள் 7, நாழிகை 35, விநாடி 26 ஆகும்; இதன் பலன்:- உலகத்தை ஆளும் அரசரின் சினத்திற்கு உள்ளாதலும், நிலம் கெடுதலும், தனக்குக் கிடைக்கும் பயன் கெடுதலும், திடமுடைய உடன் பிறந்தார்க்குத் துன்பம் தோன்றுதலும், பொதுமக்கள் பகை விளைதலும், பொருட்கேடும் ஆகிய இவை உண்டாகும். இப்புத்திகள் தொடங்குந் திங்களில் உயிர் இராசியில் உற்ற கோள்களின் சேர்க்கையறிந்து (நல்லோர் தீயர் அவர்களின் வலிவு முதலியன) நற்பலன் தீப்பலன் சொல்வர். (எ-று.)

சொல்லியகோ தண்டப்பொன் புத்திசுய தருமம்
சுகப்புசிப்பு வித்தைமைந்தர் தனச்செல்வம் மிக்காம்
வெல்லும்விருச் சிகச்செவ்வாய்ப் புத்திதுர்க் கண்டம்
வெகுசாவு வெகுதுக்கம் சகோதரவெம் பீடை
புல்லுமிதன் மேற்றுலா வெள்ளிபுத்தி தனிலே
போர்விசயம் விக்கிரமம் உழவுவா ணிபமாம்
சொல்லுநாட் டியங்கீதம் வாத்தியத்திற் பிரியம்
திகழ்சுபகா ரியம்சுகந்தம் பிரியமெனச் செப்பே. (79)

*(இ-ள்.)* மேற்கண்ட இடவோட்டுத் துலாவெள்ளித் திசையில் ஏழாவதாகிய தனுர் வியாழன் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 11, நாள் 3, நாழிகை 58, விநாடி 33 ஆகும்; இதன் பலன்:- தானே செய்யும் அறச்செயலும், இன்பமான உணவை உண்டலும், கல்வியும், புதல்வரும், பணமும், ஏனைய செல்வங்களும், மிக உண்டாதலுமாகிய இவை விளையுமென்க. இத்திசையில் இதன் மேல் எட்டாவதாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு1, திங்கள்4, நாள்5, நாழிகை 46, விநாடி 59 ஆகும். இதன் பலன்:- தந்தைக்குத் தத்தும், பல இறப்பும், பலவகைத் துக்கமும், உடன்பிறந்தார்க்குத் துன்பமும் உண்டாகும். இதன்மேல் இத்திசையில் ஒன்பதாவதாகிய துலா வெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 3, திங்கள் 1, நாள் 0, நாழிகை 21, விநாடி41, ஆகும்; இதன் பலன்:- போரிலே வெற்றியும், மிக்க ஆற்றலும், உழவு, வாணிபத்தொழில் வளர்தலும், நடனம், இசை வாத்தியங்களில் விருப்பமும், நற்செயல்களிலும், நன்மணப் பொருள்களிலும் விருப்பமும் உண்டாகும். (எ-று.)

இடவோட்டுத்துலாவெள்ளிக்காலச்சக்கரத் திசையின் புத்திபலன் முற்றும்.

சக்கரம்-10

## மூன்றாவது இடவோட்டுக் கன்னிப்புதன் காலச்சக்கரத் திசையாண்டு ஒன்பது

*(இது இடவோட்டு முதல் நாட்களாகிய உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் ஆகிய இந்நான்கின் மூன்றாங்காலுக்குரியது.)*

**திருக்குமிட வோட்டான கன்னிபுதன் சக்கரத்**
**திசைவருடம் ஒன்பதுக்கும் புத்திவாக் கியந்தான்**
**வரல்கூறு நீரிலாக்கங் கைபொய்யோ வென்ற**
**வாக்கியமெண் பத்தைந்து வருடம்வகுத் துண்ணும்**
**பெருகுகன்னி யேவுடலாம்; கும்பமே வுயிராம்;**
**பெருங்கன்னி யாபுதன்றன் புத்தியினிற் செல்வம்**
**தருகடவுட் பூசைஉடல் நலமிகவும் உண்டாம்**
**தனலாபம் எய்துமெனச் சாற்றினர்விண் ணவரே. (80)**

*(இ-ள்.) காணப்படும் இடவோட்டுக் காலச்சக்கரத்திசை பன்னிரண்டனுள் மூன்றாவதாகிய கன்னிப் புதன் காலச்சக்கரத் திசையாண்டு ஒன்பதாகும்; இத்திசைக்குப் புத்திகளின் முறை அறிந்துகொள்ளும் வாக்கியம் "கூறு நீரிலாக் கங்கை பொய்யோ" என்பதாம். இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தைந்தாகும். இத்தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணு மென்க. இத்திசைக்கு உடலிராசி கன்னியும், உயிரிராசி கும்பமும் ஆகும்; இத்திசையின் புத்திகளுள் முதலாவதாகிய கன்னிப்புதன் புத்தியின் காலம், திங்கள் 11, நாள் 13, நாழிகை 3, விநாடி 32 ஆகும்; இதன்பலன்:- செல்வம் உண்டாதலும், கடவுளைப் பூசித்தலும், உடற்சுகமும் மிகவுண்டாகும்; பணம் கிடைக்குமென உயர்ந்தோர் கூறினர். (எ-று.)*

*வலவோட்டுள் மிதுன புதன் திசைக்குக் கூறிய திசைப்பலனையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.*

**வாக்கிய விளக்கம்:**

இக்கன்னிப் புதன் திசைக்குக் கூறியுள்ள புத்தி அறியும் வாக்கியமாவது "கூறு நீரிலாக் கங்கை பொய்யோ" என்பதாம்; இவ்வாக்கியத்தை, கூ-6, கன்னிப் புதன் புத்தி; று-5, சிங்க ஞாயிறு புத்தி; நீ-4, கடகத் திங்கள் புத்தி; ரி-3, மிதுன புதன் புத்தி; லா-2, இடப வெள்ளிப் புத்தி; க-1, மேடச் செவ்வாய்ப் புத்தி; கை-9, தனுசு வியாழன் புத்தி; பொ-10, மகரச்சனிப் புத்தி; யோ-11, கும்பச்சனிப் புத்தி என்று கணக்கிட்டறிக.

இவற்றின் திசையாண்டுகள் முறையே 9+5+21+9+16 +7+10+4+4 ஆகும்; இவற்றைக் கூட்டிய முழுயாண்டு எண்பத்தைந்து ஆகும்.

இத்திசையின் புத்தி வாக்கியம் இடவோட்டு மகரச்சனிக் காலச்சக்கரத் திசைக்கும் உரியதென்பதை இந்நூல் 119 ஆம் செய்யுளால் அறிக.

வலவோட்டுக் கன்னிப் புதன் காலச்சக்கரத் திசையின் புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதே இத்திசைக்குப் புத்திமுறை யாதலின், அத்திசையின் புத்தி வாக்கியமாகிய "கோன் கொடை வல்லார் தீக்கீர் முப்பூண்" என்பதை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசைக்குப் புத்திமுறை அறியலாம்.

**விண்ணமர்சிங் காதித்தன் புத்தியிற்கா மாலை**
**வியாதிபாண் டொடுகுருவின் கிலேசபயம் பேதி**
**நண்ணுதனச் சேதம்அனா சாரபசு நாசம்**
**நவில்கடக மதிபுத்தி மந்திரநற் கீர்த்தி**
**எண்ணுபகை யாற்பீடை பொருள்நாசம் நோயாம்**
**இயல்மிதுன புதன்புத்தி சூதுவா ணிகமாம்**
**பண்ணமருங் கீர்த்தியுண்டாம் புத்திரரும் உண்டாம்**
**பசுமுதலாம் பாக்கியங்கள் உண்டாம்பைங் கோடியே. (81)**

**வேறு**

கொடியே இடப வெள்ளியினுண்
குதிரை யானை ஒட்டகமும்
வடிவ தான பசுப்பொருளும்
மகிழ்ச்சி யாக வுண்டாகும்
துடிசே ரிடையார் கூட்டத்தால்
சுகமாம் அரசர் போசனமாம்
படிமேல் பந்து சனப்பிரியம்
பகரும் வேந்தர் பிரியமென்னே. (82)

(இ-ள்.)கொடிபோன்றவளே! மேற்கூறிய இடவேட்டுக் கன்னிப்புதன் திசையில் ஐந்தாவதாகிய இடப வெள்ளிப் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 8, நாள் 9, நாழிகை 52, விநாடி 56 ஆகும். இதன் பலன்:- குதிரைகளும், யானைகளும், ஒட்டகங்களும், அழகான பசுக்களும், உவப்பாக உண்டாகும். உடுக்கை போன்ற இடையினையுடைய பெண்களின் கூட்டத்தினாலே இன்பம் உண்டாகும்; அரசரது உணவு கிடைக்கும். உறவினரின் விருப்பமும், அரசரின் விருப்பமும் உண்டாகும். (எ-று.)

**வேறு**

பிறியமாம் மேடச்சேய் புத்தியில்நீர்ப் பாடு
பெலத்தமன்னர் தீய்ச்சுரத்தால் பயந்தேக ரீடை
செறிவில்தனச் சேதம்இந்த மேடத்தி னின்றே
செய்யதனு விற்பாய்தல் சிங்கத்தின் பாய்ச்சல்
அறியிலிதன் பலன்கருவி விடம்பற்றார் பகையாம்
ஆபத்து பிராணபயம் பிதுர்க்கிலே சந்தான்
குறியதனுர்ப் பொன்புத்தி வித்தைதா னியம்பொன்
குருதேவ தாபத்தி சவுக்கியஞ்சோ பனமே. (83)

(இ-ள்.) மேற்கூறிய இடவோட்டுக் கன்னிப்புதன் திசையில் ஆறாவதாகிய வேறுபடுத்தலைச் செய்யும் மேடச் செவ்வாய்ப் புத்தியின் காலம், திங்கள் 8, நாள் 26, நாழிகை 49,

விநாடி 25 ஆகும். இதன் பலன்:- நீரிழிவு நோயாலும், ஆற்றலுடைய அரசராலும், நெருப்பினாலும், சுரநோயாலும், அச்சம் உண்டாகும். உடல் துன்பமும், பணச்சேதமும் ஏற்படும். இதன் பின் இத்திசையில் ஏழாவது புத்தி மேட இராசியிலிருந்து தனுசு இராசியிற் பாய்ந்து நடக்கும்; இக்கதி சிங்காவலோகனமாம்; இக்கதி நிகழும்பொழுது நடை பெறும் பலனை அறியின் படைக்கலங்களாலும், நஞ்சினாலும் அச்சம் உண்டாகும். தந்தையைப் பற்றிய கவலை உண்டாகும். இக்கதியால் நிகழ்ந்த தனுர்வியாழன் புத்தியின் காலம் ஆண்டு 1, திங்கள் 0, நாள் 21, நாழிகை 10, விநாடி 35 ஆகும். இதன் பலன்:- கல்வியும், தானியமும், செம்பொன்னும், குருபத்தியும், தெய்வபத்தியும், சுகமும், நல்வாழ்வும் உண்டாம். (எ-று.)

**சோபனமா கியமகரச் சனிப்புத்தி தன்னில்**
**துன்பமாம் நீரடைப்பு நீர்ப்பாடு குன்மம்**
**தாபசுரம் பூதபயம் மனக்கிலே சந்தான்**
**தருமிதன்மேல் கும்பச்சனி புத்தியினிற் றானே**
**ஆபத்து மிகுந்தேக பீடைதன நாசம்**
**அடையலரால் புரவலரால் பயம்மனத்தின் பீதி**
**தூபமென மனம்புகையும் கிலேசமே காட்டும்**
**சுந்தரவிற் புருவமின்போல் துலங்கியநுண் ணிடையே. (84)**

(இ-ள்.) அழகிய வில் போன்ற புருவத்தையும் மின்னல் போல் விளங்கும் சிற்றிடையையும் உடையவளே ! மேற் கூறிய கன்னிப்புதன் திசையில் எட்டாவதாகியமகரச் சனிப் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- துன்பம் விளைகிற நீரடைப்பும், நீரிழிவும், குன்மமும், வெப்பம் விளையும் சுரமும் என்னும் நோய்களால் அச்சமும், மனக்கவலையும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் நிகழும் ஒன்பதாவதாகிய கும்பச்சனிப் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- திடீரென்று துன்பம் ஏற்படுதலும், மிக்க உடற்பீடையும், பணக்கேடும்,

பகைவரால், மன்னரால் அச்சம் நிகழ்தலும், மன அச்சமும், புகையைப் போல மனம் புகைதலும், கவலையும் காண்பிக்கும். (எ-று.)

*இடவோட்டுக் கன்னிப் புதன் காலச்சக்கரத் திசைப்பலன் முற்றும்.*

## நான்காவது இடவோட்டுச் சிங்க ஞாயிறு காலச்சக்கரத் திசையாண்டு ஐந்து

(இத்திசை, இடவோட்டு முதல் நாட்களாகிய உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் ஆகிய இந்நான்கின் நான்காங்காலுக்குரியது.)

**தங்குமிட வோட்டான சிங்கரவித் திசையாம்**
**சக்கரத்தின் வருடமைந்திற் புத்திவாக் கியந்தான்**
**துங்கவெள வலாரிபுக்கீர் தூதென்றே முறையால்**
**சொல்லும்வாக் கியம்வருடம் நூறும்வகுத் துண்ணும்**
**சிங்கமதற் கேமீனம் தேகம்; விருச் சிகந்தான்**
**சீவனென்ப தாம்; மீன வியாழபுத்தி தனிலே**
**மங்கலமாங் கரிபரிதண் டிகைதனதா னியமும்**
**மாண்பான ஆடையணி பூமிகள்வந் திடுமே. (85)**

(இ-ள்.) நிலைபெறும் இடவோட்டாகிய காலச் சக்கரத்திசை பன்னிரண்டனுள் நான்காவதாகிய சிங்க ஞாயிற்றின் திசையாண்டு ஐந்தாகும்; இதற்கு புத்தி அறியும் வாக்கியம் "வெள வலாரி புக்கீர் தூதென்றே " என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு நூறாகும்; இத்தொகையால் இத்திசையைப் புத்திகள் பிரித்துண்ணு மென்க. இச்சிங்க ஞாயிறு திசைக்கு உடலிராசி மீனமும், உயிரிராசி விருச்சிகமும் ஆகும்; இத்திசையின் முதற் புத்தியாகிய மீன வியாழன் புத்தியின் காலம், திங்கள் 6 ஆகும். இதன் பலன்:- மங்கலச்செயல் உண்டாகும். யானையும், குதிரையும், பல்லக்கும், பணமும், தானியமும், உடையும், நகைகளும், நிலங்களும் வந்து சேரும். (எ-று.)

வலவோட்டு ஞாயிறு திசைக்குக் கூறிய திசைப்பலன் களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்திகள் அறியும் வாக்கியம் "வெளவலாரி புக்கீர் தூதென்றே" என்பதாம்; இவ்வாக்கி யத்தை வெள-12, மீன வியாழன் புத்தி; வ-1, மேடச் செவ்வாய்ப்புத்தி; லா-2, இடப வெள்ளிப் புத்தி; ரி-3, மிதுன புதன் புத்தி; பு-5, சிங்க ஞாயிறு புத்தி; கீ-4, கடகத்திங்கள் புத்தி; தூ-6, கன்னிப் புதன் புத்தி; தெ-7, துலா வெள்ளிப் புத்தி; றே-8, விருச்சிகச் செவ்வாய்ப்புத்தி என்று கணக்கிட்டறிக.

இவற்றின் திசையாண்டுகள் முறையே 10+7+16+9+5+21+9+16+7 என்று ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு நூறு.

இத்திசையின் புத்தி வாக்கியம் இடவோட்டுத் தனுர் வியாழன் திசைக்கும் உரியதென்பதை இந்நூல் 124ஆம் செய்யுளால் அறிக.

வலவோட்டுச் சிங்க ஞாயிற்றின் காலச்சக்கரத் திசைக்குரிய புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதே இத்திசைக்குப் புத்திமுறை யாதலின், அத்திசையின் புத்தி வாக்கியமாகிய "தேர் என்றூரீர் புரியாடல் வெள" என்பதை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசைக்குப் புத்திமுறை அறியலாம்.

இடுமேடக் குசன்புத்தி தனிற்றேக பீடை
இராசபயம் தேசமேற் றிரிதல்உ ற்றார்க் கிடுக்கண்
தொடுமிடப வெள்ளிபுத்தி தனிற் றேசத் தலைதல்
சுரஞ்சோரர் மன்னவரால் பயந்தனக்கே டாகும்
அடுமிதுன புதன்புத்தி தனிற்றனங்கள் நாசம்
அடையலரால் பயம்ஞானம் வெறுத்தல்மனத் துயரம்
சடுதியிலிம் மிதுனநின்று சிங்கத்தி லேதான்
தாண்டுமிது மண்டுக கதியென்பர் அனமே. (86)

*(இ-ள்.)* அன்னம் போன்றவளே! இடவோட்டாகிய சிங்க ஞாயிறு திசையில் இரண்டாவதாகிய மேடச் செவ்வாய்ப் புத்தியின் காலம், திங்கள் 4, நாள் 6 ஆகும். இதன் பலன்:- உடல் துன்பமும், அரசரால் அச்சமும், உலகத்தின் கண் அலைந்து திரிதலும், உறவினர்க்குத் துன்பமும் உண்டாகும். இதன் மேல் இத்திசையில் மூன்றாவதாகிய இடபவெள்ளிப் புத்தியின் காலம், திங்கள் 9, நாள் 18 ஆகும்; இதன் பலன்:- தேச யாத்திரையும், சுரத்தாலும், கள்வராலும், அரசராலும், அச்சமும், பணக்கேடும் உண்டாகும். இதன்மேல் இத்திசையில் நான்காவதாகிய மிதுன புதன் புத்தி நடைபெறும். இதன் காலம், திங்கள் 5, நாள் 12 ஆகும்; இதன் பலன்:- பணக்கேடும், பகைவரால் அச்சம் நிகழும், ஞானத்தினை வெறுத்தலும், மனத்துயரமும் உண்டாகும். இதன்பின் இத்திசையில் ஐந்தாவது புத்தி மிதுன இராசியிலிருந்து சிங்க விராசியிற் பாய்ந்து நடக்கும். இதனைத் தவளைக்கதி என்று சொல்லுவர்.

**அனமேயிப் பலன்சேதி பிதுர்பந்துக் கிலேசம்**
**அவமிருத்துப் பயம்தலைநோய் மனோபீடை உண்டாம்**
**வினவியசிங் காதித்தன் புத்திப்பெண் போகம்**
**மிக்கமைந்தர் பூமிபொருள் மகிழ்ச்சிசவுக் கியமே**
**கனமிகுந்த சிங்கம்நின்று கடகத்திற் புரளும்**
**கருதிலிது சர்ப்பகதி யாகுமிதன் பலன்றான்**
**மனமடிவா கியதுன்மம் வாதபித்த மேகம்**
**வலப்புறத்தி லேயிரணம் குணக்கினில்யாத் திரையே. (87)**

*(இ-ள்.)* அன்னம் போன்றவளே! இச்சிங்க ஞாயிறு திசையில் மேலே கூறிய தவளைக்கதி நிகழும் பொழுது நடக்கும் பலன்களாவன:- வயிற்றோட்டமும், தந்தையைப் பற்றியும், உறவினரைப் பற்றியும் கவலை உண்டாதலும், தீயசாவைப் பற்றிய அச்சமும், தலைநோயும், மனத் துன்பமும் உண்டாகும். இச்சிங்க ஞாயிறு புத்தியின் காலம், திங்கள் 3 ஆகும்; இதன் பலன்:- பெண் இன்பமும், புதல்வர், நிலம், பொருள் என்னும் இவைகளைப் பற்றிய மகிழ்ச்சியும்,

உடல் நலமும் உண்டாகும். இதன்பின் ஆறாவது புத்தி சிங்கமிருந்து கடகத்திலே புரளும்; இது பாம்புக் கதியாகும்; இக்கதி நிகழும் பொழுது உண்டாகும் பலன்:- மனம் குன்றுதற்குக் காரணமான குன்ம நோயும், வாதபித்த நோய்களும், மேகநோயும், வலப்பக்கத்திலே புண்ணும், கீழ்த்திசைப் பயணமும் உண்டாகும். (எ-று.)

**திரையார்க்கர் கடகமதி புத்திதன லாபம்**
**தேகசவுக் கியம்அரசர் போசனமாம் இதன்மேல்**
**இரையார்க்கர் கடகநின்று கன்னியிலே குதிக்கும்**
**ஈங்கிதுகுக் குடகதியாம் இப்பலன்றான் கூறில்**
**வரையாத சலகண்டம் மாதுர்பிதுர் மனைவி**
**மகவுற்றார் அவமிருத்து வயிறுளையும் வாதம்**
**நிரையாகும் கன்னிபுதன் புத்தியில்யாத் திரையாம்**
**நிகர்கீர்த்தி மைந்தர்கலை நேர்தல்சவுக் கியமே. (88)**

(இ-ள்.) மேலே கூறிய சிங்க ஞாயிறு திசையில் பாம்புக் கதியாய் நிகழ்ந்த கடகத் திங்கள் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 0, நாள் 18 ஆகும். இதன் பலன்:- பணமும், உடற்சுகமும், அரசர் உணவும் கிடைக்கும். இத்திசையில் இதன் மேல் ஏழாவது புத்தி கடகத்திலிருந்து கன்னியிலே குதித்து நிகழும்; இது கோழிக் கதியாகும்; இது நிகழுங்கால் தண்ணீரால் தத்தும், தாய், தந்தை, மனைவி, புதல்வன் என்னும் இவர்களின் தீச்சாவும், வயிற்று வலியும், வாதநோயும் உண்டாகும். இக்கன்னிப் புதன் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 12 ஆகும்; இதன் பலன்:- யாத்திரை உண்டாகும்; புகழும், புதல்வர்ப்பேறும், ஆடையும் கிடைக்கும், உடல் நலமாயிருக்கும். (எ-று.)

## வேறு

**இயல்துலா வெள்ளி புத்திதே சத்தில்**
**எய்திடல் குரல்தடிப் பாகும்**
**அயல்சிர நோய்கள் வத்திரச் சேதம்**
**ஆவினம் நாசமாம்; இதன்மேல்**

முயல்விருச் சிகச்சேய்ப் புத்தியில் பூமி
முத்துபொன் மாணிக்க லாபம்
செயலுறு தேக சவுக்கியம் உயுத்த
செயஞ்சுக போசனந் தருமே. (89)

(இ-ள்.) மேற்கூறிய சிங்க ஞாயிறு திசையில் எட்டாவதாகிய துலா வெள்ளிப் புத்தியின்காலம், திங்கள் 9, நாள் 18 ஆகும் இதன் பலன்:- பல தேசங்களை அடைதலும், குரல் தடித்து ஒலித்தலும், தலைநோயும், ஆடைகள் கெடுதலும், பசுக்கேடும் விளையும். இத்திசையில் இதன் மேல் ஒன்பதாவதாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 4, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- நிலமும், முத்தும், செம்பொன்னும், மாணிக்கங்களும், உடல் நலமும், போரில் வெற்றியும், இன்ப உணவும் கிடைத்தலும் நிகழும். (எ-று.)

*இடவோட்டுச் சிங்க ஞாயிறு காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் முற்றும்.*

## ஐந்தாவது இடவோட்டுக் கர்க்கடகத் திங்கள் காலச்சக்கரத் திசையாண்டு இருபத்தொன்று

(இத்திசை, இடவோட்டு இடை நாட்களாகிய மிருகசீரிடம், பூரம், அனுடம், அவிட்டம் ஆகிய இந்நான்கின் முதற்காலுக்குரியது)

அமருமிட வோட்டான கடகமதிச் சக்ரம்
ஆண்டிருபத் தொன்றுக்கும் புத்திவாக் கியந்தான்
எமர்வெளகோட் சொலையேதென் றாடுநீ என்றே
ஈதெண்பத் தாறாண்டும் இனிதுண்ணும் இதற்கே
சமர்மீன மேதேகம்; கடகமே உயிராம்
தானாகை யால்மீன வியாழபுத்தி தனிலே
இமர்பத்தி வித்தைமைந்தா பெண்தனதா னியமாம்
இவைலாபம் இராசவெகு மானமும்உண் டாமே. (90)

(இ-ள்.) பொருந்திய இடவோட்டாகிய காலச் சக்கரத்திசை பன்னிரண்டனுள் ஐந்தாவதாகிய கடகத்திங்கள் திசையாண்டு இருபத்தொன்றாகும்; இதற்குப் புத்தியறியும் வாக்கியம் "வெள கோட் சொல்லையேதென் றூடுநீ" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தாறாண்டாகும்; இத்தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணுமென்க. இத்திசைக்கு உடலிராசிப் புத்தியும் முதற்புத்தியும் ஆகிய மீன வியாழன் புத்தியின் காலம், ஆண்டு 2, திங்கள் 5, நாள் 9, நாழிகை 4, விநாடி 11 ஆகும்; இதன் பலன்:- கடவுள் பத்தியும், கல்வியும், புதல்வரும், பெண்ணும், பணமும், தானியங்களும் கிடைக்கும்; அரசரால் சிறப்பிக்கப்படுதல் நிகழும் (எ-று.)

வலவோட்டுக் கடகத்திங்கள் திசைக்குக் கூறிய திசைப் பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தி வாக்கியம் "வெளகோட் சொல்லை யேதென் றூடுநீ" என்பதாம்; இதனை வெள-12, மீன வியாழன் புத்தி; கோ-11, கும்பச்சனிப் புத்தி; சொ-10, மகரச்சனிப் புத்தி; லை-9, தனுசு வியாழன் புத்தி; யே-8, விருச்சிகச்செவ்வாய்ப் புத்தி; தெ-7, துலா வெள்ளிப்புத்தி; றூ-6, கன்னிப்புதன் புத்தி; டு-5, சிங்க ஞாயிறு புத்தி; நீ-4, கடகத் திங்கள் புத்தி என்று கணக்கிட்டறிக.

இவற்றின் திசையாண்டுகள் முறையே 10+4+4+10+7+16+9+5+21 ஆக முழுயாண்டு எண்பத்தாறாகும்.

வலவோட்டுக் கர்க்கடகத் திங்கள் திசைக்குரிய புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதே இத்திசையின் புத்தி முறையாதலின், அத்திசையின் புத்தி வாக்கியமாகிய வீறுகூர் செவ்வேல் கைக் கொண்டோய் வெள என்னும் வாக்கியத்தை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசைக்கு புத்தி முறை அறியலாம்.

உண்டாங்கும் பச்சனியின் புத்தியங்க ரோகம்
உற்றவர்க்குக் கேடுதனம்பசுநாச மாகும்
அண்டாத சுரபயமும் இராசரோ கமுமாம்
அருண்மகரச் சனிபுசிப்பில் பந்துசன கலகம்
கொண்டாடும் மைந்தர்நட்டம் உடலதற்குப் பீடை
கூறுமனத்துக்கமிதன் மேற்றனுப்பொன் புத்தி
தண்டாகும் வத்திரா பரணத்தா னியம்பொன்
தக்கவித்தை லாபமுடன் ராசவெகு மானம். (91)

*(இ-ள்.)* மேற்கண்ட கடகத்திங்கள் திசையில் இரண்டாவது புத்தியாகிய கும்பச்சனிப் புத்தியின் காலம், திங்கள் 11, நாள் 21, நாழிகை 37, விநாடி 40 ஆகும். இதன் பலன்:- உடலுறுப்புக்களில் நோயும், உறவினர்க்கும், பணத்திற்கும், பசுக்களுக்கும் கெடுதல் நிகழ்தலும், சுரத்தால் அச்சமும், தன் அரசனுக்கு நோயும் உண்டாகும். இத்திசையில் இதன்பின் மூன்றாவதாகிய மகரச்சனிப்புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 11, நாள் 21, நாழிகை 37, விநாடி 40 ஆகும்; இதன் பலன்:- உறவினர் கலகமும், புதல்வர் கேடும், உடல் துன்பமும், மனத்துக்கமும் நிகழும். இத்திசையில் இதன் மேல் நடப்பது நான்காவதாகிய தனுர்வியாழன் புத்தியாகும்; இதன் காலம், ஆண்டு 2, திங்கள் 5, நாள் 9, நாழிகை 4, விநாடி 11 ஆகும்; இதன் பலன்:- ஆடையும், அணிகளும், தானியமும், செம்பொன்னும், கல்வியும் கிடைக்கப்பெறுதலும்; அரசரால் உபசரிப்பு உண்டாகப்பெறுதலுமாகும். *(எ-று.)*

மானமாம் விருச்சிகச்செவ் வாய்ப்புத்தி தனிலே
மன்னுதலைப்பாரம்மக்கள் பகைமிகவே வளரும்
ஈனமுறுஞ் சுரத்தினாற் பயமுண்டாம் இதன்மேல்
ஏற்றதுலா வெள்ளிபுத்தி தனில்வெள்ளி செம்பொன்
ஆனவத்தி ராபரணம் வாகனமும் பெண்ணும்
அதிகலா பம்சவுக்யம் பந்துவினுற் சாகம்
தானமிகுங் கன்னிபுதன் புத்தியினில் மன்னர்
சன்மானம் வித்தைவெள்ளி வெண்கலம்பூ லாபம்.(92)

*(இ-ள்.) மேற்கண்ட கடகத் திங்கள் திசையில் ஐந்தாவதாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 8, நாள் 15, நாழிகை 20, விநாடி 55 ஆகும்; இதன் பலன்:- தலைக்கனமும், உலக மக்கள் பகையும் மிக வளரும். தாழ்வு உண்டாகும், சுரநோயால் அச்சம் நிகழும். இத்திசையில் இதன்பின் ஆறாவதாகிய துலாவெள்ளிப் புத்தி நடக்கும்; இதன் காலம், ஆண்டு 3, திங்கள் 11, நாள் 26, நாழிகை 30, விநாடி 42 ஆகும்; இதன் பலன்:- வெள்ளியும், செம்பொன்னும், ஆடைகளும், அணிகளும், ஊர்திகளும், பெண்ணும் மிகவும் மிகுதலுமாம். இத்திசையில் இதன்பின் ஏழாவதாகிய கன்னிப்புதன் புத்தி நடக்கும்; இதன் காலம், ஆண்டு 2, திங்கள் 2, நாள் 11, நாழிகை 9, விநாடி 46 ஆகும்; இதன் பலன்:- அரசரின் உபசரிப்பும், கல்வியும், வெள்ளியும், வெண்கலமும், நிலமும் கிடைத்தலாம். (எ-று.)*

**பூலாபம் திரீலாபம் ஆகுமிதன் மீதில்**
**புகழ்சிங்கா தித்தனுடைப் புத்திதனிற் றானே**
**மேலான பெண்போகம் நோய்பகைகள் நாசம்**
**வெகுலாபம் நற்புசிப்பு வெகுகார்ய சித்தி**
**மாலாகுங் கெம்பீரம் ஆகுமிதற் கப்பால்**
**வருங்கடக மதியூணில் மணம்பெண்கள் போகம்**
**சேலார்புத் திரலாபம் தானியம்பொன் வரத்தாம்**
**தேகசவுக் கியம்பந்து சனப்பிரிய மாமே. (93)**

*(இ-ள்.) மேற்கண்ட கடகத்திங்கள் திசையில் மேலே கூறிய கன்னிப் புத்திக்கு மேற்பாட்டில் கூறப்பட்ட பலன்களேயன்றி, நிலப்பேறும், பெண்பேறும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் எட்டாவதாகிய சிங்க ஞாயிறு புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 2, நாள் 19, நாழிகை32, விநாடி 6 ஆகும்; இதன் பலன்:- உயர்ந்த பெண்ணின் இன்பம் உண்டாகும்; பிணியும், பகைகளும் கெடும், மிக்க வருவாய் வருதலும், நல்லுணவை உண்டலும் பல காரியங்கள் முடிதலும், மேன்மை விளைதலும் ஆகும். இத்திசையில் இதன்பின் ஒன்பதாவது உயிர்ப்புத்தி என்று*

கூறப்படுவதும் ஆகிய கடகத்திங்கள் புத்தி நிகழும்; இதன்காலம், ஆண்டு 5, திங்கள் 1, நாள் 16, நாழிகை 2, விநாடி 47 ஆகும்; இதன் பலன்:- திருமணமும், பெண்கள் இன்பமும், மகப்பேறும், தானியமும், பொன்னும் வருதலும் உடல்நலமும், உறவினர் விருப்பமும் உண்டாகும். (எ-று.)

இடவோட்டு கர்க்கடகத் திங்கள் காலச்சக்கரத்
திசைப்புத்தி பலன் முற்றும்.

## ஆறாவது இடவோட்டு மிதுன புதன் காலச்சக்கரத் திசையாண்டு ஒன்பது

*(இத்திசை, இடவோட்டு இடைநாட்களாகிய மிருக சீரிடம், பூரம், அனுடம், அவிட்டம் என்னும் இந்நான்கின் இரண்டாங்காலுக்குரியது.)*

**தெண்டிரையி லிடவோட்டாம் மிதுனபுதன் சக்கரத்**
**திசைவருடம் ஒன்பதிற்கும் புத்திவாக் கியந்தான்**
**உண்டநிலா வரைதொட்டோ வெளவற்றார் என்றே**
**உரைத்திடுமாண் டெண்பத்து மூன்றில்பகுத் துண்ணும்**
**அண்டியதோர் மிதுனத்திற் கேமிதுனம் உடலாம்**
**அருளிடபம் உயிரென்பர்; அப்புதனும் புகரும்**
**கண்டவுடல் உயிராகை யால்நீராற் கண்டம்**
**கன்னியரால் நஞ்சினால் அவமிருத்தாம் பயமே. (94)**

(இ-ள்.) தெளிந்த அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகிலே இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னி ரண்டனுள் ஆறாவதாகிய மிதுன புதன் காலச்சக்கரத் திசையாண்டு ஒன்பதாகும்; இதற்குப் புத்தி அறியும் வாக்கியமாவது "நிலாவரை தொட்டோ வெளவற்றார்" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்; இத்தொகையால் இத்திசையை இதன்புத்திகள் பிரித்துண்ணுமென்க; இம்மிதுன புதன் திசைக்கு உடலிராசி மிதுனமும், உயிரிராசி இடபமும் ஆகும்; இத்திசைக்குப் புதனும், வெள்ளியும், உடலிராசி உயிரிராசிக்

குரியவராய் வந்துள்ளமையால் இவர்கள் தீயவர்களுடன் கூடியபொழுது இத்திசையில் தண்ணீரால் தத்தும், பெண்களால் நஞ்சினால் தீய சாவு நிகழுமென்ற அச்சமும் உண்டாம். (எ-று.)

வலவோட்டுள் மிதுன புதன் திசைக்குக் கூறிய திசைப்பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:-**

இத்திசைக்குப் புத்தியறியும் வாக்கியம் "நிலாவரை தொட்டோ வெளவற்றார்" என்பதாம்; இவ்வாக்கியத்தை, நி-3, மிதுன புதன் புத்தி; லா-2, இடபவெள்ளிப் புத்தி; வ-1, மேடச்செவ்வாய்ப் புத்தி; ரை-9, தனுர் வியாழன் புத்தி; தொ-10, மகரச்சனிப்புத்தி; டோ-11, கும்பச்சனிப்புத்தி; வெள-12, மீனவியாழன் புத்தி; வ-1, மேடச்செவ்வாய்ப்புத்தி; றா-2, இடபவெள்ளிப்புத்தி என்று கணக்கிட்டறிக.

இப்புத்திகளின் திசையாண்டுகள் முறையே9+16+7+10+4+ 4+10+7+16 ஆகும். இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்.

வலவோட்டு மிதுன புதன் திசைக்குரிய புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதே இத்திசையின் புத்தி முறையாதலின் அத்திசையின் புத்தி வாக்கியமாகிய "தானமெள வோர் தொல்லையராகி " (இந்நூல் செய்யுள் 23 ) என்னும் வாக்கியத்தை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசைக்குரிய புத்தி வாக்கியமாம் என்க.

பயமாற்றும் மிதுனபுதன் புத்திகுரு[illegible]
பந்துசனப் பிரியமன்னர் சன்மானம் லாபம்
நயமாகும் இடபவெள்ளி புத்திபொருள் வெற்றி
நவமணிபொன் னாரியரும் லாபம்போர் செயித்தல்
செயமாக வருவிசயம் சவுக்கியமும் உண்டாம்
திகழ்மேடச் செவ்வாயின் புத்தியினிற் கிலேசம்
சுயமாமுற் றார்நாசம் தேகவுட்னம் பகைவர்
சோரர்தீக் கருவிபயம் உலகினிற்சஞ் சாரம். (95)

(இ-ள்.) மேற்கூறிய மிதுன புதன் திசையுள் முதற்புத்தியாகிய பயத்தை மாற்றும் மிதுன புதன் புத்தியின் காலம், திங்கள் 11, நாள் 21, நாழிகை 19, விநாடி 32 ஆகும். இதன் பலன்:- ஆசிரியனிடத்திலே அன்பு செய்தலும், உறவினர் விருப்பமும், அரசரால் சிறப்பிக்கப் படுதலும், பொருட்பேறும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் இரண்டாவதாகிய இடபவெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 8, நாள் 24, நாழிகை 34, விநாடி 42 ஆகும். இதன் பலன்:- பொருளீட்டலில் வெற்றியும், ஒன்பது மணிகளும், தங்கமும், பெண்களும் கிடைத்தலும், போரிலே வெற்றியுண்டாதலும், வெற்றி விழாவும், உடல் நலமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் மூன்றாவதாகிய மேடச்செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 9, நாள் 3, நாழிகை 15, விநாடி 11 ஆகும்; இதன் பலன்:- கவலையும், உறவினர் அழிவும், உடல் வெப்பமும், பகைவரால், கள்வரால், நெருப்பால், படைக்கலங்களால் அச்சமும், உலகினிற் சஞ்சரித்தலும் நடைபெறும். (எ-று.)

**சாருமிந்த மேடநின்று தனுரிராசி தனிலே**
**தாண்டுமிது சிங்காவ லோகனத்தின் பலன்றான்**
**சோருமவ மிருந்துபயம் தென்முகத்தில் பயணம்**
**சோரபயம் பொருள்நாசம் பீடைபலன் காட்டும்**
**பேருடைய தனுர்க்குருவின் புத்தியினிற் றெய்வம்**
**பிராமணர்தம் பத்திகுரு பத்திதன லாபம்**
**சீருடைய ஆடையணி மைந்தர் சேர்க்கை**
**தெண்டிரையில் பிரபலமாம் செல்வமுண் டாமே. (96)**

(இ-ள்.) மேற்கூறிய மிதுன புதன் காலச்சக்கரத் திசையுள் நான்காவது புத்தி மேட இராசியிலிருந்து தனுர் இராசியிலே பாய்ந்து நடக்கும்; இக்கதி சிங்கவாவலோகனமாம்; இக்கதி நிகழுங்கால் தீய சாவினைப் பற்றிய அச்சமும், தென்றிசை நோக்கிய பயணமும், கள்வர் அச்சமும், பொருட்கேடும், துன்பம் விளைதலும் ஆகிய இப்பலன்கள் உண்டாகும்; இதற்குரிய தனுர் வியாழன் புத்தியின் காலம், ஆண்டு 1,

*திங்கள் 1, நாள் 0, நாழிகை 21, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- கடவுள், அந்தணர், ஆசிரியர் இவர்களிடம் அன்பும், பணப்பேறும் உடைகளும், நகைகளும், புதல்வரும் சேர்தலும், கடலிலிருந்து (மரக்கலம் முதலானவற்றால்) பெருஞ்செல்வம் உண்டாதலும் ஆகியவை நிகழும். (எ-று.)*

**ஆம்மகரச் சனிப்புத்தி தனிற்றேக பீடை**
**அரசர்பயம் சோரர்பயம் தலைவலிவெஞ் சுரமாம்**
**காம்மலிரஞ் சாரமுற்றார் பீடையிதன் மேலே**
**கருதுகும்பச் சனிபுத்தி தனிற்பெண்கள் கலகம்**
**தோம்மருகால் வலிவயிற்று வலிதலையிற் கலகம்**
**சுரபயம்மெய்ப் பீடைதனச் சேதம்மனத் தாபம்**
**பூம்மருவு மீனகுரு புத்தியினில் விரணம்**
**பொருந்துமணி நாசம்பின் சரீரகாந் தியுமே. (97)**

*(இ-ள்.) மேற்கூறிய இடவோட்டு மிதுன புதன் காலச்சக்கரத் திசையில் ஐந்தாவதாகிய மகரச்சனிப் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 6, நாழிகை 8, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- உடல் துன்பமும், கொடிய சுரமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் நிகழ்வது ஆறாவதாகிய கும்பச்சனி புத்தியாகும்; இதன் காலம், திங்கள் 5, நாள் 6, நாழிகை 8, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- பெண்களின் கலகமும், குற்றம் பொருந்திய கால்வலியும், வயிற்று வலியும், தலையிலே பாரமும், சுர பயமும், உடற்பீடையும், பணச்சேதமும், மனவேறுபாடும் நிகழும்; இத்திசையில் இதன்மேல் நடப்பது ஏழாவதாகிய மீன குரு புத்தியாகும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 1, நாழிகை 21, விநாடி 41 ஆகும்; இதன் பலன்:- உடற்காயமும், நகைகள் கெடுதலும் உண்டாகும்; இப்புத்தியின் பிற்பகுதியில் உடல் ஒளியும் (அடுத்த பாட்டு தொடரும்) (எ-று.)*

**காந்தியா கியபுத்ர லாபம்மன்னர் நோக்கம்**
**கனயோக மாம்மேடச் செவ்வாய்ப்புத் தியிலே**
**போந்தமா பயந்தேக பீடைமைந்தர் நாசம்**
**புரவலரால் பயம்மிகுந்த நோயுண்டா மிதன்மேல்**

சாந்தமாம் இடவெள்ளிப் புத்தியினிற் றானே
சாற்றுநவ மணிசெம்பொன் வெள்ளியும் வெண்கலமும்
ஏந்துவா கனப்பேறு அரசர்வெகு மானம்
இனியசவுக் கியம்மகிழ்ச்சி யெய்துமென லாமே. (98)

*(இ-ள்.)* மேற்கூறிய மீன குருப் புத்திக்கு மேற்பாட்டிற் கூறியுள்ள பலன்களேயன்றி, ஒளியுடைமையாகிய நற் புதல்வர்ப் பேறும், அரசரின் அருள் நோக்கமும், பல பொருட் சேர்க்கையும் உண்டாகும். இதன்பின் இப்புதன் திசையில் எட்டாவதாகிய மேடச்செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 9, நாள் 3, நாழிகை 15, விநாடி 11 ஆகும்; இதன் பலன்:- பேரச்சம் நிகழ்தலும், உடல் துன்பம் உண்டாதலும், புதல்வர்க் கேடு நிகழ்தலும், அரசரால் அச்சம் ஏற்படுதலும், மிக்க பிணி உண்டாதலுமாம். இத்திசையில் ஒன்பதாவதாகிய இடப வெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம் ஆண்டு 1, திங்கள் 8, நாள் 24, நாழிகை 34, விநாடி 42 ஆகும்; இதன் பலன்:- ஒன்பது மணிகளும், தங்கமும், வெள்ளியும், வெண்கலமும், உயர்ந்த ஊர்திப்பேறும் கிடைக்கும். அரசரால் சிறப்பினை அடைதலும், உடல் நலமும், மகிழ்ச்சியும் வரும். *(எ-று.)*

இடவோட்டு மிதுன புதன் காலச்சக்கரத் திசைப் புத்தி பலன் முற்றும்.

**ஏழாவதாகிய இடவோட்டு இடபவெள்ளிக் காலச்சக்கரத் திசையாண்டு பதினாறு.**

(இத்திசை, இடவோட்டு இடை நாட்களாகிய மிருக சீரிடம், பூரம், அனுடம், அவிட்டம் என்னும் இந்நான்கின் மூன்றாங்காலுக்குரியது.)

சீரிடவோட் டாமிடபச் சுக்கிரன்றன் சக்கரத்
திசையாண்டு பதினாறின் புத்திவாக் கியந்தான்
ஏர்இருசீர் சூட்டென்றே வெளவோர்பொன் என்றே
இயம்புவாக் கியமெண்பத் தைந்தில்வகுத் துண்ணும்

**சாருமிதற் கேமிதுனம் உடாலகும் மகரம்**
**சாற்றுமுயிர் ஆம்;மிதுன புதன்சிரிப்பிற் றானே**
**காரியங்கள் சித்திவித்தை சவுக்கியம்பொன் எய்தல்**
**கருத்தின்பம் ஞானவயி ராகமுண்டாங் காணே. (99)**

*(இ-ள்.) சீர்தங்கிய இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னிரண்டனுள் ஏழாவதாகிய இடபவெள்ளித்திசை யாண்டு பதினாறாகும்; இதற்குப் புத்தியறியும் வாக்கியம் "இருசீர் சூட்டென்றே வெளவோர் பொன்" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தைந்தாம்; இத்தொகையால் இத்திசையை இதன்புத்திகள் பிரித்துண்ணு மென்க; இத்தொகையால் இத்திசைக்கு உடலிராசி மிதுனமும், உயிரிராசி மகரமும் ஆகும்; இத்திசையில் முதலாவதாகிய மிதுன புதன் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள்8, நாள்9, நாழிகை 52, விநாடி 56 ஆகும். இதன் பலன்:- தொடங்கிய காரியம் நன்றாய் முடியும், கல்வியும், உடல் நலமும், தங்கமும் கிடைக்கும்; மனமகிழ்ச்சியும், ஞானமும், வைராக்கியமும் உண்டாகும். (எ-று.)*

வலவோட்டு இடபவெள்ளித் திசைக்குக் கூறிய திசைப்பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தி அறியும் வாக்கியம் இருசீர் சூட்டென்றே வெளவோர் பொன் என்பதாம்; இவ்வாக்கியத்தை, இ-3, மிதுன புதன் புத்தி; ரு-5, சிங்க ஞாயிறு புத்தி; சீ-4, கடகத்திங்கள் புத்தி; சூ-6, கன்னிப்புதன் புத்தி; வெள-12, மீன வியாழன் புத்தி; லோ-11, கும்பச்சனிப் புத்தி; பொ-10, மகரச் சனிப்புத்தி என்று கணக்கிட்டறிக.

இப்புத்திகளின் திசையாண்டுகள் முறையே 9+5+21+9+16+7+10+4+4 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு எண்பத்தைந்தாம்.

இத்திசையின் புத்திமுறை, வலவோட்டு இடப வெள்ளிக் காலச்சக்கரத் திசையின் புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதாதலின் அதன் வாக்கியமாகிய "பொற்போல் வெளவேய் பெற்றூர் நீடுதி" என்பதை ஈற்றிலிருந்து கணக்கிடினும் இத்திசைக்குப் புத்திமுறை அறிந்துகொள்ளலாம்.

காணலிந்த மிதுனநின்று சிங்கத்தில் தாண்டும்
கருதிலிது மண்டூகப் பாய்ச்சலிதன் பலனே
தானுடைய பெண்கலகம் தேகவெப்பம் கிரந்தி
நல்வயிற்றிற் பேதியுறும் சிங்கரவி புசிப்பில்
காணுறுகண் வலிவாத நோய்சத்தி ரோகம்
காவல்சிறை விலங்குண்டாம் கனத்தசிங்கத் திருந்தே
வாணுதல்கற் கடகத்தில் மீளுமிது தானே
மயூரகதி என்பரிதால் வரும்பலனைச் சொல்வாம். (100)

(இ-ள்.) மேலே கூறிய இடபவெள்ளித்திசையில் மிதுன புதன் புத்தி நடந்தபின், இரண்டாவது புத்தி மிதுனம் நின்று சிங்கவிராசியிற் பாய்ந்து நடக்கும்; இக்கதி தவளைப் பாய்ச்சலாகும்; இக்கதி தொடங்கும்பொழுது நாணத்தை யுடைய பெண்களாற் கலகமும், உடல் வெப்பமும், கிரந்தி என்னும் நோயும், வயிற்றோட்டமும் நிகழும்; இச்சிங்க ஞாயிற்றின் புத்தி திங்கள் 11, நாள் 8, நாழிகை 49, விநாடி 25ஆகும்; இதன் பலன்:- காணுகின்ற கண்களில் வலியுண்டா தலும், வாய்வு நோயும், உண்டதைக் கக்கும் நோயும், சிறைக் காவலும், விலங்கும் விளைதலாம், இத்திசையில் இப்புத்தி நடந்து முடிந்த பின்னர் மூன்றாவது புத்தி சிங்க விராசி யிலிருந்து கடகவிராசிக்குத் திரும்பி நடக்கும். இக்கதியினை மயூரகதி என்பர்; இதற்குரிய பலனை அடுத்த பாட்டிற் சொல்வாம். (எ-று.)

சொல்லரிய வயிற்றுவலி பேதிபித்த நோய்கள்
தொடர்வாதம் சூலைமெய்யில் உட்டினமே காட்டும்
புல்லியகர்க் கடகமதி புசிப்பிற்கா மாலை
புகல்வாத சயித்தியமும் பாண்டுதலை வலியும்
வல்லதனச் சேதமுண்டாம் கடகத்தி லிருந்தே
வளர்கன்னி தனிற்றாண்டும் குக்குடத்தின் கதியாம்
வெல்லுமிதன் பலன்மாதுர் பிதுர்பெண்டிர் கிலேசம்
மேற்கேகல் நீர்க்கண்டம் கர்ப்பகிலே சமுமே. (101)

*(இ-ள்.) மேலே கூறிய மயூரகதி தொடங்கும்பொழுது வாயினாற் சொல்லமுடியாத வயிற்றுவலியும், வயிற்றோட்டமும், பித்தத்தைப் பற்றிய பிணிகளும், வாய்வு நோயும், சூலை நோயும் உடல் வெப்பமும் நிகழும்; மயூர கதியாய் நிகழ்ந்த இக்ககடகத்திங்கள் புத்தியின் காலம், ஆண்டு 3, திங்கள் 11, நாள் 13, நாழிகை 3, விநாடி 32 ஆகும்; இதன் பலன்:- காமாலை, வாத சயித்தியம், உடல் வெளுத்தலாகிய பாண்டு, நோய், தலைவலி என்னும் இவை உண்டாகும்; பண அழிவும் ஏற்படும். இத்திசையில் இதன்பின் நான்காவது புத்தி கடக விராசியிலிருந்து கன்னியிராசியிற் பாய்ந்து நடக்கும்; இது கோழிக்கதியாகும்; இது நிகழும்பொழுது தாய், தந்தை பெண்டிரைப் பற்றிய கவலையும், மேலைத் திசையிலே பயணம் உண்டாதலும், தண்ணீர்த் தத்தும், கருப்பத்தைப் பற்றிய கவலையும் உண்டாகும். (எ-று.)*

சமுகமுறுங் கன்னிபுதன் புசிப்பினிலே உவப்பு
சவுக்கியங்கா ரியசித்தி தனலாபம் உண்டாம்
எமுகமுறுந் துலாவெள்ளிப் புத்தியின்நற் புசிப்பில்
இராசவெகு மானமுடன் சவுக்கியஞ்சந் தோடம்
அமுகமுற வேநினைத்த காரியங்கள் பலிதம்
ஆனவிருச் சிகச்செவ்வாய் ஊணில்மனத் துன்பம்
சுமுகமுறு மன்னவர்கள் பயம்கிரக பீடை
சொல்லரிய தரித்ரம் தனச்சேதம் ஆமே. (102)

(இ-ள்.) இவ்விடப வெள்ளித்திசையில் மேற்கூறிய கன்னிப்புதன் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 8, நாள் 9, நாழிகை 53, விநாடி 56 ஆகும்; இதன் பலன்:- மகிழ்ச்சியும், உடல் நலமும், தொடங்கிய காரியம் முடிதலும், பண வரவும் உண்டாதலாம். இத்திசையில் இதன்பின் ஐந்தாவதாகிய துலா வெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு 3, திங்கள் 0, நாள் 4, நாழிகை 14, விநாடி 7 ஆகும்; இதன் பலன்:- அரசராற் சிறப்பும், உடல் நலமும், மகிழ்ச்சியும், நினைத்த காரியம் பயனுற முடிதலும் உண்டாகும். இத்திசையில் இதன்பின் ஆறாவதாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி நடக்கும். இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 3, நாள் 24, நாழிகை 21, விநாடி 11ஆகும்; இதன் பலன்:- மனத்துன்பமும், அரசரால் அச்சமும், வீட்டிலே நலக்குறைவும், வறுமையும், பணச்சேதமும் உண்டாகும். (எ-று.)

ஆகுமிந்த விருச்சிநின்று மீனத்திற் குதிக்கும்
　　ஆம்துரக கதியென்றே அறைவரிதன் பலன்கேள்
வாதுள்ள தேககுரம் அலைச்சல்தன நாசம்
　　மனோதுக்க மிவையுண்டாம்; மீனகுரு புத்தி
ஏகுலவுந் தருமசிந்தை இனம்மக்கள் உறவாம்
　　இனியசெல்வம் ஆசாரம் வித்தைதன லாபம்
பாகுலவும் கும்பசனிப்புத்திஅநா சாரம்
　　பகைவர்பயம் மனோதுக்கம் சரீரவா தையுமே. (103)

(இ-ள்.) இவ்விடப வெள்ளித் திசையில் விருச்சிகச் செவ்வாய்ப்புத்தி நிகழ்ந்து முடிந்தபின், ஏழாவது புத்தி விருச்சிக இராசியிலிருந்து மீன இராசியிற் பாய்ந்து நடக்கும்; இதனைக் குதிரைக்கதி என்பர்; இக்கதி தொடங்கும்பொழுது உண்டாகும்; அலைச்சலும், பணக்கேடும், மனத்துன்பமும் உண்டாகும். இக்கதிக்குரிய மீன வியாழன் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 10, நாள் 17, நாழிகை 38, விநாடி 50 ஆகும்; இதன் பலன்:- அறத்தைப் பற்றிய எண்ணமும், தன் உறவினர், பொதுமக்கள் என்னும் இவர்தம் உறவும், இன்பந்தருஞ் செல்வமும், நல்லொழுக்கமும், கல்வியும், பணவருவாயும்

உண்டாகும். இத்திசையில் இதன் காலம், திங்கள் 9, நாள் 1, நாழிகை 3, விநாடி 32 ஆகும்; இதன் பலன்:- தீயவொழுக்கமும், பகைவரால் அச்சமும், மனத்துன்பமும், உடல் வருத்தமும் விளையும். (எ-று.)

## வேறு

மேவு மகரச் சனிப்புசிப்பில்
மிக்க மகிழ்ச்சி அதிகாரம்
தாவு பொற்பூ டணமுண்டாம்
சாற்றும் பந்து சனப்பிரியம்
மேவும் பகைவர் நாசனமாம்
மிகவும் வருமே தனலாபம்
கூவும் மிழலைக் குயின்மொழியே
குறிக்கும் பலன்கண் டுரைப்பதுவே. (104)

(இ-ள்.) கூவுகின்ற இளைய குயில் போன்ற மொழியினையுடையவளே! மேற்கூறிய இடவோட்டு இடப வெள்ளித் திசையில் ஒன்பதாவதாகிய மகரச்சனிப்புத்தியின் காலம், திங்கள் 9, நாள் 1, நாழிகை 3, விநாடி 32 ஆகும்; இதன் பலன்:- மிக்க உவகையும், அலுவலும், பொன் அணிகளும், உண்டாகும்; உறவினர் விருப்பமும், பகைவர் அழிவும், பண வருவாயும் ஏற்படும் என்று கருதும் பலன் கண்டு கூறுக. (எ-று.)

இடவோட்டு இடபவெள்ளிக் காலச்சக்கரத் திசைப்பலன் முற்றும்.

## எட்டாவது இடவோட்டு மேடச்செவ்வாய்க் காலச்சக்கரத் திசையாண்டு ஏழு

(இத்திசை, இடவோட்டு இடை நாட்களாகிய மிருகசீரிடம், பூரம், அனுடம், அவிட்டம் என்னும் இந்நான்கின் நான்காங் காலுக்குரியது.)

திரவிடவோட் டாம்மேடச் செவ்வாயின் சக்கரத்
திசைவருடம் ஏழுக்கும் புத்திவாக் கியந்தான்
வரல்வைவேல் பெற்றூர்ந்து நீதியா கந்தான்
வருக்கும்யாண் டொருநூறும் பிரித்துண்ணு மிதற்கே
கரதனுசே உடலாகும்; மேடந்தான் உயிராம்
கணக்குடைய தனுர்க்குருவின் புத்தியிற்பூ லாபம்
விரவுகுரு பத்திசிவ பத்திசவுக் கியமாம்
வேந்தர்வெகு மானமுண்டாம் மேன்மேலுந் தானே. (105)

*(இ-ள்.)* நிலையுள்ள இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னிரண்டனுள் எட்டாவதாகிய மேடச்செவ்வாய்க் காலச்சக்கரத் திசையாண்டு ஏழாகும்; இதற்குப் புத்தி அறியும் வாக்கியமாவது "வைவேல் பெற்றூர்ந்து நீதி யாகும்" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு நூறாகும்; இத்தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணு மென்க. இத்திசைக்கு தனுசு இராசியே உடலாகும்; மேடவிராசியே உயிராகும்; இத்திசையுள் உடற்புத்தியும், முதற்புத்தியுமாகிய தனுசு வியாழன் புத்தியின் காலம், திங்கள் 8, நாள் 12 ஆகும். இதன் பலன்:- நிலப்பேறும், ஆசிரியனிடமும், சிவனிடமும் அன்பு செய்தலும், உடல் நலமும், அரசரால் சிறப்பும் மேன்மேலும் உண்டாகும். (எ-று.)

வலவோட்டு மேடச்செவ்வாய்த் திசைக்குரிய கூறிய திசைப்பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தி அறியும் வாக்கியம் "வைவேல் பெற்றூர்ந்து நீதியாகம்" என்பதாம்; இதனை, வை-9, வியாழன் புத்தி; வே-8, விருச்சிகச் செவ்வாய்ப்புத்தி, பெ-7, துலா வெள்ளிப்புத்தி; றூ-6, கன்னிப்புதன் புத்தி; து-5, சிங்க ஞாயிறு புத்தி; நீ-4, கடகத்திங்கள் புத்தி; தி-3, மிதுன புதன் புத்தி; யா-2, இடபவெள்ளிப் புத்தி; க-1, மேடச்செவ்வாய்ப் புத்தி என்று கணக்கிட்டறிக.

இவற்றின் திசையாண்டுகள் முறையே 10+7+16+9+5+21+9+16+7 ஆகும்; இவற்றை ஒன்றாகக் கூட்டிய முழுயாண்டு நூறாகும்.

இப்புத்திமுறை, வலவோட்டுள் மேடச்செவ்வாய்க் காலச்சக்கரத் திசைக்குக் கூறிய புத்தி முறையை ஈற்றிலிருந்து கொண்டதாதலின், அத்திசையின் புத்திவாக்கியமாகிய அந்தாதி மீது சூட்டென் றேற்கை (இந்நூல்-1) என்பதனை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசையின் புத்தி வாக்கியம் வரும் என்க.

தானவிருச் சிகச்செவ்வாய்ப் புத்தியினிற் சோரர்
சத்துருமன் னவர்தீயால் விடத்தினாற் பயமாம்
ஆனபொருட் கேடுபிணி ஆம்;துலா வெள்ளி
அரியபுத்தி தனிற்றனதா னியக்கேடாம் அலைச்சல்
மானமுறு பெண்துக்கம் உடலதற்குப் பீடை
மன்னுக்கன்னி புதன்புத்தி தனில்லாபச் சேதம்
ஈனமுறுஞ் சோரர்பயம் மனத்தாபம் வியாதி
ஏற்கையின்றி அயல்தேயத் தலைதலுண்டாம் மயிலே.(106)

(இ-ள்.) மயில் போன்றவளே! மேற்கூறிய மேடச் செவ்வாய்த் திசையில் இரண்டாவதாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 26, நாழிகை 24 ஆகும்; இதன் பலன்:- கள்வராலும், பகைவராலும், அரசராலும், நெருப்பினாலும், நஞ்சினாலும் அச்சம் விளையும்; பொருள் அழியும்; நோய் உண்டாகும்; இத்திசையில் இதன் பின் மூன்றாவதாகிய துலா வெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 1, நாள் 13, நாழிகை 12 ஆகும்; இதன் பலன்:- பணமும், தானியமும் கெடும்; அலைச்சல் உண்டாம்; பெண்களால் துன்பமும், உடலுக்குப் பீடையும் நிகழும். இத்திசையில் இதன்பின் நான்காவதாகிய கன்னிப்புதன் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 7, நாள் 16, நாழிகை 48 ஆகும்; இதன் பலன்:- வருவாய் கெடுதலும், கள்வரால் அச்சமும், மனத்திலே விசனமும், தன்னை ஏற்பாரின்றி அயவிடங்களிலே அலைதலும் விளையும். (எ-று.)

மயிலேசிங் காதித்தன் புத்திதன லாபம்
வன்பகை பராக்கிரமம் உயுத்தசெயம் சபதம்
அயிலாகும் மன்னர்வெகு மானங்கள் சவுக்யம்
அருட்கடக மதிபுத்தி ஆடையா பரணம்
வெயிலாகும் நவமணிகள் லாபம்மக்கள் விருப்பம்
வேண்டுகின்ற மகிழ்ச்சியாம் உடல்நலமுண் டிதன்மேல்
துயிலாத மிதுனபுதன் புத்தியினில் வெப்பம்
சேரார்தீக் கருவியொன்னார் விலங்குபயம் பலிக்கும். (107)

*(இ-ள்.) மயில் போன்றவளே! மேற்கூறிய மேடச் செவ்வாய்த் திசையில் ஐந்தாவதாகிய சிங்க ஞாயிறு புத்தியின் காலம், திங்கள் 4, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- பணப்பேறும், வலிய பகைவரிடத்துச் செய்யும் வீரமும், போரிலே வெற்றியும், வஞ்சினங் கூறுதலும், அரசர் சிறப்பும், உடல் நலமும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் ஆறாவதாகிய கடகத் திங்கள் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 5, நாள் 19, நாழிகை 12 ஆகும்; இதன் பலன்:- ஆடைகளும், அணிகலன்களும், நவமணிகளும் கிடைக்கும். உலக மக்களால் விரும்பப்படுதலும், உவகையும், உடல் நலமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் ஏழாவதாகிய மிதுன புதன் புத்தியின் காலம், திங்கள் 7, நாள் 16, நாழிகை 48 ஆகும்; இதன் பலன்:- உடல் வெப்பமும், கள்வர் நெருப்பு படைக்கலம் பகைவர் விலங்கு என்னும் இவற்றால் அச்சமும் உண்டாகும். (எ-று.)*

பலிப்பாகும் இடபவெள்ளிப் புத்திதனச் சேதம்
பாரிக்கும் துன்பத்தே சாந்திரத்திற் றிரிதல்
அலிப்பான தானியக்கே டாகுமெய்யிற் பீடை
அருமேடச் செவ்வாயின் புத்திதனி லேதான்
சலிப்பான சுரங்கருவி விடம்உலகில் மன்னர்
சத்துருவால் பயந்தனதா னியச்சேதம் காட்டும்
கலிப்பான தேகத்திற் பீடைமிக வுண்டாம்
காமன்றன் கணையைவென்ற கருத்தடங்கண்
மயிலே. (108)

(இ-ள்.) மன்மதன்றன் அம்பினை வென்ற கருமையான அகன்ற விழிகளையுடையவளே மயில் போன்றவளே! மேற்கூறிய மேடச்செவ்வாய்த் திசையில் எட்டாவதாகிய இடப வெள்ளிப் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 1, நாள்13, நாழிகை 12 ஆகும்; இதன் பலன்:- பணக்கேடும், மனைவிக்குத் துன்பமும், நாட்டுள் அலைதலும், தானியங்கள் கெடுதலும், உடற்பீடையும் உண்டாகும். இத்திசையில் இதன்பின் ஒன்பதாவதாகிய மேடச்செவ்வாய்ப் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 26, நாழிகை 24 ஆகும்; இதன்பலன்:- கவலையைத் தருகிற சுர நோயாலும், படைக்கருவிகளாலும், நஞ்சினாலும், அரசராலும், பகைவராலும், அச்சம் நிகழும். பணமும், தானியமும் கெடும், உடற்துன்பம் மிகவும் உண்டாகும். (எ-று.)

இடவோட்டு மேடச்செவ்வாய்க்காலச்சக்கரத்
திசைப்புத்தி பலன் முற்றும்.

## ஒன்பதாவது இடவோட்டு மீன வியாழன் காலச்சக்கரத் திசையாண்டு பத்து

(இத்திசை, இடவோட்டுக் கடைநாட்களான திருவாதிரை, உத்திரம், கேட்டை, சதயம் என்னும் இவற்றின் முதற்காலுக்குரியது)

தடங்கொளிட வோட்டான மீனவியா ழத்தின்
சக்கரத்தின் யாண்டுபத்தின் புத்திவாக் கியந்தான்
தொடங்கு பைம்பொன் னோர்வௌக லாபியுற்றீர் என்றே
சொலும்வருடம் எண்பத்தா றினிற்பகுத்தே உண்ணும்
அடங்குமிதற் கேதனுசு உடல்கடகந் தானும்
ஆன்மாவா குந்;தனுவின் வியாழபுத்தி உண்ணில்
இடம்பொருந்து மனைவிமைந்தர் தானியம்பொன் பலிதம்
இராசவெகு மானமுண்டாம் இன்புறுநற் சுகமே. (109)

(இ-ள்.) இன்பம் விளைவிக்கும் கிளி போன்றவளே! பெருமை கொள்ளும் இடவோட்டுக் காலச்சக்கரத் திசை

பன்னிரண்டனுள் ஒன்பதாவதாகிய மீன வியாழன் காலச்சக்கரத் திசையாண்டு பத்தாகும்; இதற்குப் புத்தி அறியும் வாக்கியம் பைம்பொன்னோர் வெளகலாபியுற்றீர் என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்தாறாகும்; இத்தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணு மென்க; இத்திசைக்குத் தனுசே உடலாகும்; கடக இராசி உயிராகும்; இத்திசையில் முதற்புத்தியாகிய தனுசு வியாழன் புத்திக் காலம், ஆண்டு 1, திங்கள் 1, நாள் 28, நாழிகை 36, விநாடி 17 ஆகும்; இதன் பலன்:- இடத்திலே பொருந்தி வாழும் மனைவியும், புதல்வரும், தானியமும், பொன்னும் கிடைத்தலும், அரசரால் சிறப்பும் உண்டாம். (எ-று.)

வலவோட்டுத் தனுர்வியாழன் திசைக்குக் கூறிய திசைப் பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்ளுக.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குக் கூறிய புத்தி வாக்கியம், இடவோட்டுள் விருச்சிகச் செவ்வாய்த் திசைக்குக் கூறிய புத்தி வாக்கியமே ஆதலின் (இந்நூல் செய்யுள் 71) அங்கே எழுதிய விளக்கத்தினையே இதற்குங் கொள்க.

இத்திசையின் புத்திமுறை, வலவோட்டு விருச்சிகச் செவ்வாய்த் திசையின் புத்தி முறையைத் தலைகீழாய்க் கொண்டதாதலின் அத்திசையின் புத்தி வாக்கியமாகிய நீடுநீ லாபம் கெளவோர் சொல்லை என்பதை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசைக்குப் புத்திமுறை அறியலாம்.

சுகமான மகரச்சனிப் புத்திமனோ துக்கம்
சொல்லுந்தா னியமைந்தர் திரவியமுஞ் சேதம்
மிகப்பெறுமுற் றார்கலகம் தேகத்திற் பீடை
மேன்மையில்கும் பச்சனியூண் வியாதிசேத்ம ரோகம்
பகர்ந்ததனம் பசுநாசம் பந்துவித்தை லாபம்
படர்மீன குருபுத்தி நனில்வித்தை லாபம்
புகழாகுந் தானியம்பொன் னாடையா பரணம்
பூலாபம் சவுக்கியமும் பொருந்துமட மயிலே. (110)

(இ-ள்.) இளைய மயில் போன்றவளே! மேற்கூறிய இடவோட்டு மீன வியாழன் திசையில் இரண்டாவதாகிய மகரச் சனிப் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 17, நாழிகை 26, விநாடி 31 ஆகும்; இதன் பலன்:- மனத்துன்பம் விளைதலும், உண்ணும் தானியமும், புதல்வரும், பொருளும் ஆகிய இவற்றிற்குக் கேடு நிகழ்தலும், உறவினர் கலமும், உடல் பீடையும் உண்டாதலுமாம், இத்திசையில் மூன்றாவது புத்தியாகிய கும்பச்சனிப் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 17, நாழிகை 26, விநாடி 31 ஆகும்; இதன் பலன்:- பலவகைப் பிணிகள் தோன்றுதலும், அவற்றுள் குறிப்பாகச் சிலேத்தும நோய் உண்டாதலும், பணமும், பசுவும் கெடுதலும், உறவினரைப் பற்றிய கவலை தோன்றுதலுமாம். இத்திசையில் இதன்மேல் நான்காவதாகிய மீன வியாழன் புத்தி நடைபெறும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 1, நாள்28, நாழிகை 36, விநாடி 17 ஆகும்; இதன் பலன்:- கல்விப் பேறும், தானியமும், பொன்னும் உடைகளும், அணிகளும், நிலங்களுமாகிய இவை கிடைத்தலும், உடல் நலமும் உண்டாகும். (எ-று.)

மடமயிலே மேடச்சேய் புசிப்புமகா பயமாம்
　　மனத்துக்கம் சோரரொன்னார் பயந்தலையின் பாரம்
இடபவெள்ளிப் புத்தியினில் பொன்வெள்ளி தாரா
　　இனியஉடை அணிகலன்கள் வெண்கலம்பூ லாபம்
திடமுறுவா கனலாபம் பிரபலஉற் சாகம்
　　தருமுற்றார் சவுக்கியமாம் மிதுனபுதன் புத்தி
உடல்விசையும் பெண்பூமி கல்வியணி உகவை
　　உயர்பொன்வெண் கலம்வெள்ளி தனலாபம் மிகுமே. (111)

(இ-ள்.) இளைய மயில் போன்றவளே! மேற்கூறிய இடவோட்டு மீன வியாழன் திசையுள் ஐந்தாவதாகிய மேடச்செவ்வாய்ப் புத்தியின் காலம், திங்கள் 9, நாள் 23, நாழிகை 1, விநாடி 24 ஆகும்; இதன் பலன்:- பெரிய அச்சமும், மனத்துன்பமும், கள்வரால், பகைவரால் அச்சமும், தலைப் பாரமும் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் ஆறாவது

புத்தியாகிய இடபவெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 10, நாள் 9, நாழிகை 46, விநாடி 3 ஆகும்; இதன் பலன்:- தங்கமும், வெள்ளியும், தராவும், ஆடையும், அணிகலனும், வெண்கலமும் ஆகிய இவை கிடைத்தலும், வாகனப்பேறும், பெருமையும், முயற்சியும், உறவினர் நலமும் உண்டாதலுமாம். இத்திசையில் இதன் பின் ஏழாவதாகிய மிதுன புதன் புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 0, நாள் 16, நாழிகை 4, விநாடி 39 ஆகும்; இதன் பலன்:- தம்முடன் இசைந்து வாழும் பெண்ணும், நிலமும், கல்வியும், விரும்பிய பொருளும், தங்கமும், வெண்கலமும், வெள்ளியும், பணமும் கிடைக்கும். (எ-று.)

மிகுந்தமிது னத்தில்நின்று சிங்கத்திற் பாயும்
விளம்பிலிது மண்டூகப் பாய்ச்சலிதன் பலன்றான்
தகுந்தமன்னர் சினம்வயிற்று வலியுடன்வை சூரி
தலபேதத் துடன்வாத ரோகமிவை காட்டும்
தொகுத்திறலார் சிங்கரவி புத்தியினிற் றானே
தொடுத்தகா ரியசித்தி பகைநோய்கள் நாசம்
வெகுந்தனமுண் டாகுமனு கூலமிந்தச் சிங்கம்
மீதில்நின்று கடகத்திற் புரளுமிதன் பலனே. (112)

(இ-ள்.) மேற்கூறிய இடவோட்டு மீன வியாழன் திசையில் மிதுன புதன் புத்தி நடந்தபின் எட்டாவது புத்தி மிதுனத்திலிருந்து சிங்கத்திற் பாய்ந்து நடக்கும்; இது தவளைக்கதியாகும். இக்கதி நிகழும்பொழுது அரசரின் கோபமும், வயிற்று வலியும், அம்மை நோயும் இடமாற்றமும், வாய்வு நோயும் உண்டாகும். இத்தவளைக் கதியால் நிகழ்ந்த சிங்க ஞாயிற்றின் புத்திக் காலம், திங்கள் 6, நாள் 19, நாழிகை 18, விநாடி 8 ஆகும்; இதன் பலன்:- தொடங்கிய காரியம் முடிதலும், பகையும், நோயும், கெடுதலும், மிக்க பொருள் உண்டாதலும், அனுகூல மாதலும் ஆகும். இத்திசையில இதன் பின் ஒன்பதாவது புத்தி சிங்க இராசியிலிருந்து கடகத்திற் புரண்டு நடக்கும். (எ-று.)

**வேறு**

பலனுறு சர்ப்ப கதியெனப் பகர்வர்
பயம்சல கண்டமும் உண்டாம்
புலவவ மிருத்தாம் வயிற்றுளை வாகும்
பொற்புறுங் கடகசந் திரனில்
குலவிய புத்தி தனின்மணம் புரிதல்
குரிசில்சன் மானமுச் சாகம்
இலகுநற் புசிப்புத் திரவியம் மைந்தர்
இலாபம்உற் றாரன்பு தானே. (113)

*(இ-ள்.) மேற்கூறிய இடவோட்டு மீன வியாழன் திசையில் சிங்கத்திலிருந்து கடகத்திற் புரளுமென்றதை பாம்புக் கதியெனப் பகர்வர்; இதன் தொடக்கத்தில் அச்சமும், தண்ணீர்த் தத்தும்; தீய சாவும், வயிற்றுளைவும் உண்டாகும்; இக்கடகத் திங்கள் புத்தியின் காலம், ஆண்டு 2, திங்கள் 5, நாள்9, நாழிகை 4, விநாடி 10ஆகும்; இதன் பலன்:- திருமணஞ் செய்தலும், அரசரால் சிறப்பு கிடைத்தலும், முயற்சியும், நல்ல பொருள்களை உண்ணுதலும், பொருளும், புதல்வருமாகிய இவை கிட்டுதலும், உறவினர் விருப்பம் விளைதலும் ஆம். (எ-று.)*

*இடவோட்டு மீன வியாழன் காலச்சக்கரத் திசைப்புத்திப் பலன் முற்றும்.*

**பத்தாவது இடவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத்**
**திசையாண்டு நான்கு**

*(இத்திசை, இடவோட்டுக் கடைநாட்களாகிய திருவாதிரை, உத்திரம், கேட்டை, சதயம் ஆகிய இந்நான்கின் இரண்டாங்காலுக்குரியது.)*

மலியிட வோட் டாங்கும்பச் சனிச்சக்ரத் திசையாம்
வருடநான் கின்புத்தி வாக்கியத்தை வழுத்தின்
ஒலிகூதென்றேவெளவோர் பொன்னைச்சே ரென்றே
உரைக்குமாண் டெண்பத்து மூன்றிலுவந் துண்ணும்

நலியுமிதற் கேகன்னி உடல்;துலாம் உயிராம்
நண்ணுவதாங் கன்னிபுதன் புத்திதனி லேதான்
பலிதருமிகுங் குருபத்தி அரசர்வெகு மானம்
பந்துசன உவகைபொன் லாபசவுக் கியமே. (114)

(இ-ள்.) மிக்க இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னிரண்டனுள் பத்தாவதாகிய கும்பச்சனித் திசையாண்டு நான்காகும்; இதற்குப்புத்தி அறியும் வாக்கியமாவது "சூதென்றே வெளவோர் பொன்னைச் சேரென்" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்திற்குரிய முழுயாண்டு எண்பத்து மூன்றாகும்; இம்முழுயாண்டுத் தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணுமென்க; இத்திசைக்கு உடலிராசி கன்னியாகும்; உயிரிராசி துலாமாகும்; இத்திசையின் முதற்புத்தியாகிய கன்னிப்புதன் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 6, நாழிகை 8, விநாடி 40 ஆகும்; இதன் பலன்:- ஆசிரியனிடத்தில் அன்பு செய்தலும், மன்னராற் சிறப்புப்பெறுதலும், உறவினரால் மகிழ்ச்சியும், செம்பொன்னும் கிடைத்தலும், உடல் நலமாயிருத்தலும் ஆகிய இவை நிகழும். (எ-று.)

வலவோட்டு மகரச்சனித் திசைக்குக் கூறிய திசைப் பலன்களையே இத்திசைக்குங் கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தியறியும் வாக்கியம், முன்னே இந்நூல் 75-ஆம் செய்யுளில் இடவோட்டுத் துலா வெள்ளித்திசைக்குக் கூறிய வாக்கியமேயாதலின் அங்கே கணக்கிட்டபடி இதனைக்கொள்க.

இடவோட்டுத் துலாவெள்ளித் திசையின் புத்தி முறையும், இடவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத் திசையின் புத்தி முறையும், வலவோட்டுத் துலா வெள்ளித் திசையின் புத்தி வாக்கியத்தைத் தலைகீழாய்க் கொண்டதாதலின் அத்திசையின் வாக்கியமாகி "எம்பேரைத்

தொட்டோர் வெளதே னெட்டூர் " என்பதை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இவ்விரு திசைக்கும் புத்திமுறை அறிந்து கொள்ளலாமென்க.

இயற்கையிதன் மேற்றுலா வெள்ளிபுத்தி தனிலே
இசையுநவ மணிதனதா னியம்பெண்ணால் லாபம்
செயற்கையுள சவுக்கியமும் பகைவர்கள்நா சனமாம்
சிறந்தவிருச் சிகச்செவ்வாய்ப் புத்தியுற்றார் கேடு
அயற்குமொன்னார் பகைவெப்பம் துக்கந்தீ வாதை
அம்புவிமேற் சஞ்சாரம் ஆகுமிதன் மேலே
நயப்பில்விருச் சிகத்திலிருந்து மீனத்திற் குதிக்கும்
நவில்துரக கதியிதுதான் நல்குபலன் உரைப்பாம். (115)

(இ-ள்.) மேலே கூறிய இடவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத் திசையில் இரண்டாவதாகிய துலா வெள்ளிப் புத்தியின் காலம், திங்கள் 9, நாள் 7 நாழிகை 35, விநாடி 25 ஆகும்; இதன் பலன்:- பெண்ணினால் நவமணியும், தானியமும் கிடைக்கும். உடல் நலமாயிருக்கும்; பகைவர்க்குக் கேடுண்டாம்; இத்திசையில் இதன்பின் மூன்றாவதாகிய விருச்சிகச் செவ்வாய் நிகழும் இதன் காலம், திங்கள் 4, நாள் 1, நாழிகை 26, விநாடி 45 ஆகும்; இதன் பலன்:- உறவினர்க்குக் கெடுதலும், பகைவரால் அச்சமும், உடல்வெப்பமும், மனத்துன்பமும், நெருப்பால் துன்பமும், உலகில் அலைந்து திரிதலும் உண்டாகும்; இத்திசையில் இதன்பின் நான்காவது புத்தி விருச்சிக இராசியிலிருந்து மீன இராசியிற் பாய்ந்து நடக்கும்; இது குதிரைக்கதியாகும்; இது தரும் பலனைக் கூறுவாம். (எ-று.)

உரைக்குமவ மிருத்துபயம் சோரபயம் பீடை
உற்றதன நாசமென்பர்; மீனகுரு புத்தி
நிரைத்தகுரு பத்திதெய்வ பிராமணர்தம் பத்தி
நிலைமைந்தர் பொருளாடை லாபமன மகிழ்ச்சி

வரைத்தகும்பச் சனிப்புத்தி தனிற்றேக பீடை
　　மறுதேசத் தலைதல்உற்றார்க் கிடர்கள்ளர் பயமாம்
தரைக்குள்மக ரச்சனியின் புத்திதனச் சேதம்
　　தலைவலிவெஞ் சுரம்வயிற்று வலிபேயின் பயமே. (116)

(இ-ள்.) மேலே கூறிய இடவோட்டுக் கும்பச்சனித் திசையில், விருச்சிகத்திலிருந்து மீனத்திற் பாயுமென்ற குதிரைக்கதி நிகழும்பொழுது தீய சாவினைப் பற்றிய அச்சமும், கள்வரால் அச்சமும், பீடையும், பணக்கேடும் உண்டாகும் என்பர்; இம்மீன வியாழன் புத்தியின் காலம், திங்கள்5, நாள்23, நாழிகை29, விநாடி38ஆகும்; இதன் பலன்:- உடற்பீடையும், அயல் தேசத்தலைதலும், உறவினர்க்கு இடர்விளைதலும், கள்வரால் அச்சம் உண்டாதலும் ஆகிய இவை நிகழுமென்க. இத்திசையில் இதன்பின் ஆறாவதாகிய மகரச்சனிப் புத்தி நிகழும்; இதன் காலம்,திங்கள் 2, நாள் 9, நாழிகை 23, விநாடி 52 ஆகும்; இதன் பலன்:- பணக்கேடும், தலைவலியும், கொடிய சுரநோயும், வயிற்றுவலியும், பேயினால் அச்சமும் நிகழும். (எ-று.)

இன்பமுறுந் தனுர்க்குருவின் புத்திதெய்வ பத்தி
　　இனியகுரு பத்திமைந்தர் ஆடையா பரணம்
தன்பறி*யும் பிரபலமும் ஆகிடுமே; தேள்செய்
　　தன்புத்தி தனிலரசர் பயந்தேக பீடை
அன்புடைய மைந்தர்நட்டம் கால்விரண நோய்கள்
　　அதிகபயம் ஆகுமிதன் மேல்கோலின் வெள்ளி
துன்பமிலாப் புத்திதனில் வாகனம்பொன் மணிகள்
　　தூயபெண்கள் லாபசவுக் கியம்மகிழ்ச்சி தானே. (117)

(இ-ள்.) மேற்கூறிய இடவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத் திசையில் ஏழாவதாகிய தனுர் வியாழன் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 23, நாழிகை 29, விநாடி 38 ஆகும்; இதன் பலன்:- கடவுள், ஆசிரியன் என்னும் இவரிடம் அன்பு செலுத்துதலும், புதல்வரும், உடையும்,

*பறி - தங்கம்; குழூஉக்குறி.

அணிகலனும், தங்கமும், மிகக்கிடைத்தலும் ஆம். இத்திசையில் இதன்மேல் எட்டாவது விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 4, நாள் 1, நாழிகை 26, விநாடி 45 ஆகும்; இதன் பலன்:- அரசரால் அச்சமும் உடல் துன்பமும், புதல்வர்க்கேடும், காலிலே புண் விளைதலும், மிக்க அச்சமும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் ஒன்பதாவது துலா வெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 9, நாள் 7, நாழிகை 35, விநாடி 25 ஆகும்; இதன் பலன்:- ஊர்தியும், தங்கமும், நவமணிகளும், நல்லபெண்கள் கிடைக்கும். உடல் நலமும், உவகையும் உண்டாகும். (எ-று.)

**வேறு**

தான மாகிய சல்லியன் புத்தியும்
ஊன மாமுயி ரும்உட லாகையால்
பூன மாங்கடை பூவையர் சோரத்தீ
நான நற்புனல் நஞ்சினால் மிருத்துவே. (118)

(இ-ள்.) இந்த இடவோட்டுக் கும்பச் சனித்திசைக்குத் துலா வெள்ளியும்; கன்னிப் புதனும் முறையே உயிர்க் கோளாகவும், உடற்கோளாகவும் இருத்தலினால், இப்புத்தி களின் கடையில் பெண்களாலும், கள்வராலும், நெருப்பாலும் குளிக்கும் புனலாலும், தீச்சாவு நிகழும் (எ-று.)

இடவோட்டுக் கும்பச்சனிக் காலச்சக்கரத்
திசைப்புத்திப் பலன் முற்றும்.

**பதினொன்றாவது இடவோட்டு மகரச்சனிக் காலச்சக்கரத் திசையாண்டு நான்கு**

(இத்திசை, இடவோட்டுக் கடைநாட்களாகிய திருவாதிரை, உத்திரம், கேட்டை, சதயம் ஆகிய இந்நான்கின் மூன்றாங் காலுக்குரியது.)

வகையிடவோட் டாம்மகரச் சனிச்சக்ரத் திசையாம்
　　　　வருடமொரு நான்கினுக்கும் புத்திவாக் கியந்தான்
தகைகூறு நீரிலாக்கங் கைபொய்யோ என்றாம்;
　　　　தரும்வருடம் எண்பத்தைந் திறபகுத்தே யுண்ணும்
திசையிலிதற் காங்கன்னி உடலம்; உயர் கும்பம்
　　　　சீவனென விளம்புவதாம்; கன்னிபுதன் புத்தி
நகையிலா ஞானசிந்தை வித்தைபுத்ர லாபம்
　　　　நங்கைசவுக் கியம்மகிழ்ச்சி நலந்தருந்தெள் ளமுதே. (119)

(இ-ள்.) சிறந்த அமுதம் போன்றவளே! கூறுபாடு பொருந்திய இடவோட்டுக் காலச்சக்கரத் திசை பன்னிரண்டனுள் பதினொன்றாகிய மகரச் சனித்திசையாண்டு நான்காகும்; இதற்குப் புத்தியறியும் வாக்கியம் "கூறு நீரிலாக் கங்கை பொய்யோ" என்பதாம்; இப்புத்தி வாக்கியத்தின் முழுயாண்டு எண்பத்தைந்தாகும்; இத்தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித்துண்ணுமென்க. இத்திசைக்கு முதற்புத்தி இராசியாகிய உடலிராசி கன்னியாகும்; கடைசிப் புத்தி இராசியாகிய உயிரிராசி கும்பமாகும்; இத்திசையில் முதற்புத்தியாகிய கன்னிப் புதன் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- இந்நிகழ்ச்சியில்லாத ஞானத்தைப் பற்றிய எண்ணமும், கல்வியும், புதல்வர்ப்பேறும், பெண்களின் உடல் நலமும், மகிழ்ச்சியும், நன்மையும் ஆகிய இவை உண்டாகும். (எ-று.)

வலவோட்டு மகரச்சனித் திசைக்குக் கூறிய பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தியறியும் வாக்கியம், கூறு "நீரிலாக் கங்கை பொய்யோ" என்பதாம்; இவ்வாக்கியமும், முன்னே இடவோட்டுக் கன்னிப்புதன் காலச்சக்கரத் திசைக்குக் கூறியுள்ள புத்தி வாக்கியமும் ஒன்றென்பதனை இந்நூல் 80-ஆம் செய்யுள் நோக்கி உணர்க. அதனால், அங்குக் கூறியுள்ள விளக்கத்தையே இதற்குங் கொள்க.

இடவோட்டு கன்னிப்புதன் திசைக்கும், இம்மகரச் சனித்திசைக்கும் புத்தி கொள்ளுமுறை வலவோட்டுக் கன்னிப் புதன் திசையின் புத்திமுறையைத் தலைகீழாகக் கொண்டதே யாதலின் அத்திசையின் புத்தி வாக்கியமாகிய கோன் கொடை வல்லார் திக்கீர் முப்பூண் என்பதை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும்,இம்மகரச் சனித்திசைக்குப் புத்திமுறை அறியலாம்.

தெள்ளியசிங் காதித்தன் புத்திசத்தி குன்மம்
சிறைகாவல் விலங்குபசு நாசமிதன் மேலே
வள்ளியகர்க் கடகமதி ஊனிற்கா மாலை
வாதசயித் தியந்தலைநோய் விடம்பாண்டு நோயாம்
ஒள்ளியவுற் றார்க்கேடு பொருட்சேத மாகும்
உயர்மிதுன புதன்புத்தி காரியங்கள் சித்தி
எள்ளரிய பொருள்லாபம் மகிழ்ச்சிஇன்பப் புசிப்பாம்
எப்போதும் சுபலாபம் எய்துமிடந் தனிலே. (120)

(இ-ள்.) மேற்கூறிய மகரச்சனித் திசையில் இரண்டாவதாகிய சிங்க ஞாயிறு புத்தியின் காலம், திங்கள் 2, நாள் 24, நாழிகை 42, விநாடி 21 ஆகும்; இதன் பலன்:- ஓக்காளமும், குன்ம நோயும்,சிறையும், காவலும், எய்தலும், விலங்கிடப் பெறுதலும் உண்டாகும்; பசுக்கள் கெடும். இத்திசையில் இதன்மேல் மூன்றாவதாய்க் கடகத்திங்கள் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 11, நாள் 25, நாழிகை 45, விநாடி 53 ஆகும்; இதன் பலன்:- காமாலையும், வாதசயித்தியமும், தலைவலியும், விடநோயும், பாண்டு நோயும் உண்டாம்; சிறந்த உறவினர்க்குக் கெடுதலுண்டாம்; பொருள் அழிதல் நிகழும்; இத்திசையில் இதன்மேல் நான்காவதாய் மிதுன புதன் புத்தி நிகழும்; இதன் காலம், திங்கள் 5, நாள் 2, நாழிகை 28, விநாடி 14 ஆகும்; இதன் பலன்:- எடுத்த காரியம் முடிதலும், பொருட்பேறும், உவகையும், பலவகை இன்ப நுகர்வும், இப்புத்தி முற்றிலும் பொருளெய்துமிடத்திலிருந்து நல்ல வருவாய் கிடைத்தலும் ஆகும். (எ-று.)

இடமாகும் இடபவெள்ளி ஊணதனிற் சவுக்யம்
இராசவெகு மானம்அர்த்த லாபம்பூ லாபம்
உடனாக வேநினைத்த காரியங்கள் பலிக்கும்
உயர்மேடச் செவ்வாயின் புத்தியது
மடனாகும் மன்னர்பயம் தரித்திரம்மெய் பீடை
மனக்கிலேசம் மிகவுண்டாம்; மேடத்திலிருந்தே
திடமான தனுசதனில் குதிக்குமிது தன்னைச்
சிம்மாவ லோகனமாய்ச் செப்புவர்பொற் கொடியே. (121)

(இ-ள்.) பொற்கொடி போன்றவளே! மேற்கூறிய இடவோட்டு மகரச்சனித் திசையில் ஐந்தாவதாகிய இடப வெள்ளிப் புத்தியின் காலம், திங்கள் 9, நாள் 1, நாழிகை 3, விநாடி 32 ஆகும்; இதன் பலன்:- நலமாயிருத்தலும், அரசராற் சிறப்பும், பொருட்பேறும், நிலப்பேறும், நினைத்த செயல்கள் விரைந்து முடிதலும் உண்டாம். இத்திசையில் இதன்பின் ஆறாவது மேடச்செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன்காலம், திங்கள்3, நாள்28, நாழிகை 35, விநாடி 18 ஆகும்; இதன் பலன்:- அரசரால் அச்சமும், வறுமையும், உடற்றுன்பமும், மனக்கவலையும் மிகவுண்டாகும். இதன்பின் ஏழாவது புத்தி மேட இராசியிலிருந்து தனுசு இராசியிற்பாய்ந்து நடக்கும். இதனை சிங்காவலோகன கதி என்று அறிஞர் செப்புவர் என்க. (எ-று.)

கொடியவிதன் பலன்தேசத் தலைதல்தனச் சேதம்
கூறுசுரம் பிராணபயம் அவமிருத்துண் டாகும்
நெடியதனுர்க் குருபுத்தி தனில்நல்ல புத்தி
நிறைசெல்வம் ஆசாரம் வித்தைதன லாபம்
படியதனிற் றருமசிந்தை உற்றார்க ணேசம்
பகர்சுகபோ சனம்மகரச் சனிப்புத்தி தன்னில்
துடிபெறுஞ்சத் துருவிருத்தி துன்பம்அனா சாரம்
துய்யபொருட் சேதமெய்யிற் பீடையென்றே மொழிவர். (122)

(இ-ள்.) மேற்கூறிய இடவோட்டு மகரச்சனித் திசையில் மேடத்திலிருந்து தனுசிற் பாயுமென்ற சிங்காவலோகனகதி

*நிகழுங்கால், தேசத்திடை அலைந்து திரிதலும், பணக்கேடும், சுரநோயும், உயிரைப் பற்றிய அச்சமும், தீய சாவும், உண்டாகும். இத்தனுசு வியாழன் புத்தியின் காலம், திங்கள் 5, நாள் 19, நாழிகை 24, விநாடி 42 ஆகும்; இதன் பலன்:- நல்ல அறிவும், நிறைந்த செல்வங்களும், நல்லொழுக்கமும், கல்வியும், பணப்பேறும், உலகில் தான் செய்யும் அறத்தைப் பற்றிய எண்ணமும், உறவினர்தன் அன்பும், இன்பந்தரும் உணர்வும் உண்டாகும். இத்திசையில் இதன் காலம், திங்கள்2, நாள் 7, நாழிகை 45, விநாடி 53 ஆகும்; இதன் பலன்:- பகைவர் பெருக்கமும், துன்பமும், தீய ஒழுக்கமும், பொருளிழிவும், உடற்பீடையும் உண்டாதலாம் என்று மொழிவர் (எ-று.)*

**வேறு**

மொழிவாய் கும்பச் சனிப்புசிப்பின்
முனிவில் பந்து சனப்பிரியம்
அழிவில் தனதா னியலாபம்
அதிக நடக்கை பகைவெற்றி
பழுதி லாத கல்வியுண்டாம்
பண்பார் இனிய வூண்கிடைக்கும்
எழுதொ ணாத எழிலுடைய
இளம்பூங் கொடியைப் போல்வாளே. (123)

*(இ-ள்.) ஓவியம் வல்லவரால் எழுத முடியாத அழகினையுடைய இளைய பூங்கொடியைப் போன்றவளே! மேற்கூறிய மகரச்சனித் திசையில் ஒன்பதாவதாகிய கும்பச்சனிப் புத்தியின் காலம், திங்கள் 2, நாள் 7, நாழிகை 45, விநாடி 53 ஆகும்; இதன் பலன்:- வெறுப்பில்லாத உறவினர்தம் விருப்பமும், அழிவில்லாத பொருட்பேறும், தானியப்பேறும், மிக்க செயலும் பகையை அழித்து வெற்றி காணலும், பழுதடையாத கல்வியும் உண்டாகும்; நற்பண்பு பொருந்திய இனிய உணவும் கிட்டும். (எ-று.)*

இடவோட்டு மகரச்சனிக் காலச்சக்கரத் திசைப்புத்தி பலன் முற்றும்.

## பன்னிரண்டாவது இடவோட்டுத் தனுர் வியாழன் காலச்சக்கரத் திசையாண்டு பத்து

*(இத்திசை, இடவோட்டுக் கடை நாட்களாகிய திருவாதிரை, உத்திரம், கேட்டை, சதயம் ஆகிய இந்நான்கின் நான்காங்காலுக்குரியது)*

தன்னிலிட வோட்டான தனுர்வியா ழத்தின்
சக்ரவரு டம்பத்தின் புத்திவாக் கியந்தான்
உன்னில்வெள வலாரிபுக்கீர் தூதென்றே சொல்லும்
ஒருநூறு வருடத்தில் உவந்துண்ணு மிதற்கே
மின்னிகர்மீ னம்உடலாம்; விருச்சிகமே உயிராம்;
விளம்புவதாம் மீனகுரு புத்தியிற்பூ லாபம்
நன்னயமாஞ் சிவபத்தி குருபத்தி மகிழ்ச்சி
நவிலரசர் வெகுமானம் அர்த்தசவுக் கியமே. (124)

*(இ-ள்.)* இடவோட்டுக் காலச்சக்கரத் திசையுள் பன்னிரண்டாவதாகிய தனுர் வியாழன் காலச்சக்கரத் திசையாண்டு பத்தாகும்; இதற்குப்புத்தி கொள்ளும் வாக்கியமாவது வெள வலாரி புக்கீர் தூதென்றே என்பதாம்; இப்புத்தி வாக்கியத்தின் முழுயாண்டு நூறாகும்; இத்தொகையால் இத்திசையை இதன் புத்திகள் பிரித் துண்ணும்; இத்திசைக்கு உடலிராசி மீனமும்; உயிரிராசி விருச்சிகமும் ஆகும்; இத்திசையின் முதலாவதாகிய மீன வியாழன் புத்தியின் காலம் ஆண்டு 1 ஆகும். இதன் பலன்:- நிலம் கிடைத்தலும், சிவபெருமான் ஆசிரியன் என்னும் இவர்களிடத்தில் அன்பு செய்தலும், மகிழ்தலும், அரசராற் சிறப்படைதலும் ஆகிய இவை உண்டாகும். *(எ-று.)*

வலவோட்டுத் தனுர் வியாழன் திசைக்கு மேலே கூறிய திசைப்பலன்களையே இத்திசைக்குங் கூறிக்கொள்க.

**வாக்கிய விளக்கம்:**

இத்திசைக்குப் புத்தி வாக்கியம், இந்நூலுள் முன்னே எண்பத்தைந்தாம் பாட்டில் இடவோட்டுச் சிங்கச் சூரியன் திசைக்குக் கூறிய "வெள வலாரி புக்கீர் தூதென்றே" என்னும் வாக்கியமே யாகையால், அங்கே எழுதியுள்ள விளக்கத் தினையே இங்கும் கொள்க.

இடவோட்டுச் சிங்க ஞாயிற்றின் திசைக்கும், இத்தனுர் வியாழன் திசைக்கும் புத்திமுறை, வலவோட்டுச் சிங்க ஞாயிற்றின் புத்திமுறையைத் தலைகீழாகக் கொண்டதே யாதலின், அத்திசையின் புத்தி வாக்கியமாகிய "தேர் என்றூரீர் புரியாடல் வெள" என்பதை ஈற்றிலிருந்து கணக்கிட்டாலும் இத்திசைக்குப் புத்திமுறை அறிந்துகொள்ளலாம்.

**சவுக்கியமிலா மேடச்செவ் வாய்புசிப்பிற் றானே**
**சத்துருஅக் கினிமன்னர் விடத்தினாற் பயமாம்**
**அவிக்கினமில் இடபவெள்ளி ஊனில்தனச் சேதம்**
**அலைச்சல்தா னியச்சேதம் பிணிப்பெண்ணாற் கிலேசம்**
**புவிக்கினிய மிதுனபுதன் புத்திமனத் தாபம்**
**பூங்கொடிக்குப் பீடைதனச் சேதங்கள்ளர் பயமாம்**
**பவித்துடைய செயல்மிதுனத் திருந்துசிங்கத் தன்னிற்**
**பாயுமிது மண்டூகப் பாய்ச்சலென்பர் படியோர். (125)**

(இ-ள்.) மேலே கூறிய தனுர் வியாழன் திசையின் இரண்டாவதாகிய மேடச்செவ்வாய்ப் புத்தியின் காலம், திங்கள் 8, நாள் 12 ஆகும்; இதன் பலன்:- பகைவராலும், நெருப்பினாலும், அரசராலும், நஞ்சினாலும், அச்சம் உண்டாகும். இத்திசையில் இதன்மேல் மூன்றாவதாய் இடப வெள்ளிப் புத்தி நிகழும்; இதன் காலம், ஆண்டு 1, திங்கள் 7, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- பணக்கேடும், அலைச்சலும், தானியக்கேடும், நோயும், பெண்ணாற் கவலையும்

உண்டாகும். இத்திசையில் இதன்மேல் நான்காவதாகிய மிதுன புதன் புத்தி நிகழும்; இத்திசையில் இதன்பின் ஐந்தாவது புத்தி மிதுனத்திலிருந்து சிங்கவிராசியிற் பாய்ந்து நடக்கும்; அறிஞர் இதனைத் தவளைக்கதி என்பர். (எ-று.)

படியிலிதன் பலன்றேக சுரம் வயிற்றுக் கடுப்புப்
பலதுக்கம் சலகண்டம் வாதரோ கந்தான்
முடியுமென்பர்; சிங்கரவி புத்திரண விசயம்
பொருந்தலரைச் செயஞ்செய்தல் ராசவெகு மானம்
கொடியபிணி பகைநாசம் தனலாபம் வீரம்
கூறுமிந்தச் சிங்கம்நின்று கடகத்திற் புரளும்
கடியவிது சர்ப்பகதி யாம்நீராற் கண்டம்
கடுஞ்சுரமாந் தலபேதந் தனச்செலவு துயரே. (126)

((இ-ள்.) மேற்பாட்டிற் கூறிய தவளைக்கதி நிகழும் பொழுது உடலிலே சுரநோயும், வயிற்றுக்கடுப்பும், பலவகையானதுன்பங்களும், தண்ணீர்தத்தும், வாதநோயும், உண்டாகும் என்பர். இச்சிங்க ஞாயிறு புத்தியின் காலம், திங்கள் 6 ஆகும்; இதன் பலன்:- போர்க்களத்தில் வெற்றியும், பகைவரை வெல்லுதலும், அரசராற் சிறப்பும், கொடிய பிணியும், பகைவர் அழிவும், பண வருவாயும், வீரச்செயலும் விளையும். இப்புத்தி நடந்து முடிந்தபின் ஆறாவது புத்தி சிங்கவிராசியிலிருந்து கடகவிராசியிற் புரண்டு நடக்கும்; இது பாம்புக்கதியாகும். இக்கதி நிகழுங்கால் தண்ணீரால் தத்தும், கடுஞ்சுரமும் உண்டாகும்; இடமாற்றமும், பணச்செலவும், மனத்துன்பமும் விளையும். (எ-று.)

துயரிலாக் கடகமதி புத்திதன லாபம்
தூயதவ மணியாடை லாபமுற்றார் பிரியம்
செயமுறுநா னாவகையில் சவுக்கியஞ்சந் தோடம்
சிறக்குமிந்தக் கடகம்நின்று கன்னியிலே தாண்டும்

நயமுறும மூரகதி யாகுமிதன் பலன்றான்
நன்மனைவி பகையாகும் கிலேசம்நளிர் சுரமே
இயலன்றித் தனவிரயம் கன்னிபுதன் புத்தி
இசைவெப்பம் விலங்குகள்வர் பகைவர்பய மாமே. (127)

(இ-ள்.) மேற்கூறிய தனுர் வியாழன் திசையில் பாம்புக் கதியாய் வந்த கடகத் திங்கள் புத்தியின் காலம், ஆண்டு 2, திங்கள் 1, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- பண வருவாயும், தூய்மையாகிய ஒன்பது மணிகளும் ஆடையும் கிடைத்தலும், உறவினர் விருப்பமும், பலவகையான வெற்றியும், உடல் நலமும், மகிழ்ச்சியும் உண்டாகும். இத்திசையில் இதன் மேல் ஏழாவது புத்தி கடகவிராசியிலிருந்து கன்னி இராசியிற் பாய்ந்து நடைபெறும்; இது மயூர கதியாகும்; (இதனை மண்டூக கதியென்றே கூறுகின்றது சோதிடக் களஞ்சியம்) இக்கதி நிகழும்பொழுது நல்ல மனைவி பகையாதலும், கவலையுண்டாதலும், குளிர்சுரம் தோன்றலும், பணச்செலவு நிகழ்தலும் ஆகும்; இக்கன்னிப் புதன் புத்தியின் காலம், திங்கள் 10, நாள் 24 ஆகும்; இதன் பலன்:-வெப்பம் உண்டாதலும், விலங்கினாலும், கள்வராலும், பகைவராலும் அச்சம் நிகழ்தலும் உண்டாகும். (எ-று.)

பயன்றருது லாவெள்ளிப் புத்தியினிற் கிலேசம்
பலபொருட்டா னியஞ்சேதம் சுரம்பாரி தனக்கே
அயருமெய்யிற் பிணிகாட்டும் விருச்சிகச்செவ் வாயின்
அரியபுத்தி தனில்மன்னர் பயந்தீயால் விடத்தால்
செயல்கெடும்வெம் மாற்றலரால் சோரர்களால் பயமாம்
தேகத்தி லேபீடை திரமாகக் காட்டும்
இயலுமிந்தப் பலன்கண்டு கிரகபலன் கண்டே
எந்நாளு மியம்புவதிவ் வியற்கையாந் திருவே. (128)

(இ-ள்.) மேலே கூறிய தனுர் வியாழன் திசையில் எட்டாவதாகிய துலா வெள்ளிப் புத்தியின் காலம், ஆண்டு 1, திங்கள் 7, நாள் 6 ஆகும்; இதன் பலன்:- கவலை உண்டாதலும்,

பலவகைப் பொருளும், தானியமும் அழிதலும், சுரநோய் தோன்றுதலும், மனைவிக்கு உடம்பில் பிணி தோன்றலுமாம்; இத்திசையில் இதன் மேல் ஒன்பதாவது புத்தியாகிய விருச்சிகச் செவ்வாய்ப் புத்தி நிகழும்; இதன் பலன்;- அரசராலும், நெருப்பினாலும், நஞ்சினாலும், கொடிய பகைவராலும், கள்வராலும் அச்சமும், உடம்பிற்குப் பீடையும் நிலையாக உண்டாகும். இவ்வாறு திசையுள் புத்திக்குக் கூறியுள்ள பலன்களை ஆராய்ந்தும் புத்திக்குரிய கோள்களின் பலன்களை ஆராய்ந்தும் எப்பொழுதும் சொல்லுவது இயல்பானதாம் திருவே! (எ-று.)

இடவோட்டுத் தனுர் வியாழன் காலச்சக்கரத்
திசைப் புத்திப்பலன் முற்றும்.

இடவோட்டுப் படலம் முற்றும்.

***காலச்சக்கரத் திசைப்புத்திப் பலன் முற்றும்.***



---

**குறிப்பு:**- கடைசிப்பாட்டு திருவே என்று முடிகின்றது. இப்பாட்டு முடிந்ததும் திருவுடன் பிறந்த என்னும் சிறப்புப் பாயிரப் பாட்டு பிரதிகளில் காணப்படுகின்றது. சிறப்புப் பாயிரப் பொருள் முன்னே உணர வேண்டும் என்பதற்காக அப்பாடல் என்னால் முன்னே சேர்க்கப்பட்டுள்ளது. (பதிப்பாசிரியர்)

# அருஞ்சொற்களின் அகர வரிசை

**(எண், பாட்டெண்.)**

# பாட்டு முதற்குறிப்பு

# காலச்சக்கரத் திசா புத்திச் சக்கரங்கள்

## வலவோட்டு

## முதல்நாள்

அசுவதி, புனர்பூசம், அத்தம், மூலம், பூரட்டாதி ஆகிய ஐந்தனுக்கும்

| முதற்கால் - ÷ 100 | | | | | | இரண்டாங்கால் - ÷ 85 | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மேடச்செவ்வாய்த் திசையாண்டு 7<br>உடல் மேடம்; உயிர் தனுசு | | | | | | இடபவெள்ளித் திசையாண்டு 16<br>உடல் மகரம்; உயிர் மிதுனம் | | | | | |
| புத்தி வாக்கியம்<br>அந்தாதிமீது சூட்டென் றேற்கை | | | | | | புத்தி வாக்கியம்<br>பொற்போல்வெள வேய்பெற்றுர் நீடுதி | | | | | |
| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி | புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
| மேடச்செவ்வாய் | 0 | 5 | 26 | 24 | 0 | மகரச்சனி | 0 | 9 | 1 | 3 | 32 |
| இடபவெள்ளி | 1 | 1 | 13 | 12 | 0 | கும்பச்சனி | 0 | 9 | 1 | 3 | 32 |
| மிதுனபுதன் | 0 | 7 | 16 | 48 | 0 | மீனவியாழன் | 1 | 10 | 17 | 38 | 49 |
| கடகத்திங்கள் | 1 | 5 | 19 | 12 | 0 | விருச்சிகச்செவ் | 1 | 3 | 24 | 21 | 11 |
| சிங்கஞாயிறு | 0 | 4 | 6 | 0 | 0 | துலாவெள்ளி | 3 | 0 | 4 | 14 | 7 |
| கன்னிப்புதன் | 0 | 7 | 16 | 48 | 0 | கன்னிப்புதன் | 1 | 8 | 9 | 52 | 56 |
| துலாவெள்ளி | 1 | 1 | 13 | 12 | 0 | கடகத் திங்கள் | 3 | 11 | 13 | 3 | 32 |
| விருச்சிகச்செவ் | 0 | 5 | 26 | 24 | 0 | சிங்கஞாயிறு | 0 | 11 | 8 | 49 | 25 |
| தனுர்வியாழன் | 0 | 8 | 12 | 0 | 0 | மிதுன புதன் | 1 | 8 | 9 | 52 | 56 |

| மூன்றாங்கால் - ÷ 83 | | | | | | நான்காங்கால் - ÷ 86 | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மிதுன புதன் திசையாண்டு 9<br>உடல் இடபம்; உயிர் மிதுனம் | | | | | | கடகத் திங்கள் திசையாண்டு 21<br>உடல் கடகம்; உயிர் மீனம் | | | | | |
| புத்தி வாக்கியம்<br>தான மௌவோர் தொல்லை வராகி | | | | | | புத்தி வாக்கியம்<br>வீறுகூர் செவ்வேல் கைக்கொண்டோய் | | | | | |
| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி | புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
| இடப வெள்ளி | 1 | 8 | 24 | 34 | 42 | கடகத் திங்கள் | 5 | 1 | 16 | 2 | 48 |
| மேடச் செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 | சிங்க ஞாயிறு | 1 | 2 | 19 | 32 | 6 |
| மீன வியாழன் | 1 | 1 | 0 | 21 | 41 | கன்னிப் புதன் | 2 | 2 | 11 | 9 | 46 |
| கும்பச் சனி | 0 | 5 | 6 | 8 | 40 | துலாவெள்ளி | 3 | 10 | 26 | 30 | 42 |
| மகரச்சனி | 0 | 5 | 6 | 8 | 40 | விருச்சிகச் செவ் | 1 | 8 | 15 | 20 | 56 |
| தனுர் வியாழன் | 1 | 1 | 0 | 21 | 41 | தனுர்வியாழன் | 2 | 5 | 9 | 4 | 11 |
| மேடச்செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 | மகரச் சனி | 0 | 11 | 21 | 37 | 40 |
| இடபவெள்ளி | 1 | 8 | 24 | 34 | 42 | கும்பச் சனி | 0 | 11 | 21 | 37 | 40 |
| மிதுன புதன் | 0 | 11 | 21 | 19 | 32 | மீனவியாழன் | 2 | 5 | 9 | 4 | 11 |

# காலச்சக்கரத் திசா புத்திச் சக்கரங்கள்

## வலவோட்டு

## இடைநாள்

பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி ஆகிய ஐந்தனுக்கும்

| முதற்கால் - ÷ 100<br>சிங்க ஞாயிறு திசையாண்டு 5<br>புத்தி வாக்கியம்<br>தேர் என்றூரீர் புரியாடல் வெள | | | | | | இரண்டாங்கால் - ÷ 85<br>கன்னிப்புதன் திசையாண்டு 9<br>புத்தி வாக்கியம்<br>கோன்கொடை வல்லார் திக்கிர் முப்பூண் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி | புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
| விருச்சிகச் செவ் | 0 | 4 | 6 | 0 | 0 | கும்பச்சனி | 0 | 5 | 2 | 28 | 14 |
| துலா வெள்ளி | 0 | 9 | 18 | 0 | 0 | மகரச் சனி | 0 | 5 | 2 | 28 | 14 |
| கன்னிப் புதன் | 0 | 5 | 12 | 0 | 0 | தனுர் வியாழன் | 1 | 0 | 21 | 10 | 35 |
| கடகத்திங்கள் | 1 | 0 | 18 | 0 | 0 | மேடச்செவ்வாய் | 0 | 8 | 26 | 49 | 25 |
| சிங்க ஞாயிறு | 0 | 3 | 0 | 0 | 0 | இடப வெள்ளி | 1 | 8 | 9 | 52 | 56 |
| மிதுன புதன் | 0 | 5 | 12 | 0 | 0 | மிதுன புதன் | 0 | 11 | 13 | 3 | 32 |
| இடப வெள்ளி | 0 | 9 | 18 | 0 | 0 | கடகத் திங்கள் | 2 | 2 | 20 | 28 | 14 |
| மேடச்செவ் | 0 | 4 | 6 | 0 | 0 | சிங்க ஞாயிறு | 0 | 6 | 10 | 35 | 18 |
| மீன வியாழன் | 0 | 6 | 0 | 0 | 0 | கன்னிப் புதன் | 0 | 11 | 13 | 3 | 32 |

| மூன்றாங்கால் - ÷ 83<br>துலா வெள்ளித் திசையாண்டு 16<br>புத்தி வாக்கியம்<br>எம்பேரைத் தொட்டோர் வெளதே னெட்டுர் | | | | | | நான்காங்கால் - ÷ 86<br>விருச்சிகச் செவ்வாய் திசையாண்டு 7<br>புத்தி வாக்கியம்<br>நீடுதி லாபம் கௌவேர் சொல்லை | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி | புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
| துலா வெள்ளி | 3 | 1 | 0 | 21 | 41 | கடகத் திங்கள் | 1 | 8 | 15 | 20 | 56 |
| விருச்சிகச் செவ் | 1 | 4 | 5 | 46 | 59 | சிங்க ஞாயிறு | 0 | 4 | 26 | 30 | 42 |
| தனுர் வியாழன் | 1 | 11 | 3 | 58 | 33 | மிதுன புதன் | 0 | 8 | 23 | 43 | 15 |
| மகரச் சனி | 0 | 9 | 7 | 35 | 26 | இடப வெள்ளி | 1 | 3 | 18 | 50 | 14 |
| கும்பச்சனி | 0 | 9 | 7 | 35 | 26 | மேடச் செவ்வாய் | 0 | 6 | 25 | 6 | 59 |
| மீன வியாழன் | 1 | 11 | 3 | 58 | 33 | மீன வியாழன் | 0 | 9 | 23 | 1 | 24 |
| விருச்சிகச் செவ் | 1 | 4 | 5 | 46 | 59 | கும்பச் சனி | 0 | 3 | 27 | 12 | 33 |
| துலா வெள்ளி | 3 | 1 | 0 | 21 | 41 | மகரச் சனி | 0 | 3 | 27 | 12 | 33 |
| கன்னிப் புதன் | 1 | 8 | 24 | 34 | 42 | தனுர் வியாழன் | 0 | 9 | 23 | 1 | 24 |

# காலச்சக்கரத் திசா புத்திச் சக்கரங்கள்

## வலவோட்டு

## கடைநாள்

கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி ஆகிய ஐந்தனுக்கும்

முதற்கால் - ÷ 100

தனுர் வியாழன் திசையாண்டு 10

உடல் மேடம்; உயிர் தனுசு

புத்தி வாக்கியம்

அந்தாதிமீது சூட்டென் றேற்கை

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| மேடச் செவ்வாய் | 0 | 8 | 12 | 0 | 0 |
| இடப வெள்ளி | 1 | 7 | 6 | 0 | 0 |
| மிதுன புதன் | 0 | 10 | 24 | 0 | 0 |
| கடகத் திங்கள் | 2 | 1 | 6 | 0 | 0 |
| சிங்க ஞாயிறு | 0 | 6 | 0 | 0 | 0 |
| கன்னிப் புதன் | 0 | 10 | 24 | 0 | 0 |
| துலா வெள்ளி | 1 | 7 | 6 | 0 | 0 |
| விருச்சிகச் செவ் | 0 | 8 | 12 | 0 | 0 |
| தனுர் வியாழன் | 1 | 0 | 0 | 0 | 0 |

இரண்டாங்கால் - ÷ 85

மகரச் சனி திசையாண்டு 4

உடல் மகரம்; உயிர் மிதுனம்

புத்தி வாக்கியம்

பொற்போல்வெள வேய்பெற்றுர் நீடுதி

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| மகரச் சனி | 0 | 2 | 7 | 45 | 53 |
| கும்பச் சனி | 0 | 2 | 7 | 45 | 53 |
| மீன வியாழன் | 0 | 5 | 19 | 24 | 42 |
| விருச்சிகச் செவ் | 0 | 3 | 28 | 35 | 18 |
| துலா வெள்ளி | 0 | 9 | 1 | 3 | 32 |
| கன்னிப் புதன் | 0 | 5 | 2 | 28 | 14 |
| கடகத் திங்கள் | 0 | 11 | 25 | 45 | 53 |
| சிங்க ஞாயிறு | 0 | 2 | 24 | 42 | 21 |
| மிதுன புதன் | 0 | 5 | 2 | 28 | 14 |

மூன்றாங்கால் - ÷ 83

கும்பச் சனி திசையாண்டு 4

உடல் இடபம்; உயிர் மிதுனம்

புத்தி வாக்கியம்

தான மௌவோர் தொல்லை வராகி

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| இடப வெள்ளி | 0 | 9 | 7 | 35 | 25 |
| மேடச் செவ்வாய் | 0 | 4 | 1 | 26 | 45 |
| மீன வியாழன் | 0 | 5 | 23 | 29 | 38 |
| கும்பச் சனி | 0 | 2 | 9 | 23 | 52 |
| மகரச் சனி | 0 | 2 | 9 | 23 | 52 |
| தனுர் வியாழன் | 0 | 5 | 23 | 29 | 38 |
| மேடச் செவ்வாய் | 0 | 4 | 1 | 26 | 45 |
| இடப வெள்ளி | 0 | 9 | 7 | 35 | 25 |
| மிதுன புதன் | 0 | 5 | 6 | 8 | 40 |

நான்காங்கால் - ÷ 86

மீன வியாழன் திசையாண்டு 10

உடல் கடகம்; உயிர் மீனம்

புத்தி வாக்கியம்

வீறுகூர் செவ்வேல் கைக்கொண்டோய்

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| கடகத் திங்கள் | 2 | 5 | 9 | 4 | 10 |
| சிங்க ஞாயிறு | 0 | 6 | 29 | 18 | 8 |
| கன்னிப் புதன் | 1 | 0 | 16 | 44 | 39 |
| துலா வெள்ளி | 1 | 10 | 9 | 46 | 3 |
| விருச்சிகச் செவ் | 0 | 9 | 23 | 1 | 24 |
| தனுர் வியாழன் | 1 | 1 | 28 | 36 | 17 |
| மகரச் சனி | 0 | 5 | 17 | 26 | 31 |
| கும்பச் சனி | 0 | 5 | 17 | 26 | 31 |
| மீன வியாழன் | 1 | 1 | 28 | 36 | 17 |

# காலச்சக்கரத் திசா புத்திச் சக்கரங்கள்

## இடவோட்டு

### முதல்நாள்

உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் ஆகிய நான்கற்கும்

முதற்கால் - ÷ 86

விருச்சிகச் செவ்வாய்த் திசையாண்டு 7

உடல் தனுசு; உயிர் கடகம்

புத்தி வாக்கியம்

பைம்பொன்னோர் கௌ கலாயியுற்றீர்

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| தனுர் வியாழன் | 0 | 9 | 23 | 1 | 24 |
| மகரச் சனி | 0 | 3 | 27 | 12 | 33 |
| கும்பச் சனி | 0 | 3 | 27 | 12 | 33 |
| மீன வியாழன் | 0 | 9 | 23 | 1 | 24 |
| மேடச் செவ்வாய் | 0 | 6 | 25 | 6 | 59 |
| இடப வெள்ளி | 1 | 3 | 18 | 50 | 14 |
| மிதுன புதன் | 0 | 8 | 23 | 43 | 15 |
| சிங்க ஞாயிறு | 0 | 4 | 26 | 30 | 42 |
| கடகத் திங்கள் | 1 | 8 | 15 | 20 | 56 |

இரண்டாங்கால் - ÷ 83

துலா வெள்ளித் திசையாண்டு 16

உடல் கன்னி; உயிர் துலாம்

புத்தி வாக்கியம்

சூதென்றே வெவ்வோர் பொன்னைச் சேறென்

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| கன்னிப் புதன் | 1 | 8 | 24 | 34 | 42 |
| துலா வெள்ளி | 3 | 1 | 0 | 21 | 41 |
| விருச்சிகச் செவ் | 1 | 4 | 5 | 46 | 59 |
| மீன வியாழன் | 1 | 11 | 3 | 58 | 33 |
| கும்பச் சனி | 0 | 9 | 7 | 35 | 26 |
| மகரச் சனி | 0 | 9 | 7 | 35 | 26 |
| தனுர்வியாழன் | 1 | 11 | 3 | 58 | 33 |
| விருச்சிகச் செவ் | 1 | 4 | 5 | 46 | 59 |
| துலா வெள்ளி | 3 | 1 | 0 | 21 | 41 |

மூன்றாங்கால் - ÷ 85

கன்னிப் புதன் திசையாண்டு 9

உடல் கன்னி; உயிர் கும்பம்

புத்தி வாக்கியம்

கூறுநீறிலாக் கங்கை பொய்யோ

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| கன்னிப் புதன் | 0 | 11 | 13 | 3 | 32 |
| சிங்க ஞாயிறு | 0 | 6 | 10 | 35 | 18 |
| கடகத் திங்கள் | 2 | 2 | 20 | 28 | 14 |
| மிதுன புதன் | 0 | 11 | 13 | 3 | 32 |
| இடப வெள்ளி | 1 | 8 | 9 | 52 | 56 |
| மேடச் செவ்வாய் | 0 | 8 | 26 | 49 | 25 |
| தனுர் வியாழன் | 1 | 0 | 21 | 10 | 35 |
| மகரச் சனி | 0 | 5 | 2 | 28 | 14 |
| கும்பச் சனி | 0 | 5 | 2 | 28 | 14 |

நான்காங்கால் - ÷ 100

சிங்க ஞாயிறு திசையாண்டு 5

உடல் மீனம்; உயிர் விருச்சிகம்

புத்தி வாக்கியம்

வௌவலாரி புக்கீர் தூதென்றே

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| மீன வியாழன் | 0 | 6 | 0 | 0 | 0 |
| மேடச் செவ்வாய் | 0 | 4 | 6 | 0 | 0 |
| இடப வெள்ளி | 0 | 9 | 18 | 0 | 0 |
| மிதுன புதன் | 0 | 5 | 12 | 0 | 0 |
| சிங்க ஞாயிறு | 0 | 3 | 0 | 0 | 0 |
| கடகத்திங்கள் | 1 | 0 | 18 | 0 | 0 |
| கன்னிப் புதன் | 0 | 5 | 12 | 0 | 0 |
| துலா வெள்ளி | 0 | 9 | 18 | 0 | 0 |
| விருகச் செவ் | 0 | 4 | 6 | 0 | 0 |

# காலச்சக்கரத் திசா புத்திச் சக்கரங்கள்

## இடவோட்டு

## இடைநாள்

மிருகசீரிடம், பூரம், அனுடம், அவிட்டம் ஆகிய நான்கற்கும்

| முதற்கால் - ÷ 86 | | | | | | இரண்டாங்கால் - ÷ 83 | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கடகத் திங்கள் திசையாண்டு 21<br>உடல் மீனம்; உயிர் கடகம் | | | | | | மிதுன புதன் திசையாண்டு 9<br>உடல் மிதுனம்; உயிர் இடபம் | | | | | |
| புத்தி வாக்கியம்<br>வெளகோட் சொல்லையே தென்றூடுநீ | | | | | | புத்தி வாக்கியம்<br>நிலாவரை தொட்டோ வெளவற்றார் | | | | | |
| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி | புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
| மீன வியாழன் | 2 | 5 | 9 | 4 | 11 | மிதுன புதன் | 0 | 11 | 21 | 19 | 32 |
| கும்பச் சனி | 0 | 11 | 21 | 37 | 40 | இடப வெள்ளி | 1 | 8 | 24 | 34 | 42 |
| மகரச் சனி | 0 | 11 | 21 | 37 | 40 | மேடச் செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 |
| தனுர் வியாழன் | 2 | 5 | 9 | 4 | 11 | தனுர் வியாழன் | 1 | 1 | 0 | 21 | 41 |
| விருச்சிகச் செவ் | 1 | 8 | 15 | 20 | 55 | மகரச் சனி | 0 | 5 | 6 | 8 | 40 |
| துலா வெள்ளி | 3 | 11 | 26 | 30 | 42 | கும்பச் சனி | 0 | 5 | 6 | 8 | 40 |
| கன்னிப் புதன் | 2 | 2 | 11 | 9 | 46 | மீன வியாழன் | 1 | 1 | 0 | 21 | 41 |
| சிங்கச் சூரியன் | 1 | 2 | 19 | 32 | 6 | மேடச் செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 |
| கடகத் திங்கள் | 5 | 1 | 16 | 2 | 47 | இடப வெள்ளி | 1 | 8 | 24 | 34 | 42 |

| மூன்றாங்கால் - ÷ 85 | | | | | | நான்காங்கால் - ÷ 100 | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| இடப வெள்ளி திசையாண்டு 16<br>உடல் மீனம்; உயிர் மகரம் | | | | | | மேடச் செவ்வாய் திசையாண்டு 7<br>உடல் தனுசு; உயிர் மேடம் | | | | | |
| புத்தி வாக்கியம்<br>இருசீர் சூட்டெ ன்றே வெளவோர் பொன் | | | | | | புத்தி வாக்கியம்<br>வைவேல் பெற்றுர்ந்து நீதியாகும் | | | | | |
| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி | புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
| மிதுன புதன் | 1 | 8 | 9 | 52 | 56 | தனுர் வியாழன் | 0 | 8 | 12 | 0 | 0 |
| சிங்க ஞாயிறு | 0 | 11 | 8 | 49 | 25 | விருச்சிகச் செவ் | 0 | 5 | 26 | 24 | 0 |
| கடகத் திங்கள் | 3 | 11 | 13 | 3 | 32 | துலா வெள்ளி | 1 | 1 | 13 | 12 | 0 |
| கன்னிப் புதன் | 1 | 8 | 9 | 53 | 56 | கன்னிப் புதன் | 0 | 7 | 16 | 48 | 0 |
| துலா வெள்ளி | 3 | 0 | 4 | 14 | 7 | சிங்க ஞாயிறு | 0 | 4 | 6 | 0 | 0 |
| விருச்சிகச் செவ் | 1 | 3 | 24 | 21 | 11 | கடகத் திங்கள் | 1 | 5 | 19 | 12 | 0 |
| மீன வியாழன் | 1 | 10 | 17 | 38 | 49 | மிதுன புதன் | 0 | 7 | 16 | 48 | 0 |
| கும்பச் சனி | 0 | 9 | 1 | 3 | 32 | இடப வெள்ளி | 1 | 1 | 13 | 12 | 0 |
| மகரச் சனி | 0 | 9 | 1 | 3 | 32 | மேடச் செவ்வாய் | 0 | 5 | 26 | 24 | 0 |

# காலச்சக்கரத் திசா புத்திச் சக்கரங்கள்

## இடவோட்டு

## *கடைநாள்*

திருவாதிரை, உத்திரம், கேட்டை, சதயம் ஆகிய நான்கற்கும்

*முதற்கால் - ÷ 86*
*மீன வியாழ திசையாண்டு 10*
*உடல் தனுசு; உயிர் கடகம்*
புத்தி வாக்கியம்
பைம்பொன்னோர் கலாபியுற்றீர்

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| தனூர் வியாழன் | 1 | 1 | 28 | 36 | 17 |
| மகரச் சனி | 0 | 5 | 17 | 26 | 31 |
| கும்பச் சனி | 0 | 5 | 17 | 26 | 31 |
| மீன வியாழன் | 1 | 1 | 28 | 36 | 17 |
| மேடச் செவ்வாய் | 0 | 9 | 23 | 1 | 24 |
| இடப வெள்ளி | 1 | 10 | 9 | 46 | 3 |
| மிதுன புதன் | 1 | 0 | 16 | 44 | 29 |
| சிங்க ஞாயிறு | 0 | 6 | 19 | 18 | 8 |
| கடகத் திங்கள் | 2 | 5 | 9 | 4 | 10 |

*இரண்டாங்கால் - ÷ 83*
*கும்பச் சனி திசையாண்டு 4*
*உடல் கன்னி; உயிர் துலாம்*
புத்தி வாக்கியம்
சூதன்றே வெளவோர் பொன்னை சேரென்

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| கன்னிப் புதன் | 0 | 5 | 6 | 8 | 40 |
| துலா வெள்ளி | 0 | 9 | 7 | 35 | 25 |
| விருச்சிகச் செவ் | 0 | 4 | 1 | 26 | 45 |
| மீன வியாழன் | 0 | 5 | 23 | 29 | 38 |
| கும்பச் சனி | 0 | 2 | 9 | 23 | 52 |
| மகரச் சனி | 0 | 2 | 9 | 23 | 52 |
| தனூர் வியாழன் | 0 | 5 | 23 | 29 | 38 |
| விருச்சிகச் செவ் | 0 | 4 | 1 | 26 | 45 |
| துலா வெள்ளி | 0 | 9 | 7 | 35 | 25 |

*மூன்றாங்கால் - + 85*
*மகரச் சனி திசையாண்டு 4*
*உடல் கன்னி; உயிர் கும்பம்*
புத்தி வாக்கியம்
கூறுநீரிலால் கங்கைபொய்யோ

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| கன்னிப் புதன் | 0 | 5 | 2 | 28 | 14 |
| சிங்க ஞாயிறு | 0 | 2 | 24 | 42 | 21 |
| கடகத் திங்கள் | 0 | 11 | 25 | 45 | 53 |
| மிதுன புதன் | 0 | 5 | 2 | 28 | 14 |
| இடப வெள்ளி | 0 | 9 | 1 | 3 | 32 |
| மேடச் செவ்வாய் | 0 | 3 | 28 | 35 | 18 |
| தனூர் வியாழன் | 0 | 5 | 19 | 24 | 42 |
| மகரச் சனி | 0 | 2 | 7 | 45 | 52 |
| கும்பச் சனி | 0 | 2 | 7 | 45 | 52 |

*நான்காங்கால் - ÷ 100*
*தனூர் வியாழன் திசையாண்டு 10*
*உடல் மீனம்; உயிர் விருச்சிகம்*
புத்தி வாக்கியம்
வெளவலாரி புக்கீர் தூதென்றே

| புத்திகள் | ஆண்டு | திங்கள் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| மீன வியாழன் | 1 | 0 | 0 | 0 | 0 |
| மேடச் செவ்வாய் | 0 | 8 | 12 | 0 | 0 |
| இடப வெள்ளி | 1 | 7 | 6 | 0 | 0 |
| மிதுன புதன் | 0 | 10 | 24 | 0 | 0 |
| சிங்க ஞாயிறு | 0 | 6 | 0 | 0 | 0 |
| கடகத் திங்கள் | 2 | 1 | 6 | 0 | 0 |
| கன்னிப் புதன் | 0 | 10 | 24 | 0 | 0 |
| துலா வெள்ளி | 1 | 7 | 6 | 0 | 0 |
| விருச்சிகச் செவ் | 0 | 8 | 12 | 0 | 0 |